

ஸ்ரீ:





ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

# ஆழ்வார்களும் திருவேங்கடவனும்



புலவர் **ஏ. பரந்தாமன்,** பி.லிட்., எம்.ஏ., பி.எட்.



ஸ்ரீ :

ஸ்ரீ பத்மாவதி சமேத
ஸ்ரீ நிவாசப் பெருமானே நம :

திருமலை திருப்பதி தேவஸ்தான
சமய நூல்கள் வெளியீட்டுக்கான
நிதி உதவித் திட்டத்தின்கீழ்
பொருள் உதவிபெற்று

"ஆழ்வார்களும் - திருவேங்கடவனும்"

எனும் இந்நூல் வெளியிடப்படுகிறது.
**நன்றி நவிலுகின்றேன்.**

அடியேன்
முனைவர்.ஏ.பரந்தாம ராமாநுஜதாசன்

# நூல் குறிப்பு


| | | |
|---|---|---|
| பதிப்புரிமை | : | நூலாசிரியருக்கே உரியது. |
| முதல் பதிப்பு | : | 2004 |
| மொழி | : | தமிழ் |
| நூல் பொருள் | : | வைணவச் சமயம் |
| படிகள் | : | 1000 |
| நூல் அளவு | : | கிரௌன் |
| எழுத்தின் அளவு | : | 12 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 30 + 290 = 320 |
| பயன்படுத்தப்பட்ட தாள் | : | புலாப்பூர் மேப்லித்தோ |
| விலை | : | ரூ.100/- |
| நூலாசிரியர் | : | முனைவர்.ஏ. பரந்தாமன், பி.லிட்., எம்.ஏ., பி.எட்.,பி.எச்.டி., |
| நூல் அச்சிட்டோர் | : | திரு.நாதன் & கம்பெனி வேளச்சேரி, சென்னை - 42. |
| நூல் கிடைக்குமிடம் | : | முனைவர்.ஏ.பரந்தாமன் எண். 5/11, திருவள்ளுவர் தெரு, மேத்தா நகர், சேலையூர் அஞ்சல், தாம்பரம் - 600 073. தொலைபேசி : 2227 2080 |

ஸ்ரீ :
ஸ்ரீ மதே ராமானுஜாய நம:



ஸ்ரீ மத் பரம ஹம்ஸ
வானமாமலை
இராமாநுஜ ஜீயர் சுவாமி

ஸ்ரீ வானமாமலை மடம்
நாங்குனேரி - 627 108
நாள் : 12.11.2003

## "வாழ்த்துரை"

நமது அன்பிற்குரிய "வைணவமணி" புலவர் திரு.ஏ.பரந்தாம ராமாநுஜதாசர் அவர்களது அருமையான "ஆழ்வார்களும் திருவேங்கடவனும்" என்ற தலைப்பைக் கொண்ட மிக விரிவான நூல் வெளியிடப் போவதை அறிந்து நமதுள்ளம் அளவிலா உவகை கொள்கின்றது. இவ்வன்பரது இந்நூலின் அச்சுக்கு முந்தைய பிரதியைப் பெற்றுப் படித்துப்

பார்க்க இயலாவிடினும், இவரது சீரிய புலமையை நாம் நன்கு அறிவோமாதலால், இந்நூல் மிகச் சிறந்ததாகவே அமைந்து விளங்கா நிற்கும் என்பதில் ஐயமேதுமில்லை.

தமிழ்ப் புலவராயும் முதுகலை இலக்கியப் பட்டமும் இளநிலை ஆசிரியர் பயிற்சிப் பட்டமும் பெற்றவர் இவர். இத்தனைக்கும் சிகரம் வைத்தாற் போல் சீரிய வைணவக் குடிப்பிறப்பினால் சிறந்து விளங்கா நிற்பவர் இவ்வன்பர். "கல்வெட்டில் வைணவம்" என்ற தலைப்பில் ஆய்வுப் பணியை மேற்கொண்டுள்ளார். இத்துடன் திருமாலடியார் குழாத்தின் செயலாளராகவும் திகழா நின்று மிகச் சிறந்த தொண்டு புரிந்து வருகின்றார்.

வைணவச் சொற்பொழிவாற்றும் ஆற்றல் மிக்கவர். "108 திருப்பதிகள் நாமாவளி", "ஆழ்வார்களும் எம்பெருமான்களும்" "திருமாலடியார்கள்" முதலிய நூல்களை எழுதி, தமிழ் கூறும் நல்லுலகிற்கு நற்றொண்டு ஆற்றி வரும் பேரன்பர். இப்பெற்றி பெற்றிலங்கும் இவரது இந்நூல் வெளியீடும் மிக்க பயன் யாவருக்கும் பெறுவித்திடுக என நாம் மனமார்ந்து மங்களாசாசனம் செய்து மகிழ்கின்றோம்.

ஸ்ரீ கலியன் வானமாமலை
இராமாநுஜ ஜீயர்

ஸ்ரீ:
ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :

ஸ்ரீ உ.வே. ஆசூரி
வேங்காச்சாரியார்
பிரவீன்-பிரசாத்,

எண். 29/ஏ, மணவாள
மாமுனி தெரு
ஸ்ரீ பெரும்பூதூர் - 602 105
நாள் : 12 - 11 - 2003

## மங்களாசாசனம்

ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்ரீ எம்பெருமானார் திருவடி வம்சத்தில் உதித்த ஆசூரி அப்பளாச்சாரி சுவாமிகளின் திருக்குமாரரான அடியேன் திருவடி சம்பந்தம் பெற்றவர். வைணவமணி-புலவர் ஏ. பரந்தாம ராமாநுஜ தாசர், எம் வம்சத்தினரிடம் திருவடி சம்பந்தம் பெற்று இவருடைய முன்னோர்களைப் போன்றே பகவத் - பாகவதத் தொண்டுகளைச் செய்து வருகின்றார்.

குமாரவாடி ஸ்ரீ உ.வே.சே.இராமாநுஜாச்சாரியாருடன் இணைந்து, திருமால் அடியார் குழாத்தின் செயலாளராக இருந்து கொண்டு, ஆழ்வார் ஆசாரியர்களின்

திருநட்சத்திரங்களைக் கொண்டாடியும், அருளிச் செயல் வீதி வலங்களை நடத்தியும், பல மாநாடுகளை நடத்தியும் வைணவ நூல்களை எழுதி வெளியிட்டும், வைணவச் சொற்பொழிவுகளை ஆற்றியும் வருகின்றார். இவரது பகவத் - ஆசாரிய - பாகவதத் தொண்டுகளைப் பாராட்டி மகிழ்கின்றேன்.

தற்போது "ஆழ்வார்களும் திருவேங்கடவனும்" என்னும் நூலை எழுதி வெளியிட உள்ளதைக் கண்டு புளகாங்கிதம் அடைகின்றேன். இந்நூலில் ஆழ்வார்கள் திருவேங்கடவனையும் திருவேங்கடத்தையும் அனுபவித்துப் பாடிய பாசுரங்களுக்கு நயமான, விளக்கமான உரைகளை எளிய தமிழில் பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் எழுதியுள்ளார்.

எமது ஆத்ம சிஷ்யரும், உத்தம பாகவதருமான பரந்தாம ராமாநுஜ தாசரின் ஆசாரியன் என்ற முறையில் இவரது ஸ்ரீ வைஷ்ணவ - பகவத் - ஆசாரிய - பாகவதத் தொண்டுகள் நாளும் வளர்ந்து சிறக்கவும்; பல்லாண்டு பல்லாண்டு வாழவும்; ஸ்ரீ மந் நாராயணன், எம்பெருமானார், ஜீயர் சுவாமிகளின் திருவருளை வேண்டி வாழ்த்தி மகிழ்ந்து மங்களாசாசனம் செய்கிறேன்.

மங்களாசாசகன்
**ஆசூரி. வேங்கடாச்சாரி**

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :

"தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப் பண்டே பரமன் பணித்த பணிவகையே" (நம்மாழ்வார்)

வைணவச் சிம்மம் -
செந்தமிழ் வேதியர்
குமாரவாடி. ஸ்ரீ.உ.வே.சே.
இராமாநுஜாச்சாரியார்
ஆசிரியர் - திருமால்

எண். 53-20, ஆபிரகாம்
தெரு, மயிலை, சென்னை-4.
நாள் : 03-12-2003

# வாழ்த்துரை

வேதம் தமிழ் செய்த நம்மாழ்வார் மற்றுள்ள ஆழ்வார்களுக்கெல்லாம் தலைவராய்த் திகழ்ந்தவர். மற்றுள்ள தெய்வங்களுக் கெல்லாம் தலைவனாய் மிக்க இறை "நிலையில் உள்ளவன் திருமால்."திருமால் உவந்து எழுந்தருளி உறையும் திருப்பதிகள் நூற்றெட்டில் கலியுகக் கடவுளாகத் திருவேங்கடத்தில் திகழ்கின்றான் திருமால்.

பாவம் மலிந்தது இக்கலியுகம் ஆகையால் மக்கள் உய்விற்கு உரியனாய் குன்றில் இட்ட வழக்காய் பாவ நாசகனாய் விளங்கி, "வேங்கடங்கள் நம்மேல் வினை

முற்றவும்" என்று செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலாய் அருள் புரிகின்றான் திருவேங்கடவன்.

"ஆர்வார்கள் செந்தமிழை ஆதரிக்கும் வேங்கடம் என் தாழ்வான புன் சொல்லும் தாங்குமால்" என்னும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் போல் அல்லாமல் புலவர்.ஏ.பரந்தாம ராமாநுஜ தாசர் வேங்கடவனைப் பாடி மகிழ்ந்த ஆழ்வார்கள் செந்தமிழை அப்படியே முழுதுமாகத் திரட்டி, சொல்லும் பொருளும் தந்து ஒரு தனி நூலாக வழங்கியுள்ளார்.

திருமாலின், பாலே போல் சீரில் பழுத்த ஆழ்வார்கள் செந்தமிழ்ச் செல்வத்தைத் தொகுத்து அருளிச் செயல்களிலிருந்து அள்ளித் தரும் இத்தனி நூல் சொல்லும் பொருளும் சிறந்து விளங்குகின்றது. புலவரை எத்துணை பாராட்டினாலும் தகும். தொகுப்பு முறை நன்கு அமைந்துள்ளது. திருவேங்கடவன் அருள்பெற ஏழுமலை ஏறவேண்டுமென்பதில்லை. கை மேல் பலனாய் இந்நூல் விளங்குகின்றது.

புலவர்.ஏ.பரந்தாம ராமாநுஜ தாசர் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்து திருமால் நெறி நின்று பகவத் - ஆசாரிய - பாகவதத் தொண்டாற்ற வாழ்த்தி மகிழ்கின்றேன்.

திருமாலடியவன்

**சே. இராமாநுசன்**
தலைவர், திருமால் அடியார் குழாம்.

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :

ஸ்ரீ.உ.வே.கண்ணன் கபிஸ்தலம்

எண்.1, அகத்தியர்
தெரு, காந்தி நகர்,
சாலிகிராமம், சென்னை - 600 093.

நாள் : 16.11.2003

# அணிந்துரை

## ஆழ்வார்களும் திருவேங்கடவனும் :

இந்நூல் ஒரு சிறந்த நூல். உலகில் முக்கியமாக எல்லோர்க்கும் தெரியும்படியானவன் திருவேங்கடவன். அவனைக் கண்டு பயப்படுபவர்கள் பலர். ஆனால் திருவேங்கடவனோ மிகவும் எளியவன். பக்தியுடன் அவன் எழுந்தருளியுள்ள "திருவேங்கடம் அடை நெஞ்சமே" என்ற திருமங்கை ஆழ்வார் திருவாக்கிற் கிணங்க திருவேங்கட மாமலைக்குச் சென்று: "திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே" என்ற நம்மாழ்வார் அருளிச் செயலுக்கு ஏற்ப திருவேங்கடவனை வணங்கி வழிபட்டால் தீவினைகள் தீயினில் தூசாகும். எனவே மக்கள் இத்தகைய திருவேங்கடவனைச் சேவித்து ஆனந்தம் அடைகின்றனர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவேங்கடவனிடம் ஆழங்கால் பட்டவர்கள் ஆழ்வார்கள். நூலாசிரியர் சிறந்த தமிழறிஞர். கல்வித்துறையில் உயர்ந்த பணியாற்றியவர். பல இலக்கிய ஆன்மீக நூல்களை வெளியிட்டவர். இப்போது ஆழ்வார்கள் பதின்மர் திருவேங்கடவனைப் பாடிய பாசுரங்களைத் தொகுத்து, இப்பாசுரங்களின் சாரமான அர்த்தங்களையும் விளக்கி எழுதியுள்ளார். இந்நூல் அவசியம் எல்லோரிடமும் இருக்க வேண்டிய ஒன்றாகும். திருமலைக்கு நாம் செல்லும் போது இந்நூலின் மூலம் ஆழ்வார்கள் திருவேங்கடவனைப் பற்றிப் பாடிய பாசுரங்களைப் படிப்பதோடு அவற்றின் அர்த்தங்களையும் புரிந்து கொள்ளலாம். புரிந்து கொண்டு சேவிப்பதால் பேரானந்தம் அடையலாம். பொழுதும் நன்றாகப் போகும். திருவேங்கடவனது ஞாபகத்தோடு இருக்க முடியும்.

இந்நூல் ஒரு வரப்பிரசாதம். இது போல் பல நூல்களை எழுதி வெளியிட வேண்டும். பின்னானார் பயன் படுவார்கள். இவருக்கு சகல சௌபாக்கியங்களையும் அருளும்படி, நம்மாழ்வாராலே சரணாகதி செய்யப்பட்ட அகிலகில்லேன் இறையும் அலர்மேல் மங்கை மார்பனான கலிகால வள்ளலான திருவேங்கடத்தானின் திருவடிகளைப் பணிந்து, வேண்டி வாழ்த்தி மகிழ்கின்றேன்.

அடியேன்

**கண்ணன் கபிஸ்தலம் ஸ்ரீநிவாசதாசன்**

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம: ஸ்ரீ வரவர முநயே நம:

ஆழ்வார் அருட்செல்வர்
வைணவமணி, கவிமாமணி
பேராசிரியர் முனைவர் மதி ஸ்ரீநிவாசன்
எம்.ஏ., பி.டி., பி.எச்.,
தமிழ்த்துறை தலைவர் (ஓய்வு)
வைணவக் கல்லூரி, சென்னை - 106.

எ.2, எண்.4, தெள்ளிய
சிங்கப்பெருமாள் கோவில்
2-வது சந்து,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
நாள்: 14.11.2003

# அணிந்துரை

வைணவமணி ஸ்ரீமான் புலவர் ஏ. பரந்தாமன் அவர்கள் எழுதி வெளியிடுகின்ற "ஆழ்வார்களும் திருவேங்கடவனும்" என்னும் நூல் வைணவ உலகுக்கு வாய்த்துள்ள அருமையாக பேறு ஆகும். அருளிச் செயலில் ஆழங்கால் பட்டுள்ள நூலாசிரியர், செவிவழியாகவும், நேர்முகமாகவும் அறிந்த அருமையான கருத்துகள் பலவற்றை இந்நூலில் எளிய தமிழ் நடையில் விளக்கி உள்ளார். ஆழ்வார்கள். பதின்மராலும் மங்களாசாசனம் செய்யப் பெற்றுள்ள திருவேங்கடச் சிறப்பையும் திருவேங்கடமுடையான் ஏற்றத்தையும் ஆசிரியர் பன்னிரு கட்டுரைகளில் தொகுத்துத் தந்துள்ளார். தமிழ் நீர்மை ஒழுகி ஓடும் இந்நூலில் வைணவச்சம்பிரதாயம் மீறப்படாதிருப்பது பாராட்டுக்குரியது.

எளிய நடையும் திட்பமான சொல்லாக்கமும் நூலின் செம்மையைப் பொலிவுறச் செய்கின்றன. ஆசிரியர், பாசுரங்களை விளக்கு முகமாகப் பொழிப்புரைகளைத் தரும் இடங்களில் முன்னோர் அருளிய உரைநடைகளைத் தகுந்த முறையில் கையாண்டுள்ளார். பெரிய திருமொழியில் முதற்பத்து ஒன்பதாம் திருமொழியை விளக்கும் இடத்தில் பெருமாளுக்கும் ஆழ்வார்களுக்கும் இடையே உரையாடல் நிகழ்வது போல கையாண்டுள்ள நாடக உரை நல்லதொரு உத்தியாக அமைகிறது.

நூலாசிரியரின் கவிதை ஈடுபாடும் தமிழ்ச் சொல் ஆளுமையும் நூலுக்கு அழகூட்டுகின்றன. திருவேங்கட முடையானைப் பற்றிய அருளிச் செயல் கருத்துக்களின் தொகுப்பாகிய இந்நூல் வைணவ இலக்கியப் பயிற்சியில் நுழைவோர்க்கு நல்ல வழிகாட்டியாக உள்ளது. தமிழ் ஆர்வலர்களும் வைணவ அன்பர்களும் இந்நூலைப் பெற்றுப் படித்துப் பயன் பெறுவாராக.

பொலிக! பொலிக ! பொலிக!

அன்பன்
தொண்டர் தொண்டன்
**மதி ஸ்ரீநிவாசன்**

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :

"வாழி யெதிராசன் வாழி யெதிராசன்
வாழி யெதிராசன் என வாழ்த்துவார் - வாழியென
வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை" (மாமுனிகள்)

பேராசிரியர் A.V. ரங்காச்சாரி
M.A., M.Lit., Ph.d

எண்.5, மேல வீதி,
திருச்சித்ரக் கூடம்
நாள் :12.1.2004

# மங்களாசாசனம்

வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி விண் முழுதும் உய்யக் கொண்ட சக்ரவர்த்தித் திருமகன் திருவடி பணிந்து, நாளும் பகவத்-பாகவத தொண்டுகளைச் செய்து வருபவர் நம் பரந்தாம ராமாநுஜதாசர். எதிராசர் வழித்தோன்றலான ஆசூரி, வேங்கடாச்சாரியாரிடம் திருவடி சம்பந்தம் பெற்றவர்.

குமாரவடி. ஸ்ரீ.உ.வே.இராமாநுஜாச்சாரியரை ஞான ஆசாரியராகக் கொண்டு, நாளும் திருமால் நெறி பரப்பி வருபவர். திருமால் அடியார் குழாத்தின் செயலாளராக இருந்து கொண்டு, நாடும் நகரமும் நன்கறிய அருளிச் செயலைச் சிரத்தில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு ஆழ்வார்கள் அருளிச் செயளை வீதிதோறும் ஓதிக் கொண்டு ஆழ்வார், ஆசாரியர் திருநட்சத்திரங்களைக் கொண்டாடி வருகின்றனர். "தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப் பண்டே பரமன் பணித்த பணி வகையே" எனும் நம்மாழ்வாரின் திருவாய் மொழியைச் செயல்படுத்தி வருபவர். பாசுரங்கள் வழி நின்று தனக்கே உரிய பாணியில் ஸ்ரீ வைஷ்ணவச் சொற்பொழிவுகள் சாதித்து வருகின்றார்.

இப்பாகவதர் பல வைணவ நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார், என்றாலும் தற்போது எழுதி வெளியிடுகின்ற "ஆழ்வார்களும் திருவேங்கடமுடையானும்" எனும் கிரந்தம் சிகரம் வைத்தாற்போல் விளங்குகின்றது. பாசுரங்கட்கு முதலில் பொழிப்புரையைத் தந்து, பின்னர் ஒவ்வொரு அடிக்கும் சிறப்புப் பொருட்களை நம் ஆசாரியப் பெருமக்களின் உரையில் இருந்து சிறிதும் வழுவாது, முன்னோர் மொழிந்த முறை தப்பாது, எளிய தமிழ் நடையில், பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் நூலை ஆச்சாரியப் பெருமக்களின் உரையினின்று சிறிதும் வழுவாது நூலை ஆக்கியுள்ளார். ஆழ்வார்கள் திருவேங்கடத்தையும், திருவேங்கடவனையும் எவ்வாறு அனுபவித்தார்களோ அப்படி அனுபவித்து நூலில் தந்துள்ளார்.

எடுத்துக் காட்டாக ஓரிரண்டைக் கூறலாம். மின்னலைத் தூதாக விடுகின்ற போது : திருவேங்கடவன் நடை சாத்தப்பட்டிருந்தால், கதவில் சாவித்துளை வழியில் மின்னி, அவ்வொளியால் திருவேங்கடவனைக் கண்டு தூது உரை என்றுரைத்த ஆழ்வாரின் திருவுள்ளத்தைத் திறம்பட விளக்கியுள்ளது, பாராட்டுக்கு உரியது. "படுகாடு கிடக்கின்றான்" என்பதற்கான கீழ்கண்ட விளக்கமும் சிறப்புடன் அமைந்துள்ளது. வெட்டித்தள்ளப்பட்ட மரம் ஆடாது அசையாது தரையில் கிடப்பது போல் திருமால் பக்தர்களுக்காக காத்துக் கிடக்கின்றான்.

இந்நூல் ஓர் அறிய நூல். அனைத்து திருமாலடியார்களும் பெற்று படித்துப்பயன் பெற வேண்டிய ஒன்று. இவர் திருவேங்கடவன் திருவருளால் பல்லாண்டு வாழ்ந்து இன்னும் பல கிரந்தங்களை எழுதி வெளியிட வேண்டுமென்று. திருச்சித்ரக்கூட ஸ்ரீ கோவிந்தராசப் பெருமாள் திருவருளுடன் வாழ்த்தி மகிழ்கின்றேன்.

**தாசன்,எ.வி.ரங்காச்சாரி**

<u>நன்றியுரை</u>

ஓங்கி உலகளந்த உத்தமனாகிய ஸ்ரீ மந் நாராயணன் திருவருள் துணையுடன்

"ஆழ்வார்களும் - திருவேங்கடவனும்"

எனும் இந்நூலை அடியேன் வெளியிட வாழ்த்தி அருளிய ஜீயர் சுவாமிகள் ஆசார்யப் பெருந்தகையோர் நூலை வெளியிடும் ஸ்ரீ வைணவ மகா சங்கம் உறுதுணை புரிந்த நல்லோர்கள் நூலை அச்சிட்டு உதவிய அச்சகத்தார் அனைவர்க்கும்

"தலையல்லால் கைம்மாறு இல்லை"

என நன்றி நவிலுகின்றேன்

ஸ்ரீமத் பரம ஹம்ச ஸ்ரீ கலியன் ராமானுஜ ஜீயர் சுவாமிகள் வானமாமலை.

ஆசாரியப் பெருந்தகையோர் :

ஸ்ரீ.உ.வே. வேங்கடாச்சாரிய சுவாமிகள் ஸ்ரீபெரும்புதூர்.
ஸ்ரீ.உ.வே.சே.இராமானுஜாச்சாரிய சுவாமிகள் சென்னை.
ஸ்ரீ.உ.வே.திருநாராயண சுவாமிகள் திருக்குறுங்குடி
ஸ்ரீ.உ.வே.கபிஸ்தலம் ஸ்ரீநிவாசாச்சாரியார் சென்னை.
ஸ்ரீ.டாக்டர். மதி ஸ்ரீநிவாசன் சென்னை.
ஸ்ரீ.டாக்டர்.ஏ.வி. ரங்காச்சாரி சுவாமிகள் சித்ரக்கூடம்.

நூலை வெளியிட்டோர் :

ஸ்ரீ வைணவ மகா சங்கம் சென்னை.

துணை நின்றோர் :

திரு. ப. இரகுநாதன் (திருக்குமாரர்)
செல்வி . ம. பிரபாவதி (பெயர்த்தி)

அச்சகம் : திரு. நாதன் அண்டு கம்பெனி வேளச்சேரி.

அடியேன்
புலவர். ஏ. பரந்தாமன் , நரியம் பாக்கம்.

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

## முன்னுரை

உயர்வற உயர்நலமுடையவனும் மயர்வற மதிநலம் அருளுபவனும் அயர்வறும் அமரர்கள் அதிபதியுமாகிய ஸ்ரீ மந் நாராயணன் இவ்வுலகைப் படைக்க தமது உந்தியில் பிரம்மாவைத் தோற்றுவித்தான்.

**உய்ய உலகு படைக்க வேண்டி உந்தியில் தோற்றினாய்**
**நான் முகனை (பெரியாழ்வார் திருமொழி)**

நான்முகனுக்குத் துணையாக வேதங்களைத் தோற்றுவித்தான் வேத நாயகனான திருமால்.

மக்கட்குக், கை, கால், வாய், செவி, கண் போன்ற உறுப்புகளோடு கூடிய உடலையும் அதனுள் உயிரையும் வைத்து மண்ணுலகில் தோன்றும்படிச் செய்தான். மக்கட்கு, எது நன்று, எது தீது, எதைச்செய்ய வேண்டும், எதைச் செய்யக்கூடாது என்பதை உணர்த்தும் பகுத்தறிவையும், மனதை நல்வழிப் படுத்தும் அறிவையும் கொடுத்து பகவத்பாகவதத் தொண்டுகளையும் செய்து தமது திருநாடு அடைய வேண்டுமென்று விரும்பினான். அவர்கட்குத் துணையாக வேத, சாஸ்திர, புராண இதிகாசங்களையும் தோற்றுவித்தான். ஆனால் மக்களோ இவற்றை யெல்லாம் படித்துணர்ந்து அறவழியில் நடவாமல் சம்சாரமாகிய கடலிலே விழுந்து நோவுபட்டனர். இதைக் கண்டு வருந்திய திருமால் இவர்களைச் சம்சாரமாகிய கடலிலிருந்து கரையேற்ற வேண்டுமென்று திருவுள்ளம் கொண்டான்.

ஈசுவரனையும் ஈசுவரகைங்கர்யத்தையும் இழந்து,
இழந்தோம் என்ற இழவு மின்றி
சம்சாரமாகிய கடலிலே விழுந்து நோவு படுவதைக்
கண்டு இவர்களைக் கரை ஏற்ற வேண்டு மென்று

யானையைக் கொண்டே யானையைப் பிடிப்பாரைப்
போல இம்மனித சாதியாரைப் பிடிக்கத் தானே ஒன்பது
அவதாரங்களை எடுத்தான். ஆதியஞ் சோதி உருவை
அங்கு (வைகுண்டத்தில்) வைத்து இங்கு (மண்ணுலகில்)
வந்துப்பிறந்து மனிசர்க்கா படாதன பட்டான்.

இப்படி பரமபதமாகிய பரத்துவ நிலையிலிருந்து தன் நிலையைத் தாழ்த்திக் கொண்டு மீன் முதலாக கிருஷ்ணன் வரை ஒன்பது அவதாரங்களை எடுத்து, தீயவரை அழித்து நல்லவர்களைக் காத்து தர்மத்தை நிலைநாட்டினான்.

"பரித்ராணாய சாதுானாம் வினாசாய சதுஷ்க்ருதாம்
தர்ம சம்ஸ்த்தாப நார்த்தாய சம்பவாமி யுகே யுகே "
(பகவத்கீதை அத்தியாயம் 4 சுலோகம் 8)

"தேவுடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய்
அரியாய் குறளாய்
மூவுருவில் ராமனாய் கண்ணனாய் கற்கியாய்
முடிப்பான் "
(பெரியாழ்வார் திருமொழி)

இந்த அவதார நிலை பெருக்காற்று வெள்ளம் போல திருமால் எண்ணிய அளவிற்குப் பயன் தரவில்லை.

எனவே பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி நிலைகளையெல்லாம் விட்டு அர்ச்சை நிலையை அடைந்தான். அர்ச்சை நிலை கல்லினும், மண்ணிலும், உலோகங்களிலும் தமது உருவைச் செய்வித்து அதில் எழுந்தருளி மக்கட்கு அருள் புரிந்தான். இந்த அர்ச்சை நிலை எளிதாகியது. தாகம் எடுத்த ஒருவன் மடுவில் தேங்கிய நீரை தாகம் தீரும் அளவு குடித்து தாகம் தீர்த்துக் கொள்ளுவதைப்போல உருவ நிலை மக்கட்கு பக்தித் தாகத்தைத்தீர்த்தது.

**" தேங்கிய மடுக்கள் போலே அர்ச்சாவதாரம் "**

(முமுட்சுப்படி - 39 )

மக்கள் திருமாலின் உருவத்தை எப்படியெல்லாம் அமைத்து கோயில்கள் கட்டி, அங்கு எழுந்தருளச்செய்து வழிபட்டார்களோ அந்த உருவில் திருமால் தோன்றியிருந்து அருள் புரியும் பேரருளாளனாக விளங்குகின்றான்.

**" தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே "**

**(முதல் திருவந்தாதி - 44)**

அதேபோல் மக்கள் திருமாலின் ஆயிரம் பேர்களில் எப்பெயரையிட்டு அழைத்தாலும் உடன் ஓடோடி வந்து அருள் புரிந்தான்.

**" தமருகந்தது எப்பேர் மற்று அப்பேர்தானே"**

**(முதல் திருவந்தாதி - 44)**

திருமால் நமது கட்புலனுக்கு வெகு தூரத்தனாய் இருந்தாலும் அவனது திருநாமம் அருகில் வந்து ஆபத்தில் உதவக் கூடிய சிறப்பு வாய்ந்தது.

"அவன் தூரத்தனானாலும் அது கிட்டி நின்று உதவும்"

மற்றும் திருமால் கட்டிப் பொன் போன்றவன். அவன் திருநாமம் நகைப்பொன் போன்றது. இதனை ஆதிமூலமே என்ற யானைக்கு (கஜேந்திரன்) அருள் புரிந்ததாலும், உறரி என்ற பிரகலாதனனாலும், கோவிந்தா என்றழைத்த துரௌபதிக்கு அருள் புரிந்ததாலும் அறியலாம்.

இந்த அர்ச்சை நிலையிலே எழுந்தருளியுள்ள திருமாலுக்கு, நன்னீராட்டி, பூச்சூட்டி, திருவாபரணம் அணிவித்து, புதிய பட்டாடைகளை உடுத்தி திருவமுது கண்டருளச் செய்து, திருவீதி புறப்பாடு செய்து, திருவிழாக்கள் கொண்டாடி மகிழ்கின்றோம். திருமாலும் மகிழ்ந்து நமக்கு வேண்டுவன தந்து அருள் சுரக்கின்றான்.

திருமால் தானே உவந்து எழுந்தருளிய திருப்பதிகள் திருவரங்கம் முதலாக திருநாடுவரை நூற்றெட்டு ஆகும். அவற்றுள் இரண்டாவதாக விளங்குவது திருவேங்கடம் ஆகும். இத்திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவன் பற்றியும், திருவேங்கடம் பற்றியும் விரிவாகக் காண்போம். இந்த நூற்றெட்டினில் பரமபதம், திருபாற்கடல் நீங்கலாக மண்ணுலகில் உள்ள நூற்றாறு திருப்பதிகளுக்கும் சென்று அங்கு எழுந்தருளியுள்ள திருமாலைக்கண்டு வணங்குபவர் பிறவி நீங்கி திருநாடு அடைவர் என்கின்றார் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்.

பிருகுமுனிவர் கலியுகம் ஆரம்பித்தவுடன் இவ்வுலக மக்கள் மனநிலைக்கு ஏற்றாற்போல இவ்வுலகில் எழுந்தருளும்படித் திருமாலை வேண்டினார். அவரது வேண்டுதலை ஏற்று மக்கட்கு

அருள் புரிய திருமால் திருவுள்ளம்பற்றினான். ஆதி சேடனான அரவரசன் மலையாக அமர அவன் மீது நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளான்.

**திருவேங்கடத்தின் சீர்மை :** திருவேங்கடம் என்ற சொல்லை திரு+வேம்+கடம் எனப்பிரித்து, சொல்லை மாற்றியமைத்து திரு+கடம்+வேம் பொருள் கொள்ளவேண்டும்.

கடம்= பாவம் வேம் = வெந்துபோகும்.

எனவே இத்திருமலையில் செல்பவர் பாவங்கள் தீயினில் பட்ட தூசுபோல் வெந்து போகும் என்பதால் வேங்கடம் என்றும் திருமால் எழுந்தருளியுள்ளதால் திரு என்ற அடைமொழி பெற்று திருவேங்கடம் எனப் பெயர் பெற்றது.

திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருஅத்தியூர் (காஞ்சி) திருவரங்ககம் என்று சொல்பவர்க்கு சுகம் பெருகும் என்கின்றார் பெருந்தேவனார்.

**"தேனோங்கு சோலைத் திருவேங்கடமென்றும்**
**வானோங்கு சோலை மலை யென்றும் - தானோங்கு**
**தென்னரங்க மென்றும் திருஅத்தியூரென்றும்**
**சொன்னவர்க்கும் உண்டே சுகம்."**

**தொல்காப்பியமும் திருவேங்கடமும் :** தொல் காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடிய பனம்பாரனார் தமிழகத்தின் எல்லையைக் குறிப்பிடும்போது திருவேங்கடத்தை வட எல்லையாகக் குறப்பிடுகின்றார்.

**" வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்**
**தமிழ் கூறும் நல்லுலகம்"**

திருப்பதிகளும் திருவேங்கடமும் : திருமால் உவந்து எழுந்தருளிய 108 திருபபதிகளில் திருவேங்கடமும் ஒன்று என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. கோயில் (திருவரங்கம்) திருமலை (திருவேங்கடம்) பெருமாள் கோயில் (காஞ்சிபுரம்). இவற்றுள் நடு நாயகமாய் திருவேங்கடம் விளங்குகின்றது. மேலும் திருவேங்கடவன் மலர்களைப் பெரிதும் விரும்பி அணிபவன் ஆதலால் திருவேங்கடம் புஷ்ப மண்டபம் என்று சிறப்பிக்கப்படுகின்றது.

புராணங்களும் திருவேங்கடமும் : திருவேங்கடத்தைப் பற்றி பன்னிரண்டு புராணங்களிலும் சொல்லப்பட்டு இருக்கின்றது. இது ஸ்ரீ வேங்கடாசல மகாத்மியம் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் மாடலன் மறையோன் எனும் அந்தணன் கூற்றாக திருவேங்கடத்தைப் பற்றியும் திருவேங்கடவனைப் பற்றியும் பாடியுள்ளார்.

"வீங்கு நீரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கொடி யுடுத்து விளங்கு விற்பூண்டு
நன்நிற மேகம் நின்றது போலப்
பகையணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையில் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையில் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"

என்று திருவேங்கடமலையில் எழுந்தருளிய பெருமான் திருவாழியையும் திருச்சங்கையும் ஏந்தி கருமுகில் வண்ணனாகத் திகழும் திருமாலே என்பதை விளக்குகின்றார்.

புறப்பொருள் வெண்பா மாலையை இயற்றிய ஐயனாரிதனார் புலவராற்றுப் படைக்கு எடுத்துக்காட்டைக் கூறும் போது திருவேங்கடவன் திருமாலே என்று கூறியுள்ளார்.

**"வெறிகொள் அறையருவி வேங்கடத்துச் செல்லின்**
**நெறிகொள் படிவத்தோய் நீயும் - பொறிகட்கு**
**இருளீயும் ஞாலத்து இடரெல்லாம் நீங்க**
**அருள் ஈயும் ஆழியவன்."**

## வைணவ ஆசார்யர்களும் திருவேங்கடமுடையானும்

**பகவத் இராமானுசர் :** பகவத் இராமாநுசர், வேதாந்த தேசிகர், திருவரங்கத் தமுதனார் போன்ற பல ஆசாரியர்களும் திருவேங்கடவனிடம் பெரும்பக்தி கொண்டு விளங்கினர். இராமாநுசர் ஓராண்டு காலம் திருமலையிலேயே தங்கி திருவேங்கடவனைக் கண்டு வணங்கினார். திருவேங்கடவனுக்குச் சங்கு சக்கரமில்லாமல் இருந்ததால் சைவர்கள் திருவேங்கடமுடையான் முருகனே என்று வாதிட்டனர். ஆதிசேட அவதாரமான இராமாநுஜர் திருவேங்கடவனுக்குச் சங்கு சக்கரங்களை அணிவித்து சர்ச்சையை நீக்கினார். எனவே அப்பனுக்குச் சங்காழி அளித்தபிரான் வாழியே என போற்றப்பட்டார்.

**வேதாந்த தேசிகர் :** வேதாந்த தேசிகர் திருவேங்கடவனின் மணியின் அம்சமாகத் தோன்றியவர் என்று

கூறப்படுகிறது. இவர் திருவேங்கடவனைப் பாடிப் பரவியுள்ளார் தாம்பாடிய அதிகார சங்கரகத்தில் திருமலையைப் பற்றி பின்வரும் பாடலில் பாடியுள்ளார்.

" கண்ணன் அடியிணை எமக்குக் காட்டும் வெற்பு
கடுவினைய இருவினையும் கடியும் வெற்பு
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு
தெளிந்த பெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகல் இது எனப் புகழும் வெற்பு
பொன்னுலகில் போகமெலாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கட வெற்பென விளங்கும் வேத வெற்பே"

திருவரங்கத் தமுதனார் : திருவரங்கத்தமுதனாரும் தாம் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியில் இரு பாசுரங்களில் திருவேங்கடத்தைப் பற்றிப் பாடியுள்ளார்.

" நின்ற வண் கீர்த்தியும் நீள்புனலும்
திருவேங்கடப் பொற் குன்றமும்
இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்

தமிழ்ப் புலவர்கள் கண்ட திருவேங்கடம்: தமிழ்ப் புலவர்கள் பலர் திருவேங்கடத்தைப் பற்றிப் பாடியுள்ளனர் என்பது சிறப்புடைச் செய்தியாகும்.

சங்க இலக்கியங்களுள் எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான அகநானூற்றில் திருவேங்கடம் பாராட்டப்பட்டுள்ளது.

"விழவுடை விழுச்சீர் வேங்கடம் " என்றும்
"வெண்வேல் திரையன் வேங்கட நெடுவரை" என்றும்
"ஓங்கு வெள்ளருவி வேங்கடத்து உம்பர்"
என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டுகளில் திருவேங்கடம்** : திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனுக்கு வழிபாடு செய்வதற்காக நிறுவப்பட்ட பலவிதமான அறக்கட்டளைகளைப் பற்றிய ஆயிரக்கணக்கான கல்வெட்டுகள் திருமலை திருக்கோயில்களில் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றையெல்லாம் படியெடுத்து தொகுத்து திருப்பதி தேவஸ்தானம் கல்வெட்டுகள் என்ற நூலை ஏழு தொகுதிகளாக வெளியிட்டுள்ளது.

**திருவேங்கடமுடையானின் சீர்மை** : திருவேங் கடத்தைப் போல வேறொரு திவ்யத் திருப்பதி உலகில் இல்லையென்றும் , திருவேங்கடமுடையானுக்கு ஒப்பான வேறு தெய்வம் ஏதும் இல்லையென்றும் கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்குபவன் திருவேங்கடமுடையானே என்றும் தினமும் ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு வணங்குவதும் திருவேங்கடவனே என்றும் கூறப்படுவதை நாம் கண்கூடாகக் காணுகின்றோம். இன்னும் சில ஆண்டுகளில் திருமலை பூவுலக வைகுண்டமாகவே விளங்கும் என்பதில் ஐயம் ஏதுமிருக்காது.

**ஆழ்வாரும் திருவேங்கடமுடையானும்:** : நம்மாழ்வாரையே தெய்வமாகக் கருதிய மதுரகவியாழ்வாமரும், தொண்டரடிப்பொடியாழ்வாரும் தவிர மற்ற பத்து ஆழ்வார்களும் திருவேங்கடவனைப் பற்றிப் பாடி மகிழ்ந்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

மற்றும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருவேங்கடத்து மாலை, திருவேங்கடத்து அந்தாதி என்ற நூல்களையும், வீரராகவ முதலியார் திருவேங்கடக் கலம்பகத்தையும் இயற்றி திருவேங்கடவனின் சிறப்பைப்

பாடியுள்ளனர். இனி திருவேங்கடத்தையும் திருவேங்கடவனையும் சிறப்பித்துப் பாடிய ஆழ்வார்கள் பாசுரங்கள் கொண்டு

**"ஆழ்வார்களும் திருவேங்கடவனும்"** என்னும் தலைப்பில் விரிவாகக் காண்போம்.

**ஆழ்வார்கள் தோற்றம் :**

**"பொய்கையார் பூதத்தார் பேயார் - புகழ்மழிசை**
**ஐய்யன் அருள் மாறன் சேரலர்கோன்-துய்யபட்ட**
**நாதன் அன்பர்தாள் தூளி - நற்பாணன் நற்கலியன்**
**ஈதிவர் தோற்றத்து அடைவாம் இங்கு "** (உ.ர.மா.4)

1) பொய்கையாழ்வார்
2) பூதத்தாழ்வார்
3) பேயாழ்வார்
4) திருமழிசையாழ்வார்
5) நம்மாழ்வார்
6) குலசேகராழ்வார்
7) பெரியாழ்வார்
8) தொண்டரடிப் பொடியாழ்வார்
9) திருப்பாணாழ்வார்
10) திருமங்கையாழ்வார்

எனும் பதின்மருடன் மதுரகவியாழ்வாரையும், ஆண்டாளையும் சேர்த்து ஆழ்வார்கள் பன்னிருவர் என்றும் கூறப்படுகின்றது.

இவர்கள் திருமாலிடம் பக்தியில் ஆழங்கால் பட்டதாலும், வேதத்தில் ஆழ்ந்துள்ள கருத்துகளையெல்லாம் தமிழ் மொழியில் இனிய பாசுரங்களில் பாடியுள்ளதாலும் ஆழ்வார்கள் எனப்பட்டனர். கசப்பு மருந்தை இனிப்பில் கலந்து கொடுத்து உடல் நோயைப் போக்கும் மருத்துவர்களைப் போல உள்ளத்து அறியாமையாகிய நோயைப் போக்க மறைமொழிகளை இனிய இசையுடன் கூடிய பாசுரங்களாகப் பாடினர்.

பசுவின் மடியிலிருந்து பால் சுரப்பது போல ஆழ்வார்களின் திருவாயிலிருந்து பாசுரங்கள் பொழியப்பட்டன. திருவாய் மலர்ந்தவை என்றும் கூறப்படுகின்றன. பன்னிரு ஆழ்வார்களும் திருவாய் மலர்ந்து அருளிய பாசுரங்களின் தொகுதிக்கு அருளிச் செயல் அல்லது நாலாயிரத் திவ்ய பிரபந்தம் என்ற பெயர்கள் சூட்டப்பட்டன. இந்த அருளிச் செயலும் இவற்றை அருளிய ஆழ்வார்களும் வாழ வேண்டும் என்று போற்றுகின்றார் மணவாள மாமுனிகள்

**" ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி**
**தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி - ஏழ்பாரும்**
**உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி**
**செய்ய மறை தன்னுடனே சேர்ந்து "** (உ.ர.மா-3)

**"ஆழ்வார்கள் ஏற்றம் அருளிச் செயல் ஏற்றம்"**
(உ.ர.மா-34)

திருவேங்கடவனைப் பற்றி ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களின் எண்ணிக்கையைக் கீழே காண்போம்.

| வ. எ | ஆழ்வார்கள் | அருளிச் செயல் | மொத்தப் பாசுரங்கள் |
|---|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | முதல் திருவந்தாதி | 10 |
| 2. | பூதத்தாழ்வார் | இரண்டாம் திருவந்தாதி | 9 |
| 3. | பேயாழ்வார் | மூன்றாம் திருவந்தாதி | 19 |

| | | | |
|---|---|---|---|
| 4. | திருமழிசையாழ்வார் | நான்காம் திருவந்தாதி=12<br>திருச்சந்த விருத்தம் =2 | 14 |
| 5. | நம்மாழ்வார் | திருவிருத்தம்=8<br>பெரிய திருவந்தாதி =1<br>திருவாய்மொழி=35 | 44 |
| 6. | பெரியாழ்வார் | திருப்பல்லாண்டு= 1<br>பெரியாழ்வார் திருமொழி=7 | 8 |
| 7. | ஆண்டாள் | நாச்சியார் திருமொழி | 16 |
| 8. | குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி | . 11 |
| 9. | திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் | 2 |
| 10. | திருமங்கையாழ்வார் | பெரிய திருமொழி=55<br>திருக்குறுந்தாண்டகம் =1<br>திருநெடுந்தாண்டகம் =3<br>சிறிய திருமடல்=1<br>பெரிய திருமடல்=2 | 62 |
| 11. | திருவரங்கத் தமுதனார் | இராமாநுஜ நூற்றந்தாதி | 1 |
| | | மொத்தப் பாசுரங்கள் | 196 |



1. பெரியாழ்வாரும் மணிவண்ணனும்

## பெரியாழ்வார் போற்றிய மணிவண்ணன்

ஆழ்வார்கள் வரிசையில் பெரியாழ்வார் ஏழாவதாக இருந்தாலும் இவர் பாடிய திருப்பல்லாண்டு, மிகவும் சிறப்பு வாய்ந்தது. வேதத்தை ஓதும் போது முதலிலும் இறுதியிலும் ஓம் எனும் பிரணவம் ஓதுவதைப் போல அருளிச் செயலை ஓதும் போதும் முதலிலும் இறுதியிலும் திருப்பல்லாண்டை ஓத வேண்டுமென்று வைணவச் சான்றோர்கள் நியமித்துள்ளனர். எனவே முதலில் திருப்பல்லாண்டு பாசுரத்தையும் அதன் பொருளையும் கண்டு பின்னர் ஆழ்வார்கள் வரிசைக்கிரமமாய் திருவேங்கடவனைப் பாடிய பாசுரங்களையும் அதன் பொருள்களையும் காண்போம்.

**"கோதிலவாம் ஆழ்வார்கள் கூறு கலைக் கெல்லாம்**
**ஆதி திருப்பல்லாண்டு ஆனதுவும் - வேதத்துக்கு**
**ஓம் என்னுமது போல் உள்ளதுக் கெல்லாம் சுருக்காய்**
**தான் மங்கல மாதலால்"** **(உ.ர.மா-19)**

பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூரில் திருமாலின் கருடாழ்வாரின் அம்சமாகத் தோன்றியவர். ஸ்ரீ வில்லிபுத்தூர் திருப்பதியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ வடபத்ர சயனப் பெருமாளுக்கு மலர்த் தொண்டாற்றி வந்தார். அக்காலத்தில் பாண்டிய நாட்டை வல்லப தேவன் ஆண்டு வந்தான்.

பிறவாமை வேண்டின் வணங்க வேண்டிய முழு முதற் கடவுள் யாரென அறிய விரும்பினான். தனது அரச மண்டபத்தில் இதை அறிவிப்பவர்க்கு பொற்கிழி அளிக்கப்படும் என்று நாடெங்கும் முரசு அறைவித்தான்.

ஸ்ரீ வடபத்ர சாயி, விட்டு சித்தரின் கனவில் தோன்றி நீர் பாண்டிய மன்னன் சபைக்குச் சென்று, பிறவாப் பேறு அளிப்பவன் நானே என்று விளக்கி பொற் கிழியைப் பெற்று வாரும் என்றும் பணித்தார். திருமாலின் திருவருள் துணை நிற்க விஷ்ணு சித்தர் பாண்டிய மன்னன் அரசவை சென்று திருமாலே பிறவாப் பேறு அளிக்கும் முழு முதற் கடவுள் என்பதை விளக்கி பொற்கிழியைப் பெற்றார். பாண்டிய வல்லப. தேவன் விஷ்ணு சித்தரை யானை மீது அமரச் செய்து, பலவித இன்னிசைகளுடனும் மங்கள இசைகளுடனும் நகர்வலம் செய்தான்.

தான் பெற்ற மகன் சான்றோன் எனக் கேட்டு அவன் சிறப்பை நேரில் கண்டு மகிழும் தந்தையைப் போல திருமாலும் கருடாழ்வாரின் பேரில் திருமகளுடன் தோன்றி காட்சி தந்து, விஷ்ணு சித்தரைக் கண்டு மகிழ்ந்து வாழ்த்தி அருள்புரிந்தார்.

திருமகளுடன் தோன்றி காட்சி தந்த திருமாலைக் கண்டுகளித்து பேரானந்தம் அடைந்தார் விஷ்ணு சித்தர். திடீரென்று ஒருகலக்கம் உண்டாயிற்று. திருமாலுக்குக் கண்ணெச்சில் பட்டு, இரணியகசிபு, இராவணன், சிசு பாலன், கம்சன் போன்றவர்களால் ஏற்பட்ட தொல்லைகள் இப்போதும் தோன்றிவிடுமோ

என்று எண்ணி, பொங்கும் பரிவால் பல்லாண்டு பாடினார். எனவே தான் இவருக்குப் பெரியாழ்வார் என்ற பெயர் ஏற்பட்டது.

**" மங்களா சாசனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள்**
**தங்களார் வத்தளவு தானன்றி - பொங்கும்**
**பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான்**
**பெரியாழ்வார் என்னும் பெயர்"** (உ. ர.மா - 18)

இவ்வாறு விஷ்ணு சித்தராகிய பட்டர்பிரான் பெரியாழ்வார் என்னும் பெயரைப் பெற்றார். இனி பெரியாழ்வார் பாடிய பாசுரத்தைக் காண்போம். ஆழ்வார் தன்னுடைய நிலையையும் எம்பெருமானுடைய நிலையையும் மறந்து பாடுகின்றார்.

எம்பெருமானே ! தேவரீர் வாழ்க ! தேவரீர் நீடூழி வாழ்க! கம்சனால் ஏவப்பட்ட வலிமை மிகுந்த சாணூரன், முஷ்டிகன் என்ற இருமல்யுத்த வீரர்களைத் தோற்கடித்து வெற்றி பெற்ற திடமான திருத்தோள்களை உடைய, நீல ரத்னம் போன்ற ஒளியுடையவரே ! தேவரீருக்கு என்றும் மங்களம் உண்டாகட்டும். தேவரீர் பலகோடி நூறாயிரம் ஆண்டுகள் அதாவது காலதத்துவம் உள்ளவரை வாழ வேண்டும். உமது சிவந்த திருவடிகளின் மிக்க அழகிற்கு குறை வற்ற காப்பு உண்டாக வேண்டும்.

**" பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு**
**பல கோடி நூறாயிரம்**
**மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா ! உன்**
**செவ்வடி செவ்வி திருக்காப்பு"**

**ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம் !**

## முதலாழ்வார்கள்

" மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த -
பெற்றிமையோர்
என்றும் முதலாழ்வார்கள் என்றும் பேரிவர்க்கு
நின்ற துலகத்தே நிகழ்ந்து" (உ.ர.மா - 7 )

ஆழ்வார்கள் பன்னிருவருக்கும் காலத்தால் முன்னே தோன்றி, நல்ல தமிழால் அந்தாதிப் பாடல்களால் நாட்டு மக்கள் பிறவிப் பெருங்கடலிலிருந்து உய்யும் பொருட்டு முதல் பிரபந்தத்தை அருளிய பெருமையால் இவர்கட்கு முதலாழ்வார்கள் என்ற பெயர் உலகில் நிலைத்து நின்றது.

அருளிச் செயல் தோற்றம் : எம்பெருமான், தனித்தனியே திரிந்து கொண்டிருந்த இவர்களைத் திருக்கோவலூரில் ஒரு நாள் நல்ல மழை பெய்யும் போது மிருகண்டு முனிவர் ஆசிரமத்தில கூட்டினார். ஒருவர் படுக்கவும், இருவர் அமரவும் மூவர் நிற்கவும் கூடிய சிறிய இடத்தில் நின்றனர். அப்போது திருமால் நான்காமவராக மறைந்து நின்று நெருக்கினார். நெருக்குமவர் யாரென்று அறிய பொய்கையார் வையம் தகளியா என்ற விளக்கையும், பூதத்தார் அன்பே தகளியா என்ற விளக்கையும் ஏற்ற, பேயாழ்வார் திருக் கண்டேன் என்று திருமாலைக் கண்டதாகப் பாடினார்.

இதுவே முதன் முதல் ஸ்ரீ வைணவ மாநாடு ஆகும்.

# 2. பொய்கையாழ்வாரும்



# திருவேங்கடவனும்

## பொய்கையாழ்வாரும் - திருவேங்கடவனும்

பொய்கையாழ்வார் துவாபர யுகத்தில் சித்தார்த்தி வருடம், ஐப்பசித் திங்கள், திருவோண நன்னாள், அஷ்டமி திதி, செவ்வாய்க்கிழமையன்று, காஞ்சியில் திருவெஃகா என்னும் சொன்ன வண்ணம் செய்த பெருமாள் திருக்கோயிலிலுள்ள பொய்கையில் தாமரை மலரிடத்தில் , திருமாலின் திருச்சங்காழ்வான் அம்சமாக அவதரித்தார்.

" செய்ய துலா வோணத்தில் செகத் துதித்தான்
வாழியே" (வாழித் திருநாமம்)

கைதை சேர் பூம்பொழில் சூழ் கச்சி நகர் வந்துதித்த
பொய்கைப் பிரான் கவிஞர் போரேறு - வையத்து
அடியவர்கள் வாழ அருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து" (தனியன்)

பொய்கையாழ்வார் 100 பாசுரங்கள் அடங்கிய முதல் திருவந்தாதியை அருளிச் செய்தார். அவற்றுள் திருவேங்கடமுடையானைப் பற்றி 10 பாசுரங்கள் பாடியுள்ளார்.(பாசுரங்கள் 26,37,38,39,40,68,76,77,82 மற்றும் 99)

அவற்றில் ஆழ்வார் திருவேங்கடவனைப் பற்றிச் சிறப்பித்ததைக் காண்போம்

பாசுரம் -26

" எழுவார் விடைகொள்வார் ஈன்றுழாயானை
வழுவா வகை நினைந்து வைகல் - தொழுவார்
வினைச் சுடரை ஈந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச் சுடரைத் தூண்டும் மலை. "

தாங்கள் விரும்பின செல்வம் கிடைத்தவுடன் எம்பெருமானை விட்டுப் பிரிபவர்கள், இனிய திருத்துழாய் மாலையை அணிந்திருக்கும் திருமாலை ஒரு நாளும் விட்டு நீங்காதபடி துதித்துத் தொழுபவர்கள் ஆகியவருடைய தீவினைகளாகிய நெருப்பை அணைக்கும் மலை திருவேங்கட மலையாகும். மற்றும் பரமபதத்தில் வாழும் நித்யசூரிகள், திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனை வந்து தரிசிக்க வேண்டும் என்கின்ற ஆவலாகிய தீயை அவர்கள் மனத்தில் கொழுந்து விட்டு எரியச் செய்யும் மலை திருவேங்கட மலையாகும். அத்துணை சிறப்பு வாய்ந்தது திருவேங்கட மலை என்கின்றார் ஆழ்வார்.

ஒரு நெருப்பை அணைக்கும், ஒரு நெருப்பைத் தூண்டும் மலை திருவேங்கட மலையென்பது சிறப்பான கருத்தாகும்.

பாசுரம்-37

" வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் நாளும்
புகை விளக்கும் பூம் புனலும் ஏந்தி-திசை திசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே
வெண்சங்கம்

ஊதிய வாய் மாலுகந்த ஊர்"

மற்ற தெய்வங்களும், அவை தரும் மற்ற பலன்களுமாகிய வகைகளை அறுக்கும் படியான நுட்பமான கேள்வியறிவை உடையவர்களான அந்தணர்கள் தினமும் தூப தீபங்களையும் பூவுடன் கூடிய நீரையும் எடுத்துக் கொண்டு, அனைத்து திசைகளிலிருந்தும் திருவேங்கட மலைக்குச் செல்வர். அன்று பாரதப் போரில் சங்க நாதம் செய்து துரியோதனாதிகளை கதிகலங்கச் செய்த, பவளம் போன்ற செந்துவர் திருவாயினை யுடைய கண்ணன் இம்மலையில் திருவேங்கடவனாக விரும்பி எழுந்தருளியுள்ளான். அத்தகைய சிறப்பு வாய்ந்தது இத்திருவேங்கடமென்னும் திருப்பதி என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-38

" **ஊரும் வரியரவம் ஒண்குறவர் மால்யானை**
**பேர எறிந்த பெருமணியை-காருடைய**
**மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்**
**எம்மென்னும் மாலதிடம்"**

பரமபதத்தில் இருக்கும் நித்யசூரிகளுக்குத் தலைவனான திருமால் திருவேங்கடத்தில் மனமுவந்து எழுந்தருளி நித்ய வாசம் பண்ணுகின்றான்.

திருவேங்கடமலை வாழ் குறவர்கள் பரண்மேல் இருந்து தங்கள் தினைப்புனத்தைக் காப்பார். தங்கள் புனத்தினில் தினைக் கதிர்களை உண்ண வரும் யானைகள் மீது, தங்களிடமுள்ள பெரிய மாணிக்கக்கற்களைக் எறிந்து துரத்துவர். அங்கு அப்பொழுது திரியும் நாகங்கள் யானைகளை

மேகங்களாகவும், மாணிக்கக் கல்லை மின்னலாகவும் நினைத்து, அதைத் தொடர்ந்து இடி முழுங்கு முன்னமே புற்றுக்குள் சென்று விடும். இத்தகைய சிறப்பு வாய்ந்த திருமலையை விரும்பி வந்து எம்பெருமானைத் தரிசிப்பர்.

எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே என்ற குலசேகராழ்வார் விருப்பத்தைப் போல மகான்களும் இம்மலையில் பாம்பாகவும், குறவர்களாகவும் யானைகளாகவும் புற்றாகவும் பிறந்திருப்பார்கள். ஆகையினால் அப்பொருள்களையும் எம்பெருமானைப் போலவே கருத வேண்டுமென்கின்றார் ஆழ்வார்.

**பாசுரம்-39**

**" இடந்தது பூமி யெடுத்தது குன்றம்**
**கடந்தது கஞ்சனை முன்னஞ்ச-கிடந்ததுவும்**
**நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே**
**பேரோத வண்ணர் பெரிது. "**

பெரிய கடலின் நீல நிறமுடைய திருமால், முன்பு மகாபிரளய காலத்தில் அண்டத்தில் ஒட்டிக் கொண்டிருந்த பூமியை, வராக மூர்த்தியாய் அவதரித்து தன் கொம்பினால் மேலே எடுத்து வந்தான். இந்திரனுக்குச் செய்து வந்த வழிபாட்டை ஒழித்து கோவர்த்தன மலைக்குச் செய்வித்தான் கண்ணன். இதை யறிந்த இந்திரன் கோபித்து ஏழ நாட்க்ள விடாது பெருமழையைப் பெய்வித்தான். இதைக் கண்ட கண்ணன் கோவர்த்தன் மலையைக் குடையாகப் பிடித்து, ஆயர்களையும், ஆக்களையும்

காத்தருளினான். சாது ஜனங்களை நலியச் செய்து வந்த கம்சனைக் கொன்றான் கண்ணன். அவதாரங்களுக்கு உறுதுணையாக திருப்பாற்கடலிலே அறிதுயில் கொண்டான். வானோர்க்கும் மண்ணோர்க்கும் நிதியாகத் திருவேங்கட மலையிலே தன் பெருமையெல்லாம் பொலிய நின்றருள்கின்றான். இப்படி ஓயாமல் அன்பர்களுக்கு உதவுவதையே பொழுது போக்காகக் கொண்டிருக்கும் திருமாலின் நீர்மையை எடுத்தியம்ப முடியாது என்கின்றார் ஆழ்வார்.

திருமால் பூமியை எடுத்து வந்த அழகும் கோவர்த்தன மலையைத் தூக்கி நின்ற அழகும், கம்சனைக் கொன்று வெற்றி பெற்ற அழகும், திருப்பாற்கடலிலே துயின்ற அழகும் திருவேங்கட மலையில் நிற்கின்ற அழகும் கண்டு களிக்கத் தக்கனவாகும்.

பாசுரம்-40

" பெருவில் பகழிக் குறவர் கைச்செந்தீ
வெருவிப் புனந்துறந்த வேழம்- இருவிசும்பில்
மீன் வீழக் கண்டஞ்சும் வேங்கடமே மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று"

திருவேங்கடமலையில் வாழும் குறவர்கள் பயிர் செய்த தினைப் பயிரை மேய இரவிலே வரும் யானைகளை விரட்ட, அம்பு தொடுத்த வில்லை ஒரு கையிலும் , கொளுத்திய தீவெட்டிகளை மற்றொரு கையிலும் பிடித்துக் கொண்டு செல்வர். அம்பு கோத்த வில்லையும் தீப்பந்தத்தையும் கண்ட ஆண் யானை

அஞ்சி ஓடியது. அதே நேரத்தில் வானிலிருந்து விண்மீன் ஒன்று, கீழே விழ , அதைக் குறவர்கள் எறிந்த தீப்பந்தம் என்று எண்ணி செய்வதறியாது திகைத்து நின்கின்ற அதிசயம் மிகுந்த மலை, திருவேங்கடமலை.

திருமாலடியவர்க்கு விரோதியான இரணியனைக் கொன்று உத்தமமான பக்தனான பிரகலாதனைக் காத்தருளிய நரசிங்கப் பெருமான் இன்று திருவேங்கட மலையில திருவேங்கடவனாக நின்ற திருக்கோலத்தில் அடியவர்க்குக் காட்சி கொடுத்து அருள் புரிந்து வருகின்றான்.

**பாசுரம் - 68**

**" உணர்வார் யார்? உன்பெருமை ஊழிதோறாழி**
**உணர்வார் யார்? உன்னுருவந்தன்னை -உணர்வார்யார்**
**விண்ணகத்தாய் மண்ணகத்தாய் வேங்கடத்தாய் நால்வேதப்**
**பண்ணகத்தாய் நீ கிடந்த பால்"**

வைகுந்தத்திலே எழுந்தருளியிருக்கும் பரமபத நாதனே ! இம்மண்ணுலகில் திருவவதாரம் செய்பவனே! திருவேங்கடமலையில் திருவேங்கடவனாக நின்று அருளுபவனே ! இசை வடிவாக உள்ள இருக்கு, யஜுர், சாம, அதர்வண வேதங்களாக உள்ள வேத நாயகனே ! காலம் உள்ள வரையிலும் ஆராய்ந்தாலும் உன் பெருமையையும் திருவுருவையும் அறியக் கூடியவர்கள் யாவர் உள்ளார்? யாவரும் இல்லை. நீர் அறிதுயில் கொள்ளும் திருப்பாற்கடலையும் அறியவல்லவரும் யாருமில்லை என்கின்றார் ஆழ்வார்.

மற்றும் திருமாலைத் தொழுபவர் நற்கதியடைவதைப் போல அவன் நின்றருளுகின்ற திருவேங்கட மலையும் தன்னை வந்தடைபவர்களின் தீவினையைப் போக்கி நற்கதியடைவிக்கும் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-76

**" வழிநின்று நின்னைத் தொழுவார் வழுவா**
**மொழி நின்ற மூர்த்தியரே யாவர்-பழுதொன்றும்**
**வாராத வண்ணமே விண்கொடுக்கும் -மண்ணளந்த**
**சீரான் திருவேங் கடம்"**

எம்பெருமானோடு தொடர்புடைய திருமலை, தன்னை வந்தடைந்தவர்களுக்குத் தானே நற்கதியைத் தரும் வல்லமை பெற்றது. அப்படியிருக்க, எம்பெருமானாகிய திருமாலைத் தொழுபவர்கள் நற்கதி பெறுவார்கள் என்பதை நாம் எடுத்துச் சொல்லத் தேவையில்லை. உறுதியாகக் கிடைக்கும்.

மண்ணளந்த *சீராளனான* வாமனனுடைய திருவேங்கடமே பழுது ஒன்றும் வராதபடி வைகுந்தம் கொடுக்கும். அப்படியிருக்க திருமாலே! பக்தி மார்க்கத்திலே நிலைத்து நின்று உன்னை வணங்குபவர்கள் வழுவா மூர்த்தியாவர்கள் என்பதை சிறப்பித்துச் சொல்ல வேண்டியதில்லை.

பாசுரம்-77

" வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் நான்
கிடத்தும்
நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாம் இடர். "

திருமால் திருவேங்கடமலையில் நின்றருளுகின்றான் என்றும், காஞ்சியிலுள்ள பரமேசுவரவிண்ணகரத்தில் அமர்ந்த நிலையில் எழுந்தருளியுள்ளான் என்றும், காஞ்சி திருவெஃகா என்னும் சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயிலில் படுத்திருக்கின்றான் என்றும் எப்பொழுதும் பூத்திருக்கும் மலர்களையுடைய நீர் நிலைகளைக் கெண்ட திருக்கோவலூரில் நடந்த வண்ணமாக திருவிக்கிரமனாக உள்ளான் என்றும் தினமும் அவன் புகழ் பாடினால் அடியார்கள் நின்றும் , அமர்ந்தும், படுத்தும், நடந்தும் செய்த தீவினைகள் எல்லாம் நம்மைவிட்டுத் தானே விலகும் என்றும் துயரமெல்லாம் தீரும் என்றும் கூறுகின்றார் ஆழ்வார். இதனால் திருமால் திருப்பதிகளின் பெயரைச் சொல்வதால் ஏற்படும் பலன் கூறப்படுகிறது.

பாசுரம்-82

" படையாரும் வாள்கண்ணார் பாரசிநாள் பைம்பூம்
தொடையலோடு ஏந்திய தூபம் - இடையிடையில்
மீன்மாய மாசூணும் வேங்கடமே மேலொரு நாள்
மான் மாய எய்தான் வரை"

வேல் போன்று ஒளி பொருந்திய கண்களையுடைய அறிவொன்றும் இல்லாத பெண்களுங் கூட ஏகாதசி மறு நாள் துவாதசியன்று வாடாத மலர்களைக் கொண்டு தொடுத்த மாலைகளைத் திருவேங்கட முடையானுக்கு அணிவித்து, காட்டும் தீபங்களின் நறும் புகை ஆகாயத்தில் உள்ள விண்மீன்கள் மறையும் படி மிகுந்திருக்கும மலை திருவேங்கட மலை.

அன்று இராமாவதார காலத்தில் மாயமானாக வந்த மாரீசன் இறந்துபடும் படி அம்பு எய்திய இராமபிரான் இன்று திருவேங்கடவனாக எழுந்தருளியிருக்கும் மலை திருவேங்கட மலையாகும்.

இப்பாசுரத்தால் பெண்ணாகப் பிறந்தாரும் சுலபமாகத் திருவேங்கட மலைக்குச் சென்று திருவேங்கடவனைக் கண்டு, வணங்கி, அவனருள் பெறலாம் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-99

**" உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமன் என்றும்**
**உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து -**
**உளன்கண்டாய்**
**வெள்ளத்தில் உள்ளானும் வேங்கடத்து மேயானும்**
**உள்ளத்தின் உள்ளான் என்று ஓர்"**

ஆழ்வார் தமது உள்ளத்தை நோக்கிக் கூறுகின்றார் நல்ல நெஞ்சமே ! உலக அனைத்து உயிர்களையும் காத்து அருளும் புருடோத்தமனாகிய திருமால், ஞானிகளின் உள்ளத்தில் வந்து

குடிபுகுவதற்காகவே திருப்பாற்கடல், திருவேங்கடம் முதலிய திருப்பதிகளில் எழுந்தருளியுள்ளான். இப்போது நம்மைக் காக்க உள்ளத்திலே வந்து நித்தம் குடியிருக்கின்றான் என்பதை உணர்ந்து கொள்வாயாக என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : நெஞ்சைத் தனிப்பட்ட ஒரு பொருளாகக் கருதி உள்ளத்திற்கும் ஒரு உள்ளம் இருப்பதாகக் கருதி அந்த உள்ளத்தை விளித்துக் கூறுகின்றார்.

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



# 3. பூதத்தாழ்வாரும்



திருவேங்கடவனும்

# பூதத்தாழ்வாரும் திருவேங்கடவனும்

**பூதத்தாழ்வார் தோற்றம் : இவர் துவாபர யுகத்தில் சித்தார்த்தி வருடம ஐப்பசித் திங்கள் அவிட்ட நன்னாள், திருக்கடன் மல்லையில் நீலோத் பல மலரிடை திருமாலின் கௌமோதகீ என்னும் கதையின் அம்சமாக அவதரித்தார்.**

**" ஐப்பசியில் அவிட்டத்தில் அவதரித்தான் வாழியே! "**
**(வாழித் திருநாமம்)**

நமது பிறவித் துயர் தீர , குளிர்ச்சி பொருந்திய முத்துக்கள் தோன்றும் திருக்கடன் மல்லையில் அவதரித்தவரும் அன்பே தகளி என்று தொடங்கும் இரண்டாம் திருவந்தாதியைப் பாடியவருமாகிய பூதத்தாழ்வார் திருவடிகளைப் போற்றுகின்றேன்.

**" என் பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா**
**அன்பே தகளி அளித்தானை - நன்புகழ்சேர்**
**சீதத்தார் முத்துக்கள் சேரும் -கடல்மல்லைப்**
**பூதத்தார் பொன்னங் கழல்"** **(தனியன்)**

பூதத்தாழ்வார் 100 பாசுரங்கள் அடங்கிய இரண்டாம் திருவந்தாதியை அருளிச் செய்தார். அவற்றுள் திருவேங்கடமுடையானைப் பற்றி ஒன்பது பாசுரங்களைப் பாடியிள்ளார். (பாசுரங்கள் 25,28, 33, 45,46,53,54,72,மற்றும் 75)

பாசுரம்-25

**" சென்றது இலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்**
**கொன்றது இராவணனைக் கூறுங்கால் -நின்றதுவும்**
**வேயோங்கு தண்சாரல் வேங்கடமே - விண்ணவர்தம்**
**வாயோங்கு தொல் புகழான் வந்து"**

நல்லோரைக் காக்க தீயோர்களை அழித்து தர்மத்தை நிலைநாட்ட யுகங்கள் தோறும் அவதரித்தான் திருமால். இராமனாக அவதரித்து, தனது பத்னியாகிய சீதையை எடுத்துச் சென்ற இராவணன் மீது மிகுந்த கோபங்கொண்டு, இலங்கை மீது படையெடுத்துச் சென்று அவனையும் அவன் வம்சத்தையும் இலங்கையையும் அழித்து சீதையை மீட்டான். இராமனது புகழைத் தேவர்கள் மகிழ்ந்து பாடினர். அத்தகையவன் கலியுகத்தில் பக்தர்கள் கண்டு வணங்கி அருள்பெற எளியவனாய் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளான்.

பாசுரம்-28

**" மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான் மற்றும்**
**நினைப்பரிய நீளரங்கத்து உள்ளான் - எனைப் பலரும்**
**தேவாதி தேவன் எனப் படுவான் - முன்னொரு நாள்**
**மாவாய் பிளந்த மகன்"**

கணக்கில்லாத பக்தர்களுக்கும் தேவர்களுக்கும் எல்லாம் தலைவன் பரமபத நாதன் என்றும், திருப்பாற் கடலிலே பள்ளி கொண்டிருப்பவன் என்றும், கிருஷ்ணாவதார காலத்தில் கம்சனால் ஏவப்பட்டு குதிரை உருவம்கொண்டுவந்த கேசியின் வாயைப்பிளந்து கொன்றவன் என்றும் சொல்லப்படுபவன் திருமாலே.

அத்திருமாலே திருவரங்கத்தில் திருவரங்க நாதனாகவும், திருமலையில் திருவேங்கடவனாகவும் எழுந்தருளியுள்ளவன். இன்று திருமால் என் உள்ளத்தில் கோயில் கொண்டுள்ளான் என்றும் கூறுகின்றார் ஆழ்வார்.

" மார்பமென்பதோர் கோயில் அமைத்து அதில் மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி ஆர்வமென்பதோர் பூவிட வல்லார்க்கு அரவ தண்டத்தில் உய்யலுமாமே" எனும் பெரியாழ்வார் பாசுரம் இங்கு நோக்கத்தக்கதாகும்.

பாசுரம்-33

**"துணிந்தது சிந்தை துழாயலங்கல் அங்கம்**
**அணிந்தவன் பேர்உள்ளத்துப் பலகால்-பணிந்ததுவும்**
**வேய்பிறங்கு சாரல் விறல் வேங் கடவனையே**
**வாய்திறங்கள் சொல்லும் வகை "**

என் உள்ளமானது திருத்துழாய் மாலையை அணிந்துள்ள திருமாலுடைய திருநாமங்களைப் பலமுறை சொல்வதில் உறுதி கொண்டுள்ளது. எனது உடலும் எப்பொழுதும் திருமாலை வணங்கி நிற்கின்றது. எனது வாயும், மூங்கில் மிகுந்திருக்கும் பள்ளத் தாக்குகளையுடைய திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் மிடுக்குடைய திருவேங்கடவனது சீரிய குணங்களையே எப்போழுதும் சொல்லிக் கொண்டு இருக்கிறது. இவ்வாறு எனது மனமும் , மொழியும், செயலும், திருமாலிடமே ஈடுபட்டுள்ளன. எனவே யான் பெற்ற பேறு தான் என்னே ! இதைவிட எனக்கு வேறு வேண்டுமோ என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-45

" உளதென்றிறுமாவார் உண்டில்லை யென்று
தளர்தல் அதன் அருகும் சாரார் - அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று. "

அளவிட முடியாத இருக்கு, யசுர், சாம, அதர்வண வேதங்களும் திருமாலே முழுமுதற்கடவுள் என்று கூறுகின்றன. வேதமாகவும் வேதத்தின் சுவைப்பயனாகவும் விளங்கும் திருமால் திருமலையிலே திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். பரமபதத்திலுள்ள நித்ய சூரிகள் பணியும் திருமாலின் திருவடிகளைப் பற்றி நிற்கும் அடியவர்கள் தனக்குச் செல்வமுள்ளதென்று செருக்கடைய மாட்டார்கள். இருந்த செல்வம் அழிந்து போனாலும் சிறிதும் தளர்ச்சியடைய மாட்டார்கள் திருமால் அடியார்கள் என்கின்றார்.

கீழ்க்காணும் பக்திப் பாடல் இங்கு நோக்கத் தக்கது.

" போனாலுமே போகட்டும் பொய்யான செல்வம்
போனாலுமே போகட்டும்".
"ஆனாலும் அச்செல்வம் அடைந்த நாள் முதலாய்
தானம் ஏதாவது செய்தோமா? "
" திருமந்திரம் எட்டெழுத்தை தியானமாவது செய்து
தீவினையை ப் போக்கிக் கொண்டோமா"
"இல்லையேயாகில் திருவினையை ஆக்கிக்
கொண்டோமா ? "

இதனால் திருமாலடியவர்கள் நிலையற்ற பொருட் செல்வத்தை விரும்பாது நிலையான திருமாலின் திருவருளையே விரும்புவர் என்பதைக் கூறுகின்றார் ஆழ்வார்.

பாசுரம்-46

" பயின்றது அரங்கம் திருக்கோட்டி பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே பன்னாள் - பயின்றது
அணிதிகழும் சோலை அணி நீர்மலையே
மணிதிகழும் வண்தடக்கை மால்"

நீல மணி போல் விளங்குபவனும் வலிமை பொருந்திய நீண்ட திருக்கைகளையுடையவனும், திருமகள் கேள்வனும் ஆகியவன் திருமால். திருமாலடியவர்கள் இலாப-இழப்புகளில் விருப்பும் வெறுப்பும் அற்றவர்கள். திருமாலடியார்களுக்குக் காட்சி கொடுத்து அருள்புரிவதற்காகவே 108 திருப்பதிகளில் எழுந்தருளி, குடிசை போட்டுக் கொண்டு பயிர்களைக் காக்கும் உழவர்களைப் போல காத்துக் கிடக்கின்றான். இத்திருப்பதிகளுள் பூலோக வைகுந்தம் என்றும் பெரிய கோயில் என்றும் கூறப்படும் திருவரங்கமும், இராமாநுசர் திருமந்திரப் பொருளை ஆசையுடையோர்கெல்லாம் வாரி வழங்கிய திருக் கோட்டியூரும், பக்தர்களின் தீவினைகளை தீயில் பட்ட பஞ்சு போல் எரிக்கும் திருவேங்கடமும், நின்ற கோலத்தில் நீர்வண்ணனும் இருந்த கோலத்தில் நரசிம்மனும் கிடந்த கோலத்தில் திருவரங்கனும் நடந்த கோலத்தில உலகளந்தவனும் எழுந்தருளியுள்ள சிறப்புடைய திருநீர்மலையும் சிறப்பு வாய்ந்தவைகளாகும் என்கின்றார் ஆழ்வார்.

இப்பாசுரத்தில் அர்ச்சை நிலையின் சிறப்பினைக் கூறுகின்றார் ஆழ்வார்.

பாசுரம்-53

" நெறியால் குழற்கற்றை முன்னின்று பின் தாழ்ந்து
அறியாது இளங்கிரி என்றெண்ணிப் - பிறியாது
பூங்கொடிக்கள் வைகும் பொருபுனல் குன்றென்னும்
வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு"

திருமலையிலே திருமாலடியவர்கள் ஏறிச் செல்லும் வழியாகக் கிடக்க வேண்டுமென்று விரும்பினார் குலசேகராழ்வார்.

" வெறியார் தண்சோலைத் திருவேங்கட மலைமேல்.
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையெனாவேனே ? "
(பெருமாள் திருமொழி -48)

அதைப் போல அடியவர்கள் மலையேறிச் செல்லும் வழியிலே வாழ விரும்பியவர்கள் திருமாலை நினைத்து பலகாலம் தவம் இருப்பர். எனவே தலைமுடிக்கற்றை தலையின் முன்னும் பின்னும் சரிந்து கிடக்க இவர்களை மனிதர்கள் என்று அறியாமல் சிறிய மலையென்று எண்ணிய புதர்ச்செடிகள் அவர்கள் மேல் படர்ந்தனவாம்.

முன்பு வால்மீகி முனிவர் மீது புற்று வளர்ந்ததைப் போல இந்த திருமாலடியவர்கள் மேலும் பூங்கொடிகள் படர்ந்தது மிகவும் ஆச்சரியப்படும்படி காட்சியளித்தனவாம்.

மலை மேலே இருந்து விழும் தேன் கலந்த நீரையுடைய அருவிகளைக் கொண்ட திருவேங்கடமலை நாம் விரும்பத் தக்கதாக உள்ளதென்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-54

" வெற்பென்றிருஞ் சோலை வேங்கடம்
என்றிவ்விரண்டும்
நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல் - நிற்பென்று
உளங்கோயில் உள்ளம் வைத்து உள்ளினேன்
வெள்ளத்து
இளங்கோயில் கைவிடேல் என்று"

மண்மகளின் இரு மார்பகங்கள் போல் விளங்குவன, தென் திருமாலிருஞ்சோலை மலையும் வடவேங்கடமலையுமாகும். இவ்விரு மலைகளிலும் நீர் விரும்பி வாழ்வதைப் போல, என் உள்ளத்திலும் விரும்பி வாழ்கின்றீரே என்று திருமாலிடம் கூறுகின்றார் ஆழ்வார்.

ஆகா ! என்னே உமது கருணையும் பாசமும். யான் பெற்ற பேறு பெரும் பேறு. அடியேன் உள்ளத்தில் நீ வாழ்வதற்காக திருப்பாற்கடலாகிய இளங்கோயிலைக் கைவிட வேண்டாம். அங்கும், என் உள்ளத்திலும் ஒருசேர குடியிருக்க வேண்டு மென்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-72

" போதறிந்து வானரங்கள் பூஞ்சுனை புக்கு
ஆங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும் போது உள்ளம்- போது
மணி வேங் கடவன் மலரடிக்கே செல்ல
அணிவேங் கடவன் பேராய்ந்து"

முனிவர்களும் யோகிகளும் இறை வழிபாட்டிற்குரிய வைகறையிலே துயிலெழுந்து நீராடி திருமாலைச் சென்று வணங்கி வழிபடுவதைப் போல திருவேங்கடமலையில் வாழும் பகுத்தறிவு இல்லாத குரங்குகளும் கூட அந்தச் சிற்றஞ் சிறு காலையிலே துயிலெந்து, மலர்கள் பூத்துள்ள சுனைகளிலே சென்று நீராடி, அங்குள்ள நறுமணம் மிக்க மலர்களைப் பறித்துக் கொண்டு சென்று திருவேங்கட முடையான் திருவடிகளில் இட்டு, வணங்கித் துதித்து நின்றன. ஆகையால் பகுத்தறிவு பெற்ற என் உள்ளமே ! நீயும் சிற்றஞ்சிறு காலே துயிலெழுந்து சுனை நீராடி, மணமிக்க மலர்களைப் பறித்துக் கொண்டு சென்று திருவேங்கடமுடையானுக்குச் சூட்டி, அவனது திருக்குணங்களைப் பாடியும், திருப் பெயர்களைச் சொல்லியும் வணங்கி வழிபடுவாயாக ! இதுவே மக்களாய்ப் பிறந்த நீ செய்ய வேண்டுவன என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-75

" பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருகண் இளமூங்கில் வாங்கி- அருகிருந்த
தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்
வான் கலந்த வண்ணனன் வரை"

திருவேங்கட மலையில் வாழ்ந்த பிடி யொன்று தன் அழகைக் கொண்டு களிறு ஒன்றை வயப்படுத்தி அத்துடன் வாழ்ந்து வந்தது. பிடி கருவுற்றிருந்த போது தனக்கு மூங்கில் முளை வேண்டுமென்று தன் விருப்பத்தைத் தெரிவித்தது.

திருவேங்கட மலையில் வளர்வதால் இருகண்களையுடைய இளைய மூங்கில் முளைகள் கூட உயர்ந்து வளர்ந்திருந்தன. இவை தன் பிடியின் நெஞ்சை அறுத்து துன்புறுத்தும் என்று நினைத்து நீண்ட நேரம் தேடி இறுதியில் சிறிய இருகண் முங்கில் முளையைக் கண்டு எடுத்து வந்தது. அப்போதும் களிறுக்கு அச்சம். எனவே அருகிலிருந்த தேனடையில் மூங்கில் முளையைத் தோய்த்து தன் பிடிக்குக் கொடுத்தது. தாமதித்து வந்ததால் கோபம் கொண்ட பிடி வாங்கியுண்ண மறுத்தது. இறுதியாக வேங்கடவன் மீது ஆணையிட்டு பிடியைச் சமாதானப் படுத்தி ஊட்டியது. இத்துணை சிறப்பு வாய்ந்தது திருவேங்கடமலை என்கின்றார் ஆழ்வார்.

இப்பாடலால் அறியப்படும் உள்ளுறை உவமங்கள்

1. எவ்வாறு களிறானது பிடியின் விருப்பத்தை நிறைவேற்றி மகிழ்ந்ததோ அதே போல் திருமாலும், அடியார்களின் குற்றங்களைக் காணாமல் நற்செயல்களைக் கண்டு அருள்புரிய வேண்டும் என்ற திருமகளின் ஆவலைப் பூர்த்தி செய்கின்றான்.

2. இராமாநுசரும் தனது சீடர்களின் விருப்பத்திற்கிணங்க " ஸ்ரீ மந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே .

ஸ்ரீ மதே நாராயண நம: எனும் இரு பிரிவுகளைக் கொண்ட த்வய மந்திரத்தை, தேன் போன்று இனிக்கும் பிரதான மந்திரமாகிய "ஓம் நமோ நாராயணாய" எனும் திருமந்திரத்தில் தோய்த்து ஊட்டினார்.

இத்தகு சிறப்பு வாய்ந்த பூதத்தாரின் அருளிச் செயலுக்கு ஈடு இணை இல்லை எனலாம்.

பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.



# 4. பேயாழ்வாரும்



திருவேங்கடவனும்

## பேயாழ்வாரும் திருவேங்கடவனும்

பேயாழ்வார் துவாபர யுகத்தில் சித்தார்த்தி வருடம் ஐப்பசித் திங்கள் சதய நன்னாள் சென்னை திருமயிலையில் ஓர் கிணற்றில் செவ்வல்லி மலரில் திருமாலின் நந்தக மென்னும் வாளின் அம்சமாக அவதரித்தார்.

திருமாலின் திருவடித் தாமரைகளில் பெருங்காதலால் ஏற்பட்ட சிறந்த மயக்கத்தால் பேய் போலத் திரிந்தமையால் பேயாழ்வார் எனும் சிறப்புப் பெயரைப் பெற்றார்.

**" சிறந்த ஐப்பசியில் சதயம் செனித்தவள்ளல் வாழியே"**

**(வாழித் திருநாமம்)**

**" சீராரும் மாடத் திருக் கோவலூர் அதனுள்**
**காரார் கருமுகிலைக் காணப்புக்கு - ஓராத்**
**திருக்கண்டேன் என்றுரைத்த சீரான் கழலே**
**உரைக் கண்டாய் நெஞ்சே உகந்து. "** **(தனியன்)**

பேயாழ்வார் 100 பாசுரங்கள் அடங்கிய மூன்றாந் திருவந்தாதியை அருளிச் செய்துள்ளார். அவற்றுள் திருவேங்கடத்தைப் பற்றி 19 பாசுரங்கள் பாடியுள்ளார். (பாசுரங்கள் 14,26,30,32,39,40,45,58,61,62,63,68,69,70,71,72, 73,75,89)

பேயாழ்வார் திருவேங்கடவனைப் பற்றி அருளிய பாசரங்களின் கருத்தைக் காண்போம்.

பாசுரம்-14

"மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு
நூற்பால் மனம்வைக்க நொய் விதாம் - நாற் பால
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர்
முடிதோயும்
பாதத்தான் பாதம் பணிந்து "

இருக்கு, யசுர், சாம, அதர்வணமாகிய நான்கு வேதங்களாலே எடுத்து ஓதப்படுபவனும் திருமலையிலே நின்ற வண்ணம் எழுந்தருளியிருக்கும் எளிமையுடையவனும் விண்ணோரா வணங்கும போது அவர்களது முடிகள் படும் படியான திருவடிகளை யுடையவனுமாகிய திருமாலின் திருவடிகளைப் பணிந்து அவனிடத்திலே மனம் பொருந்தியிருக்க வேண்டும். அப்படிப் பொருந்தினால் மங்கையரின் தோள்களோடு அணைய வேண்டுமென்ற காமத்தைக் கைவிட்டு சாத்திரங்களிலே மனம் எளிதில் செல்லும்

எம்பெருமானைக் (என்னமுதனைக்) கண்ட கண்கள் மற்றொன்னினைக் காணாவே எனும் திருப்பாணாழ்வார் திருவாக்கிற்கிணங்க, திருமாலின் தரிசனமாகிய பேரின்பத்தை அடைய விரும்புபவர்கள், இவ்வுலகச் சிற்றின்ப வேட்கையை நீக்கிக் கொண்டு, அற்றது பற்றெனின் உற்றது வீடு என்பதற்கிணங்க திருமாலின் திருவடிகளை அடைவோம் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-26

" சிறந்த என் சிந்தையும் செங்கண் அரவும்
நிறைந்த சீர் நீள்கச்சி யுள்ளும்-உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
தாம்கடவார் தண்துழாயார்"

குளிர்ந்த திருத்துழாய் மாலைகளை அணிந்துள்ள திருமால் ஒருநாளும் நீங்காதவனாய் எழுந்தருளியிருக்கும் இடம் எது என்று கேட்பீர்களாகில், உன்னையும் என்னுன் வைத்தேன் என்னையும் உன் முன்னிலிட்டேன் என்னும் பேரியாழ்வார் திருவாக்கிற்கிணங்க என் நெஞ்சிலும் சிவந்த கண்களையுடைய அனந்தாழ்வானிடத்திலும் பெரிய கச்சித்திருநகரிலும், திருமலையிலும், திருவெ ஃ காவிலும் திருவேளுக்கையிலும் , விரும்பி எழுந்தருளியுள்ளான் திருமால் என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு: திருத்துழாய் மாலையை அணிந்துள்ள திருமால் காஞ்சி, திருமலை போன்ற திருப்பதிகளில் உவந்து எழு ந்தருளியுருப்பதைப் போல், என் உள்ளத்திலும் உவந்து எழுந்தருளியுள்ளான் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-30

" சேர்ந்த திருமால் கடல் குடந்தை வேங்கடம்
நேர்ந்த என் சிந்தை நிறை விசும்பு - வாய்ந்த
மறை பாடகம் அனந்தன் வண்துழாய்க் கண்ணி
இறை பாடி யாய இவை"

அழகிய திருத்துழாய் மாலைகளை அணிந்துள்ள ஸ்ரீ மந் நாராயணன், திருப்பாற்கடல், திருக்குடந்தை, திருவேங்கடம், பரமபதம், காஞ்சியிலுள்ள திருப்பாடகம், வேதங்கள்,திருவனந்தாழ்வான் ஆகிய இவைகளையெல்லாம் தன் தலை நகரங்களாகக் கொண்டு நித்திய வாசம் செய்கின்றார் என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : இறையாடி எனும் - தல நகரங்களாகிய திருப்பதிகளில் எழுந்தருளிக்காட்சி தருவது போல வேதங்களிலும் எழுந்தருளி வேத நாயகனாகக் காட்சி தருகின்றான்

பாசுரம்-32

" பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனி விசும்பும்
நூற்கடலும் நுண்ணூல் தாமரை மேல் - பாற்பட்டு
இருந்தார் மனமும் இடமாகக் கொண்டான்
குருந்தொசித்த கோபால கன்"

தீயவர்களை அழித்து, நல்லோரைக் காத்து, தர்மத்தை நிலை நாட்ட திருவாய்ப்பாடியிலே கண்ணனாக அவதரித்த ஸ்ரீ மந் நாராயணன், திருப்பாற்கடல், திருவேங்கடம், ஸ்ரீ வைகுண்டம் ஆகிய திருப்பதிகளையும், வேதக்கடல் போன்ற சாத்திரங்கள், திருவனந்தாழ்வான், பரம யோகிகளுடைய உள்ளங்கள் ஆகிய இவற்றையெல்லாம் தான் உவந்து வாழ்கின்ற இடங்களாகக் கொண்டவன் என்கின்றர் ஆழ்வார்.

குறிப்பு :

பனி விசும்பு: இல்லறத்தில் பட்ட துன்பங்களை யெல்லாம் போக்கி குளிரச் செய்யும் பரமபதம்

நூல்கடல் சுருதி: கடல் போன்று மிகுதியாயிருக்கின்ற இதிகாச, புராண, சாத்திரங்கள், கடல் ஆழமாயும் மிகுந்த பரப்பும் உடையதைப் போல இவை ஆழ்ந்த பொருள்களையும் மிகுதியான பொருள்களையும் தருபவையாகும்.

பாசுரம் -39

" இறையாய் நிலனாகி எண்திசையும் தானாய்
மறை யாய் மறைப் பொருளாய் வானாய் - பிறை
வாய்ந்த
வெள்ளத் தருவி விளங்கொலி நீர் வேங்கடத்தான்
உள்ளத்தின் உள்ளே உளன்"

விண்ணிலும் மண்ணிலுமுள்ள அனைவர்க்கும் இறைவனாகவும், பூமியிலுள்ள அனைத்து பொருள்களிலும் கறந்த பாலில் நெய்யே போல் மறைந்திருப்பனாகவும், எட்டுத்திசைகளையும் அந்த எட்டுத்திசைகளியிலுமுள்ள அனைத்துப் பொருள்களையும் தனக்கு உடலாகக் கொண்டிருப்பவனாகவும், வேதங்களாகவும் வேதங்களில் மறைந்துள்ள பொருள்களாகவும், பரமபதத்தை நடத்து பவனாகவும் உள்ள திருமால்,
சந்திர மண்டலத்தளவும் ஓங்கி உயர்ந்த மலைகளையும் நீர்பொங்கிப் பாயும் அருவிகளையும், பாயும் அருவிகளின் ஒலிகளையும் உடைய திருவேங்கட மலையிலும் என் உள்ளத்திலும் நித்தியமாக வாழ்கின்றான் என்கின்றார் ஆர்வார்.

குறிப்பு : 'என்னிடை வந்த எம்பெருமான்' எனும் பெரியாழ்வார் வாக்கும், 'மலைமேல் தான்நின்று என் மனத்துள் இருந்தானை ' எனும் நம்மாழ்வார் வாக்கும் இங்கு காணத்தக்கனவாகும்

பாசரம்-40

**"உளன் கண்டாய் நல் நெஞ்சே ! உத்தமன் என்றும்
உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து உளன்
கண்டாய்
விண்ணொடுங்கக்கோடுயரும்வீங்கருவி வேங்கடத்தான்
மண்ணொடுங்கத் தானளந்த மன்"**

எனக்கு இனிய உள்ளமே ! நமக்கு ஒரு குறையும் இல்லை. திருமால் நம்மைக் காப்பதற்காகவே காக்கும் கடவுளாக (ரட்சகனாக) விளங்குகின்றான். ஸ்ரீ மந் நாராயணன் எங்குமுளன் என்ற பிரகலாதனனைப் போல் நாம் நம்பினாலும், இரணிய கசிபுவைப் போல நம்பவில்லையானாலும், எப்போதும் நம்மைக் காப்பதற்காகவே நம் உள்ளத்தில் வாழ்ந்து கொண்டிருக்கின்றான்.

தன்னை எப்பொழுதும் மனதில் இருத்தி வழிபடும் உத்தமமான திருமாலடியவர்களிலே படுகாடு கிடக்கின்றான். இந்திரன் வேண்டுதலுக்கிணங்க, வாமனனாய்ச் சென்று மாவலியிடம் மூன்றடி மண் யாசித்து ஓங்கி வளர்ந்து ஓரடியால் மண்ணுலகையும், மற்றோர் அடியால் விண்ணுலகையும் அளந்து மூன்றாமடியால் அவனை பாதாள உலகுக்கு அனுப்பிய சர்வ வல்லமை பெற்ற இறைவனானவன் புருடோத்தமன். மேலுலகங்களேல்லாம் ஒரு மூலையில் ஒடுங்கும் படி மலை உச்சிகள் உயர்ந்து இருப்பதும் நிறைந்த அருவிகளையுடையதும் ஆகிய திருமலையில் நம்மையெல்லாம் காப்பதற்காக எழுந்தருளி தினமும் அருள்புரிந்து வருகின்றான் என்கின்றார் ஆழ்வார்.

எம்பெருமான் மனமுவந்து விரும்பி நம் உள்ளத்தில் குடி கொண்ட பின் நமக்கு ஒரு குறையுமில்லை என்பதைப் புலப்படுத்துகின்றார் ஆழ்வார்.

பாசுரம் -45

"புரிந்து மதவேழம் மாப்பிடியோடு ஊடி
திரிந்து சினத்தால் பொருது - விரிந்த சீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே
மேலொரு நாள்
மண் கோட்டுக் கொண்டான் மலை"

திருமலையில் வாழ்ந்த மதம் பிடித்த களிறு ஒன்று தன் சிறந்த பிடியுடன் கூடி உடலுறவு செய்து கொண்டிருக்கும் போது, அப்புணர்ச்சியில் வேறுபாடு தோன்றியது. அதனால் அந்த களிறு மிகுந்த கோபம் கொண்டு பிடியை விட்டுத் தன்னிலை உணராமல் வெறி கொண்டு திரிந்து ஓடியது. அப்போது திருவேங்கட மலையில் உள்ள பொன்னும் மணியும் போன்று ஒளி வீசிக் கொண்டிருந்த மலைப் பாறையின் கண்ணாடி போன்ற பளபளப்பில் தன்னுருவைக் கண்டது. அது வேறொரு களிறு என்று எண்ணி அதிர்ச்சியும் கோபமும் கொண்டு , அதனோடு போர் புரிய தன் தந்தங்களை அப்பாறைகளிலே குத்தியது. அப்போது அதன் தந்தங்களிலிருந்து வெண்முத்துக்கள் உதிர்ந்தன. அத்தகைய வளம் மிக்கது திருவேங்கட மலை. இம்மலையில் திருவேங்கடவன் எழுந்தருளுவதற்கு முன்பே, பூமியை மீட்க இரணியாக்கதனைக் கொல்ல "**வராக**" அவதாரம்

எடுத்த வராக மூர்த்தி கோனேரிப்புண்ணியத்துறையின் வடமேற்கு மூலையில் எழுந்தருளியுள்ளான். எனவேதான் இன்றும் நாம் திருவேங்கடவனைத் தரிசிக்கு முன் வராகப் பெருமானை தரிசிக்கும் முறையைக் கையாளுகின்றோம். கையாள வேண்டும்.

இத்துணை சிறப்பு வாய்ந்த திருவேங்கட மலையில் எம்பெருமான் ஸ்ரீ மந் நாராயணன் நமக்கெல்லாம் காட்சி தந்து அருள் சுரக்க மிகவும் எளியனாய் நின்ற வண்ணம் எழுந்தருளியுள்ளான்.

பாசுரம்-58

**"தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி**
**அளிந்த கடுவனையே நோக்கி - விளங்கிய**
**வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே மேலொரு நாள்**
**மண் மதியில் கொண்டுகந்தான் வாழ்வு"**

திருவேங்கடமலையில் ஒரு முழு நிலா நாளில் இரவு நேரத்தில், தெளிந்த கண்ணாடி போன்ற படிகப் பாறையில் ஒரு மந்தி (பெண் குரங்கு) உட்கார்ந்து கொண்டிருந்தது. மிக உயர்ந்த மலை உச்சியாதலால் நிலா அருகில் இருப்பது போன்று பெண்குரங்கிற்குத் தோன்றியது. அதன் அருகே கடுவனாகிய ஆண் குரங்கு தன் பெண்குரங்கு ஏதேனும் விரும்பிக் கேட்டால் அதனை உடனே பெற்றுக் கொடுத்து , அதன் அன்பை மிகுதியாகப் பெற வேண்டுமென்னு உட்கார்ந்து கொண்டிருந்தது. அப்போது அதன் அருகே சந்திரன் செல்வது போன்று தோன்றியது. சந்திரனைக் கண்ணாடி யென்று எண்ணிய பெண்குரங்கு தன்

அழகைக் காண அச்சந்திரனைப் பிடித்துத் தரும்படி ஆண்குரங்கை வேண்டியது.

சந்திரன் பளிங்குப்பாறைகளால் ஆனது. அதனால் தான் அதன் மேல் சூரியன் ஒளிபட்டு எதிர் ஒளியாக நமக்கு ஒளியைத் தருகின்றது. இன்று நம் அறிவியல் அறிஞர்கள் கண்ட அறிவியலை துவாபர யுகத்தில் வாழ்ந்த பேயாழ்வார் அறிந்திருந்தார் என்பது நன்கு புலப்படுகின்றது. என்னே ! பேயாழ்வாரின் அறிவியல் திறமை.

பண்டொரு நாள் இந்திரனுக்காக மாவலியிடம் மூன்றடி மண் இரந்து பெற்ற வாமனன், இன்று திருவேங்கடத்தில், நாம் என்ன கேட்கப் போகிறோமோ அதையெல்லாம் நமக்கு அருளக் காத்துக் கிடக்கதின்றான்.

குறிப்பு : பெண்குரங்கின் ஆவலைப் பூர்த்தி செய்ய அன்புடன் காத்துக்கிடந்த ஆண் குரங்கின் பாசத்தைப் போல நாம் விரும்பும் ஆவலையெல்லாம் பூர்த்திசெய்ய கருணையுடன் திருமால் திருவேங்கடத்தில் காத்துக் கிடக்கின்றான் என்பது புலனாகின்ற உள்ளுறை உவமமாகும்.

கேட்டார் கேட்டபடியே தானம் பண்ணுவதென்று விரதம் பூண்டிருந்த மாவலியினிடத்தில் இரந்து தொழில் கொண்டே காரியம் கொள்ள வேண்டுமென்று நினைத்துச் சென்றது திருமாலின் சாதுர்யமான செயலுக்கு ஒரு நல்ல எடுத்துக் காட்டாகும்.

திருச்சித்ர கூடத்தில் இராமபிரான் சீதாபிராட்டியாருடன் இருந்து இயற்கையின் எழிலை அனுபவித்ததைப் போல, திருவேங்கட மலையிலும் ஆண் குரங்கும் பெண் குரங்கும் அநுபவித்தன என்பது ஒரு சிறப்பான செய்தியாகும். என்னே! ஆழ்வாரின் இலக்கண வளம்.

**பாசுரம்-61**

**"பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்**
**கொண்டங்கு உறைவார்க்குக் கோயில்போல் - வண்டு**
**வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை**
**இளங்குமரன் தன்விண் ணகர்"**

இப்பாசுரத்திற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம்

1. வைகுந்தம் , திருப்பாற்கடல், திருவேங்கடம் ஆகிய இத்திருப்பதிகளையெல்லாம் தன் திருக்கோயில்களாகக் கொண்டு பண்டொரு காலத்தில் எழுந்தருளியிருந்தான் ஸ்ரீ மந் நாராயணன். ஆனால் இப்போதோ, வண்டுகள் வாழும் நீண்ட சோலைகளையுடைய திருக்கடிகையென்னும் சோழ சிங்கபுரத்தைத் (சோளிங்கர்) தான் விரும்பும் பதியாகக் கொண்டு எழுந்தருளியுள்ளான்.

2. எம்பெருமான் முன்காலத்தில் வைகுந்தம், திருப்பாற்கடல், திருவேங்கடம் போன்ற 108 திருப்பதிகளில் உவந்து எழுந்தருளியுள்ளான்.ஆனால் இப்போதோ அத்திருப்பதிகளையெல்லாம் விட்டு என் உள்ளத்தையே பெரிதும் விரும்பி என் உள்ளத்திலேயே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளான். அங்கு

எழுந்தருளி காட்சி தந்து அருள் புரிவதையெல்லாம் என் உள்ளத்திலிருந்தே செய்கின்றான். எனவே யான் பெற்ற பேறு யார் பெறுவார் என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு:

"என்னிடை வந்த எம்பெருமான் இனி எங்கு
போகின்றதே"
"பனிக்கடலில் பள்ளி கோளை பழக விட்டு ஓடி
வந்து என் மனக்கடலில் வாழ வந்த மாய மணாள
நம்பி"
"வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும்
இடவகைகள் இகழ்ந்திட்டு
என்பால் இடவகை கொண்டனையே"

எனும் பெரியாழ்வார் பாசுரங்கள் இங்கு நோக்கத் தக்கனவாகும்.

பாசுரம்-62
"விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென் கோட்டி
தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு"

வாமனனாக அவதரித்து மூவடி மண் இரந்து பெற்று ஓங்கி உலகளந்த உத்தமனானவன் திருமால். திருவிண்ணகரமென்னும் ஒப்பிலியப்பன் திருப்பதியும், நீர் வளமும் நில வளமும் மிக்க திருவேங்கடமலையும், பூலோக வைகுந்தமாகக் கருதப்படும் திருவெஃகாவாகிய

சொன்ன வண்ணம் செய்த பெருமாள் திருக்கோயிலும், அழகு பொருந்திய திருக்குடந்தை திருப்பதியும், மாட மாளிகைகளோடு கூடிய திருவேளுக்கையும், தேன் வெள்ளமாகப் பாயும் சோலைகள் சூழ்ந்த திருவரங்கமும் தென்பகுதியிலுள்ள திருக்கோட்டியூரும் ஆகிய திருப்பதிகளில் உவந்து எழுந்தருளியுள்ளான்.

இங்கெல்லாம் தனது தாழ்ச்சி தோன்ற, திருமால் எழுந்தருளியுள்ளான் என்கின்றார் ஆழ்வார்.

தன் நெஞ்சை அடைந்த பின்னும் தனக்கேயன்றி அடியார்கள் அனைவருக்கும் அருள் புரிவதற்காக இத்திருப்பதிகளை மிகவும் விரும்பியிருக்கின்றான் என்கின்றார் ஆழ்வார்.

பரமபதத்தைக் காட்டிலும் இத்திருப்பதிகளே மிகவும் சிறந்தவை என்பதைக் காட்டுகின்றார்.

பாசுரம்-63

**"தாழ் சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்**
**சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்**
**திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு**
**இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து"**

இப்பாசுரம் இன்று சிக்கலை உருவாக்குகின்றது. ஆழ்வாருடைய பாசுரப் பொருளை விருப்பு வெறுப்பின்றி நடு நிலையில் நின்று ஆராய வேண்டும்

**பாசுரப் பொருள் : சிவனுடைய சின்னங்களான தாழ்சடை, ஒண் மழு, சூழ் அரவு முதலானவைகளும், திருமாலின் திருமேனிச் சின்னங்களான நீள் முடி, திருச் சக்கரம், பொன் நாண் முதலியவைகளையும் தரித்துக்**

கொண்டு ஒன்றுக் கொன்று சேராத இரண்டு வடிவமும் திருமலையப்பனுக்கு ஒருவடிவாய் மிகவும் அழகாக அமைந்து விளங்கும் காட்சி என்னே அழகான காட்சி ! ஆச்சரியம் என்கின்றார் ஆழ்வார்.

திருமாலின் விசுவரூப தரிசனத்தில் அனைத்து உலகையும், உலகப் பொருள்களையும், அனைத்து தெய்வங்களையும் காணலாம். இதையும் நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

**சங்கர நாராயண அவதாரம் :** திருமாலுக்கு பத்து அவதாரங்கள் மட்டுமின்றி இன்னும் பல அவதாரங்களும் உண்டு. அவற்றில் சங்கர நாராயண அவதாரமும் ஒன்று. இந்த சங்கர நாராயண அவதாரத்திலே காட்டிய எளிமையை திருமலையில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார் என்கின்றார் ஆழ்வார். இப்பாசுரத்தில். இந்த சங்கர நாராயண அவதாரம் நரங்கலந்த சிங்கம் போல சிவன் கலந்த திருமால் உருவாய் தோன்றிய ஒன்று, என்று சாத்திரங்களில் பேசப்படுகின்றது.

சிவனுடைய உருவமும் தன்னுருவே என்று காட்டுவதற்காக முதன்மையான வலப்புறம் முழுவதும் சர்வேசுவரனான திருமாலின் அழகோடும் இடப்புறம் முழுவதும் திருமாலைக் குறித்து தவம் புரியும் சிவனுக்குரிய அழகோடும் தோன்றிய அவதாரமே சங்கர நாராயண அவதாரமாகும். அதாவது உயர்ந்த முடியையும் நீண்ட முடியையும் சக்கரத்தையும் பொன் நாணையும் வலப்புறத்திலும், தாழ்சடையையும் மழுவாயுதத்தையும், மானையும் இடப் புறத்திலும் உடையவனாயிருக்கும் சங்கர நாராயண அவதாரம்.

ஆனால் திருவேங்கடவன் சங்கர நாராயண அவதாரத்தில் இடப்புறத்தில் பெற்றிருந்த நீள் சடையும், மழுவும் மானும் இல்லை. திருமால் முடியினைப் பெற்றிருப்பதால் எல்லா உலகங்களுக்கும் திருமாலே சக்ரவர்த்தி என்பது புலப்படுகிறது. சங்கநாராயணனின் வலப்புறத்தில் முடியும் சக்கரமும் பொன் நாணும் அணிந்திருப்பது சிறப்பு நோக்கியேயாகும்.

**காரைக்கால் அம்மையாரின் கூற்று :** அர்த்த நாரீசுவரனின் இடப்பாகத்தை உமையினுடையதாகவும் வலப்பாகத்தை உலகளந்த மாயவனுடையதாகவும் கூறியுள்ளார் சிறந்த சிவனடியாரான காரைக்கால் அம்மையார்.

**ஒருபால் உலகளந்த மாயவனும் மற்ற ஒரு பால் உமையவளாம்** (காரைக்கால் அம்மையார் பாடல் )

அரனுடைய உடலில் பாதி அரக்கர்களின் பகைவனான விஷ்ணு வினாலும், மற்றைய பாதி பர்வதராஜ குமாரி பார்வதியாலும் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்டது. என்று சிவபக்த வட மொழிக் கவி ஒருவரும் பாடியுள்ளார்.

**"அர்த்தம் தாநவ வைரிணா கிரிஜயாப்யர்த்தம் ஹரஸ்யாஹ்ரதும்'"**

**நம்மாழ்வார் வாக்கு :** ஒருகாலத்தில் திருமால் சிவனுக்குத் தன் திருமேனியின் வலப்புறத்தில் ஒரு பகுதியில் இடங்கொடுத்த சிறந்த குணத்தைப் பேசுகின்றார்.

**"வலத்தனன் திரிபுரம் எரித்தவன் "**

(திருவாய்மொழி 1-3-9)

ஓர் உருவின் வலப்புறமே சிறப்பு வாய்ந்தது. வலப்புறத்தில் சிறந்த திருமாலின் திருச்சின்னங்கள் அணியப்பட்டுள்ளன. சங்கர நாராயண உருவம் திருமாலுக்கு உரியதே.

முடிந்த பொருள் : அப்படியிருக்க பேயாழ்வார் திருவேங்கடவனைப் பாடும் போது ஏன் இந்த சங்கர நாராயண திருவுருவையும் அவன் ஏந்தியுருந்த திருச்சின்னங்களையும் பாட வேண்டும் என்ற வினா எழலாம்.

திருமாலின் சங்கர நாராயண திருவுருவைக் காண விரும்பிய ஆழ்வாருக்குத் திருவேங்கடவன் காட்டக் கண்டு பாடினார் என்பதே உண்மை. மற்றபடி ஆழ்வார் மான் மழு சடைமுடியை மட்டும் பாடியிருந்தாராகின் திருவேங்கடவன் சிவனே என்று வாதிட இட முண்டு. ஆனால் ஆழ்வாரோ திருமால் , சிவன் ஆகிய இருவரின் திருவுருவையும் திருச்சின்னங்களையும் பாடியுள்ளார்.

**எனவே திருவேங்கடவன் திருமாலே என்பதிலும் சிவன் அல்ல என்பதிலும் அணுவளவும் ஐயம் இல்லை.**

விருப்பு வெறுப்பின்றி நடுநிலையில் ஆராய்ந்தால் இவ்வுண்மை புலப்படும். இந்த சர்ச்சை தீர இராமாநுசர் சங்கு - சக்கரத்தையும், மான்-மழுவையும் திருவேங்கடவன் கருவறையில் வைத்து இருவர் முன்னிலையிலும் சீல்வைத்து மறு நாள் திறந்து காட்டினார். திருவேங்கடவன் சங்கு-சக்கரம்

ஏந்தியிருந்தமை கண்டு ஐயம் தீர்ந்து திருமலையப்பன் திருமாலே என்று சைவர்களும் ஒப்புக்கொண்டனர்.

பாசுரம்-68

**"பார்த்த கடுவன் சுனைநீர் நிழல் கண்டு**
**பேர்த்தோர் கடுவன் எனப் பேர்ந்து - கார்த்த**
**களங்கனிக்குக் கை நீட்டும் வேங்கடமே மேல் நாள்**
**விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு"**

திருவேங்கடமலையிலுள்ள ஒரு தெளிந்த சுனையின் கரையிலே இருந்த களாச்செடிகளிலிருந்த களாப் பழங்களைப் பறித்துத் தின்றது ஒரு குரங்கு. அப்போது சுனை நீரில் எட்டிப்பார்த்தது. அதன் உருவம் தெரிந்தது. அதை வேறொரு குரங்கு என்று நினைத்து அதை நோக்கித் தனக்குக் களாப் பழங்களைப் பறித்துத் தரும்படி கைகளை நீட்டி வேண்டியதாம்.

இத்தகைய சிறந்த இயற்கை எழில் ஊட்டும் மலை வேங்கட மலையாகும். முன்னொரு காலத்தில் கிருஷ்ணாவதார காலத்தில் கம்சனால் அனுப்பப்பட்ட வத்சா சுரனைக் கொண்டே கபித்தா சுரன் மீது வீசி எறிந்து இருவரையும் ஒருங்கே முடித்த கண்ண பிரான் இக்கலியுகத்தில் திருவேங்கடத்தில் ஸ்ரீநிவாசனாக திருவுள்ளம் உவந்து எழுந்தருளியுள்ள திருப்பதியாகும்.

பாசுரம்-69

**"வெற்பென்று வேங்கடம் பாடும் வியன் துழாய்**

கற் பென்று சூடும் கருங் குழல்மேல்- மல் பொன்ற
நீண்டதோள் மால் கிடந்த நீள்கடல் நீராடுவான்
பூண்ட நாளெல்லாம் புகும்"

திருமாலின் மீதான பக்தி கரைபுரண்டு பெருக ஆழ்வார் தன் நிலையை விட்டு ஒரு பிராட்டியாருடைய தன்மையை அடைந்து, எம்பெருமானுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாமல் துயரப்பட்டார்.

பெண் தன்மையடைந்த ஆழ்வாரின் துயரத்தை அவளுடைய தாயார் வருந்திக் கூறுவதாக அமைந்தது இப்பாசுரம். அதுமட்டுமன்றி, உலகமக்கட்கு நீங்கள் எதைச் செய்தாலும் எம்பெருமானுடன் தொடர்புண்டாகும் படிச் செய்யுங்கள் அதனால் நற்பேறு பெறலாம் என்று அறிவுறுத்துகின்றார்.

என் மகள் ஏதேனும் ஒரு மலையைச் சொல்ல வேண்டுமென்று விரும்பினால் திருவேங்கடமலையைப் பாடுகின்றாள். தனது குழலில் பூவைச் சூடுவதற்குப் பதிலாக திருமாலுக்கு விருப்பமான திருத்துழாயைச் சூடுகின்றாள். நீராட வேண்டுமேன்றால் கம்சனால் ஏவப்பட்ட சானுரன், முஷ்டிகள் என்ற இரு மல்லர்களைக் கொன்றழித்த திருமால் அறிதுயில் கொள்ளும் திருப்பாற்கடலில் சென்று நீராட வேண்டுமென்கின்றாள். நான் என்ன செய்வேன் என்கின்றாள் ஆழ்வாரி ன் தாய்.

இப்பாசுரத்திற்கு கீழ்க்கண்டவாறு வேறு விதமாகவும் பொருள் கொள்ளப்படுகிறது. ஏனெனின் நம்மாழ்வார், திருமங்கையாழ்வாரைப் போன்று

முதலாழ்வார்கள் நாயகி தன்மையில் எம்பெருமானை அனுபவிக்கவில்லை.

ஓ! உலக மக்களே! நீங்கள் ஏதேனும் மலையைப் பாட வேண்டி விரும்பினால் திருவேங்கட மலையைப் பாடுங்கள், ஏதேனும் மலரைச் சூட விரும்பினால் எம்பெருமான் விரும்பும் திருத்துழாயைச் சூடுங்கள். நீராட விரும்பினால் திருப்பாற் கடலிலே சென்று நீராடுங்கள்.

பாசுரம்-70

**"புகு மதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து அருவி**
**உகு மதத்தால் கால் கழுவிக் கையால்-மிகு மதத்தேன்**
**விண்ட மலர் கொண்டு விறல்வேங் கடவனையே**
**கண்டு வணங்கும் களிறு"**

திருமலையிலே வாழும் களிறு தனது கன்னங்களிலிருந்து பெருகும் மத நீரால் வாய் கொப்பளித்து, தூய்மை செய்து அருவி போல் காலளவும் பெருகும் மத நீரால் காலைக் கழுவிக் கொண்டு தனது தும்பிக்கையின் நுனியிலே நறுமணம் மிக்க தாமரை மலரைப் பறித்துக் கொண்டு போய் மிகுந்த பக்தியுடன் திருவேங்கடவன் திருவடிகளில் மலரையிட்டு முட்டி யிட்டு வணங்கி வேங்கடவா என்று கூவி மகிழும்.

இங்கு, இன்றும் திருவரங்கத்தில் விடியற்காலையில் யானையானது திருவரங்கனை வணங்கி ரங்கா என்று கூவி மகிழ்வதைக் காணுகின்ற செயல் நினைக்கத் தக்கது.

குறிப்பு : 1 திருவேங்கடமலையில் வாழும் ஐயறிவுடைய விலங்குகளும் திருவேங்கடவனை வணங்கி வழிபடுகின்ற சிறப்பு காணத்தக்கது.

2 கஜேந்திர ஆழ்வானின் தினவழிபாடும் இங்கு காணத்தக்கது.

பாசுரம்-71

**"களிறு முகில் குத்தக் கையெடுத் தோடி
ஒளிறு மருப்பொசிகை யாளி - பிளிறி
விழ கொன்று நின்றதிரும் வேங்கடமே மேல் நாள்
குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று"**

திருவேங்கட மலையில் வாழும் யானை, மத யானை போல் எழுந்த மாமுகில்களை, எதிரியான தொரு யானை என்று மயங்கி, மிகுந்த வேகத்தோடு சென்று , தனது தந்தங்களால் குத்தியது. இதை, அம்மலையில் வாழ்ந்த யாளி கண்டது. இந்த யானைக்கு இவ்வளவு மதமா என்று கோபித்து ஓடிச் சென்று, அதன்மேல் பாய்ந்து அதன் தந்தங்களை வாழைத்தண்டை சுலபமாக முறிப்பதைப் போல முறித்து எறிந்தது.

யானை பிளிறிக் கொண்டு விழுந்து இறந்தது. இதன் பின்னும் கோபம் தணியாத யாளி அவ்விடத்திலேயே நின்று, மற்ற காட்டு விலங்குகளெல்லாம் மயங்கி மண்ணில் விழும்படி பெருமுழக்கம் செய்தது. இத்தகைய சிறப்பு வாய்ந்தது. திருவேங்கடமலை என்கின்றார் ஆழ்வார். முன்பு ஒரு நாள் இளங்கன்றாக கண்ணனைக் கொல்ல வந்த வத்சாசுரனைக் எறிதடியாகக் கொண்டு, விளங்கனியாக நின்ற கபித்தா சுரனைக் கொன்ற கண்ணன் தற்போது

ஸ்ரீ நிவாசனாக எழுந்தருளியுள்ள மலை திருவேங்கடமலை.

குறிப்பு : இவ்வாறு யாளி, திருவேங்கட மலையிலே யானையைக் கொல்ல லாமா என்ற வினா எழலாம். இவை பகை விலங்குகள். இவை ஒன்றோடொன்று போரிட்டு ஒன்று மடிவது உலக இயற்கை. இந்த யானை திருவேங்கட மலையில் இறந்ததால் வைகுண்ட மடையும். எனவே இது அந்த யானைக்கு பெரு நன்மையே அளித்தது என்பது ஒரு சிறப்புச் செய்தியாகும்.

பாசுரம்-72

**"குன்றொன்றினாய குறமகளிர் கோல் வளைக்கை**
**சென்று விளையாடும் தீங்கழை போய் - வென்று**
**விளங்குமதி கோள்விடுக்கும் வேங்கடமே மேலை**
**இளங்குமரர் கோமா னிடம்"**

திருவேங்கடமலையில் வாழும் குறவர்கள் அம்மலையில் வாழ்வதையே சிறப்பாகக் கருதுபவர்கள். அதைவிடுத்து அம்மலையினின்று கீழே இறங்குவதைத் தம் குடிக்கு ஏற்படும் பழியாகக் கருதுவர். இம்மலைச் சிகரங்களில் தாம் விரும்பிய படி சென்று குறத்திகள் விளையாடுவர். அம்மலையில் மிக உயரமாக வளர்ந்துள்ள மூங்கில்களைக் கொண்டு ஊஞ்சலாடுவர். இம்மூங்கில்கள் சந்திரனை எட்டும் வகையில் வளர்ந்திருப்பதால் குறவர்கள் ஆடும் போது சந்திரனை எட்டுவர். அவர்கள் கைகளில் அணிந்துள்ள ஒளிமிக்க வளையல்கள் மிகுந்த ஒளியை வீசுகின்றன. சந்திரனைப்பிடித்து அதற்கு இருளை உண்டாக்கி களங்கப் படுத்திய ராகுவைக் குத்தி வெற்றி பெற்று

சந்திரனுடைய களங்கத்தைப் போக்கினர். சந்திரனின் களங்கத்தைப் போக்கிய மலை திருவேங்கடமலை. இம்மலையில் வாழும் இறைவன் யார் ? பரமபதத்தில் இளங்குமரர்களாகிய நித்ய சூரிகள் வணங்கும்படி எழுந்தருளியுள்ள ஸ்ரீ மந் நாராயணனே இம்மலையில் திருவேங்கடவனாக எழந்தருளியுள்ளான். அவனை நாம் கண்டுகளிக்க வேண்டுமென்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : 1. திருவேங்கடமலையில் வாழும் சாதாரண குறவர்களே அம்மலையிலிருந்து கீழே இறங்கி வருவது அவர்கள் குடிக்குப் பழியைத் தரும் என்று நினைப்பதைக் கொண்டு-நாமும் திருவேங்கடமலையில் நித்ய வாசம் செய்ய வேண்டுமென்பதை நமக்கு ஆழ்வார் அறிவுறுத்துகின்றார். **"எம்பெருமான் பொன் மலை மேல் ஏதேனும் ஆவேனே என்ற குலசேகர ஆழ்வார்"** வாக்கு இங்கு கருதத்தக்கதாகும்.

2. திருவேங்கட மலையை அடைந்த சந்திரன் எவ்வாறு தன் களங்கத்தைப் போக்கிக் கொண்டானோ அப்படியே திருவேங்கட மலையைச் சென்றடைத்தால் நம் தீவினையும் தீயில் பட்ட பஞ்சு போல் தீய்ந்து போகும் என்பது உள்ளுறை உவமமாகும் இங்கு நம்மாழ்வாரின் " **திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே"** என்ற திருவாக்கும் காணத்தக்கதாகும்.

**பாசுரம்-73**

**"இடம் வலம் ஏழ்பூண்ட இரவித் தேரோட்டி**
**வடமுக வேங்கடத்து மன்னும்- குடம் நயந்த**
**கூத்தனாய் நின்றான் குரைகழலே கூறுவதே**

**நாத்தன்னால் உள்ள நலம்''**

மேருமலைக்கு இடமாவும் வலமாகவும் செல்லும்படி சூரியனுடை தேரை மறைபொருளாக இருந்து நடத்தி வருபவர் திருமால். இத்தேரில், காயத்ரீ, ப்ருகதீ,ஜகதீ, திரிஷ்டுப், அநுஷ்டுப், உஷ்ணிக், பங்க்தி எனும் ஏழு சந்தஸ்சுகளே சூரியனின் குதிரைகளாகும். இங்கு திருமங்கையாழ்வார் அருளிய சிறிய திருமடல்,

**''காரார் புரவி ஏழ் பூண்ட தனி யாழித் தேரார் நிரை கதிரோன்''** எனும் அருளிச் செயல் காணத்தக்கதாகும்.

**வேறு பொருள் :** அர்ச்சுனனுடைய போர்த் தேரை மகாபாரதயுத்தத்திலே கண்ணனாயிருந்து நடத்தியதையும் பொருளாகவும் கொள்ளலாம். குடத்தைத் தலையிலே வைத்து கூத்தாடுகின்ற, நெஞ்சை உருக்கும் செயலைச் செய்த குடமாடும் கூத்தனான கண்ணன் குடமாடிய களைப்புத் தீர இத்திருவேங்கடத்தில் திருவேங்கடவனாக வந்து எழுந்தருளியுள்ளான். ஆபரண ஒலியை உடைய அவனது திருவடிகளை வணங்கித் துதிப்பதே, நாம் நாவினைப் படைத்த பலனாகும்.

**''பஞ்சவர்க்குத் தூது நடத்தானை ஏத்தாத நாவென்ன நாவே''**

எனும் இளங்கோவடிகள் வாக்கு இங்கு நோக்கத்தக்கனவாகும்.

குறிப்பு : எம் பெருமானுக்கு சூரியமண்டலமும் ஓர் வாழிடம் ஆதலால் இரவித் தேரோட்டி என்றார். எம்பெருமான் அருள் அணுவளவு மின்றி, எந்த தெய்வங்களும் எந்த செயலையும் செய்ய இயலாது.

ஆகவே சூரியனுக்கு மறைபொருளாக இருந்து அவனது தேரை நடத்துகின்றார் என்க.

பாசுரம்-75

"சார்ந்து அகடு தேய்ப்பத் தடாவிய கோட்டுச்சிவாய்
ஊர்ந்தியங்கும் வெண்மதியி னொன்முயலைச் -
சேர்ந்து
சின வேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்
புன வேங்கை நாறும் பொருப்பு"

அகன்ற பரப்பையும் உயரமானதுமான திருவேங்கடமலையின் உச்சியில் சந்திரனது அடிவயிறு தேயும் படியாக, திருமலைச் சிகரங்களின் இனிமையிலே ஈடுபட்டு மெள்ளச் செல்கின்றது. அடிவயிறு மலை உச்சியிலே தேய்வதால் பட்டை தீட்டப்பட்ட வயிரம் போல் ஒளிபெற்று வெளுத்தது! சந்திரன். சந்திரனில் முயல் வடிவிலிருக்கும் களங்கத்தை முயல் என்று கருதி, முயல் மாமிசத்தை விரும்பி நாக்கில் நீர் சொட்டியது அம்மலையில் வாழும் வேங்கைக்கு. அம்முயலை பிடிக்க முடியாமல் போன வேங்கை அதையே பார்த்துக் கொண்டு இருந்தது, இத்தகைய செயல் நிகழும் மலை திருவேங்கடமலை.

திருவேங்கட மலையில் வாழும் வேங்கை மரங்கள் பூத்துக் குலுங்கி எப்பொழுதும் நறுமணம் வீசிக் கொண்டிருக்கும். காடுவாழ் சாதியான இடையர்களுக்குக் காட்டில் மரங்களுடைய மணம் மிகவும் இனிதாயிருக்கம். ஆகையால் இடையர் குலந்திலே பிறந்த கண்ணன், இக்கலியுகத்தில் திருமலை யப்பனாக திருவேங்கடத்திலே தினமும் உவந்து

எழுந்தருளி மக்கட்குக் காட்சி தந்து அருள் புரிகின்றான் என்கின்றார் ஆழ்வார்.

**பாசுரம் - 89**

**"முடிந்த பொழுதில் குறவாணர் ஏனம்**
**படிந்துழுசால் பைந்திணைகள் வித்த - தடிந்தெழுந்த**
**வேய்ங்கழைபோய் விண்திறக்கும் வேங்கடமே**
**மேலொருநான்**
**தீங்குழலவாய் வைத்தான் சிலம்பு "**

மக்கள் முதுமைக்கு வேண்டிய செல்வத்தை இளமைப் பருவத்திலே சேமித்து வைத்துக் கொள்ளவேண்டும். திருவேங்கடமலையில் வாழும் குறவர்கள் இளம் பருவம் முடிந்து கிழப்பருவம் எய்தினர். முதுமையினால் தங்கள் குலத்தொழிலாகிய தேன் எடுத்தல், வேட்டையாடுதல் போன்ற செயல்களைச் செய்ய முடியாதவர்களாயினர். எனவே பயிர் செய்து வாழவிரும்பினர். ஆனாலும் அவர்களால் நிலத்தை உழுது பயிர் செய்யமுடியவில்லை. என் செய்வதென்று யோசித்தனர்.

திருவேங்கட மலையில் வாழும் காட்டுப் பன்றிகள் தங்கள் உடல் வலிமையால் மூங்கில் புதர்களின் அடியில் தங்கள் மூக்கினால் குத்தித் தள்ளின. இதனால் மூங்கில்புதர்களின் அடிப்பரப்பு உழுத நிலம் போல் ஆயின. இந்த முதிய குறவர்கள் அவ்விடங்களில் தினைகளை விதைத்து அறுவடை செய்து பிழைத்து வந்தனர். ஆயினும் மூங்கில் முளைகள் திருவேங்கட மலையின் நிலவளத்தாலும் நீர்

வளத்தாலும் உயர்ந்து வளர்ந்து தினைப்பயிர்களை நன்கு வளரமுடியாமல் செய்தன.

திருவேங்கடமலை மூங்கில் வானுற ஓங்கி வளர்ந்ததைப் போல பகவத் - பாகவத உறவு விண்ணுள்ள பரமபதம் வரை வளர்ந்தது. திருமால், திருவாய்ப்பாடியிலுள்ள இடக்கைக்கும் வலக்கைக்கும் வேறுபாடு அறியாத மெய்யறிவொன்றுமில்லாத இடையர் குலத்திலே பிறந்து புல்லாங்குழல் இசை வாசித்தான். இவ்விசை இடைச்சிகளையும் பகுத்தறிவற்ற பசு போன்ற மிருகங்களையும், உயிருள்ள, உயிரற்ற பொருள்களையும் மலையும், நெருப்பும் நீர்ப் பண்டமாக உருகி நின்றன. ஞானிகளான முனிவர்கள் அறிவு இழந்தனர், அறிவற்ற மரங்கள், இடையர்கள் பேரறிவு இழந்தவர்களாயினர். மாடுகளும் புலிகளும் பகை மறந்து உடன் பிறந்தன போன்று ஒருங்கே நின்றன. பரமாத்மாவான கண்ணனே அவர்களில் ஒருவராயினான். இந்நிலை எய்தும்படி கண்ணன் தன் திருப்பவள வாயிலே குழலை வைத்து ஊதினான். இந்த அவதார காலத்திலே திருமாலின் திருவருளை அனுபவித்தவர்கள் ஒரு சிலரேயாயினர். அன்று நான் பிறந்திலேன் என்ற படி அவதாரம் காட்டாற்று வெள்ளம் போல பெரும் பயன் விளைக்காமல் போயிற்று.

அக்குறை நீங்கும் பொருட்டு, கலியுகத்திலே எளிதான அர்ச்சை நிலையிலே அதுவும் மக்கள் தீவினையை எரிக்கும் திருவேங்கட மலையிலே, ஸ்ரீநிவாசனாக நின்ற வண்ணம் காட்சி தந்து அருள்

புரியும் சிறந்த மலை திருவேங்கடம் என்கின்றார் ஆழ்வார்.

ஆழ்வார் இப்பாசுரத்தில் உலகளந்தருளிய திரிவிக்கிரம அவதாரத்தின் சிறப்பையும் கூறுகின்றார்.

குறிப்பு:(1) முதுமைக்கு வேண்டிய பொருளை இளமையிலே சேமிப்பது போல மறுமைக்கு வேண்டிய அருளை இப்பிறப்பிலேயே பகவத்-பாகவதத் தொண்டுகளைச்செய்து, திருமால் திருவடி சேரவேண்டும்.

(2) கண்ணனே திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ள திருவேங்கட மலைக்குச் சென்று நம் தீவினைகளைப் போக்கிக்கொண்டு திருமால் திருநாடு அடைய முயல வேண்டும் என்கின்றார்.

(3) திருவேங்கட மலைவாழ் உயிருள்ள உயிரற்ற பொருள்களை உவமையாகக் காட்டி நாம் வாழ்வாங்கு வாழவேண்டிய முறைகளை யெல்லாம் நன்கு விளக்கியுள்ளார்.

(4) திருவேங்கட மலையின் இயற்கை அழகினை நன்கு படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

(5) ஆழ்வாரின் பாசுரங்களில் இனிய தமிழும் இலக்கண - இலக்கிய வளமும் களிநடம் புரிகின்றன.

(6) முதலாழ்வார்கள் மூவரும் நற்றமிழால் நாட்டை உய்வித்த பெற்றிமை யோராக விளங்கினர்.

(7) தமிழிலக்கியத்திற்கு அந்தாதி என்ற பாவகையை முதலில் தோற்றுவித்தவர்கள் முதலாழ்வார்களேயாவர்.

(8) கண்ணனே திருவேங்கட மலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான் என்பதைப் பல பாசுரங்களில் பாடியுள்ளார்.

பேயாழ்வார் நமக்கு அளித்துள்ள திருவேங்கடவன் சிறப்பை யெல்லாம் அறிந்து, திருவேங்கடம் சென்று, அவனருள் பெற்று உய்வோமாக.

**பேயாழ்வார் திருவடிகளே சரணம்.**



# 5. திருமழிசையாழ்வாரும்



திருவேங்கடவனும்

## திருமழிசையாழ்வாரும் - திருவேங்கடவனும்

**அவதாரம் :** துவாபர யுகத்தில் சித்தார்த்தி ஆண்டு தை மாதம் மக நன்னாளில் ஞாயிற்றுக்கிழமை, திருமழிசையென்னும் திருப்பதியில் பார்க்கவ முனிவருக்குத் திருக்குமாரராய் அவதரித்தார். இவர் பக்தியே வடிவெடுத்தது போல் இருந்தமையால் பக்திசாரர் எனப் பெயர் பெற்றார்.

**"தையில் மகமின்று தாரணியீர் ! ஏற்றம் - இந்தத்**
**தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன் - துய்யமதி**
**பெற்ற மழிசைப்பிரான் பிறந்த நாளென்று**
**நற்றவர்கள் கொண்டாடும் நாள்."** (உ.ர.மா-12)

**அழகாரும் திருமழிசை அமர்ந்த செல்வன் வாழியே**
**இன்பமிகு தையில் மகத்திங்கு உதித்தான் வாழியே"**
(வாழித் திருநாமம் - 5)

**நான் முகன் திருவதாந்தி**

பாசுரம் - 34

**" குறிப்பு எனக்கு கோட்டியூர் மேயானையேத்த**
**குறிப்பு எனக்கு நன்மை பயக்க - வெறுப்பனோ**
**வேங்கடத்து மேயானை மெய்வினைநோய் எய்தாமல்**
**தான் கடத்தும் தன்மையான் தாள். "**

எளிதான அர்ச்சை நிலையில் திருக்கோட்டியூரிலும் திருவேங்கடமலையிலும் நமக்குக் காட்சி தந்து அருள் சுரக்க எழுந்தருளியுள்ள திருமாலைத் துதித்து அவனுக்குப் பல்லாண்டு

பாடவேண்டுமென்றும், அவனை ஒரு வினாடியும் விடாமல் எந்த நேரமும் நினைத்துக் கொண்டிருந்து ஆத்மாவிற்கு நன்மையை விளைவித்துக் கொள்ள வேண்டுமென்றும் நான் மிகுந்த ஆசை கொண்டுள்ளேன். உடலடியாகத் தோன்றும் பசி, பிணி, போன்றவைகளும் அவற்றால் ஏற்படும் துன்பங்களும் என்னை வந்தடையாமல் இருக்கச் செய்து என்னைக் காத்தருள்கின்ற எம்பெருமானுடைய திருவடிகளை நான் எப்படி மறக்க முடியும்? மறக்க முடியாது என்கின்றார் ஆழ்வார்

குறிப்பு : அவனும் அவளும் (எம்பெருமானும், பிராட்டியும்) விடினும் அது (அவனது திருவடி) விடாது எனும் முமுட்சுப்படி இங்கு நோக்கத்தக்கது. எனவே தான் திருப்பாணாழ்வாரும் முதலில் திருவடியைச் சேவித்து பின்னரே மற்றவற்றைச் சேவிக்கின்றார்.

**"காட்டவே கண்ட பாதம்..............................**

**..................................................................பாணர்"**

(அமலனாதிபிரான் தனியன்)

பாசுரம் - 39

**"அழைப்பன் திருவேங் கடத்தானைக் காண**
**இழைப்பன் திருக்கூடல் கூட - மழைப்பேர்**
**அருவி மணிவரன்றி வந்திழிய யானை**
**வெருவி அரவொடுங்கும் வெற்பு"**

திருவேங்கட முடையானைக் கண்ணாரக் கண்டு களிக்க வேண்டுமென்று விரும்பி அவனது பெயரைச் சொல்லி கூப்பிட்டு நின்றேன். மழை சொரிவது போல் நீரைச் சொரிகின்ற அருவிகள் அங்குமிங்கும்

சிதறிக்கிடக்கின்ற ரத்னக் கற்களைத் திரட்டிக்கொண்டு ஓடியன. இந்த ரத்னக் கற்களின் ஒளியைக்கண்ட யானைகள் அவை தீப்பந்தங்கள் என்று அஞ்சி நின்றன. இந்த ரத்தன கல்லின் ஒளியைக் கண்டு மின்னல் என்று நினைத்து, பின் மின்னலை அடுத்து பேரிடி இடிக்கப் போகின்றது என்று நினைத்த அம்மலைவாழ் பாம்புகள் புற்றுக்குள் சென்று மறையும்.

இத்தைகைய சிறப்பு வாய்ந்த திருவேங்கடமலையில் சென்று தினமும் வாழவேண்டும் என்பது ஆசை என்கின்றார் ஆழ்வார். இந்த ஆவல் நிறைவேறுமா என்பதை அறிய கூடல் இழைத்ததாகக் கூறுகின்றார். கூடல் இழைத்தல் என்ற நற்குறி பார்த்தல் பெண்களுக்கே உரிய செயல். ஆழ்வார் தன்னைப் பெண்ணாகக் கருதிக் கொண்டு கூடல் இழைக்கின்றார்.

1. கண்ணை மூடிக்கொண்டு மணலில் வட்டக் கோடு போடுவர். கோடு இணைந்து வட்டமானால் எண்ணிய கருமம் நன்றே முடியும் என்பது ஒரு வகை குறி.

2. மணலில் வட்டமாகக் கோடு கூறி அதற்குள்ளே சுழிசுழியாகச் சுழித்து, இரண்டிரண்டு சுழியாகக் கூட்டிப்பார்த்து, இரட்டைச் சுழியாக முடிவு பெற்றால் எண்ணிய காரியம் கைகூடும் என்றும், ஒற்றைச் சுழியாக வந்தால் காரியம் கை கூடாது என்றும் நம்பிக்கை கொண்டிருத்தல் கூடல் இழைத்தல் என்று பெயர் பெற்றது.

இதனைக் கூடல், கூடலிழைத்தல், கூடல் வளைத்தல், கூடற்குறி என்று பலவிதமாக வழங்குவர்.

**பாசுரம் - 40**

**"வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி**
**நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் - கற்கின்ற**
**நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்**
**கால் வலையில் பட்டிருந்தேன் காண். "**

திருமாலிருஞ் சோலை மலை, திருக்கடிகை மலை, அத்திகிரி என்று எம்பெருமான் எழுந்தருளியுள்ள பல மலைகளைச் சொல்லும்போது திருவேங்கட மலையையும் சொன்னேன்.

இதைக்கேட்ட திருமால் ஆழ்வாரை நோக்கி, நீ என் பெயரைச் சொன்னாய், யான் வாழும் ஊரைச் சொன்னாய், என்னையும் வணங்கினாய் என்று மகிழ்ந்து கூறி, திருமால் திருநாடு 'நல்கினீர். இச்செயலை எண்ணி எண்ணி என் மனம் உருகியது.

தலை முறை, தலைமுறையாக, செவிவழிச் செய்தியாக ஓதப்பட்டு வருகின்ற வேத - சாஸ்திரங்களாகிற வலையிலே நிலைத்து நிற்கின்ற எம்பெருமானுடைய திருவடிகளாகிற வலையிலே நான் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றேன். தானே ஏறிட்டுக்கொண்டு அடியேனுக்கு அருள்புரிவதனால் நான்' அவன் திருவடிகளை ஒரு நொடியும் விடமாட்டேன் என்கிறார் ஆழ்வார்.

பாசுரம் - 41

**"காணலுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓண விழவி லொலி யதிர - பேணி
வருவேங் கடவா என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங் கட மதனைச் சென்று"**

பேரொலி செய்து கொண்டு வீழ்கின்ற அருவிகளிலே முத்துக்கள் உதிரப் பெற்றதும், திருவேங்கடமுடையான் திருவவதாரம் பண்ணின திருவோணத் திருவிழாவில் திருமாலடியார்கள் செய்யும் வாழ்த்து ஒலியானது எங்கும் பரந்து கேட்கும் மலை திருவேங்கிட மலை. பல திசைகளிலிருந்தும் பல

திருமாலடியார்கள் விரும்பி வந்து பணிகின்ற திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கின்றீர். எம்பெருமானே நீர் அம்மலையிலிருந்து வந்து என் மனதில் எழுந்தருளியுள்ளீர். ஆனால் நானோ அத்திருவேங்கடமலையைச் சென்று காண வேண்டுமென்று விரும்புகின்றேன். இனி நான் என் செய்வேன்.

பாசுரம்-42

**"சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினை கெடுக்கும் நீர்மையால் - என்றும்
கடிக்கமல நான் முகனும் கண் மூன்றத் தானும்
அடிக் கமல மிட்டேத்தும் அங்கு"**

என் அன்பர்களாகிய திருமாலடியார்களே! நீங்கள் உயர்ந்தோங்கிய மலையான திருவேங்கடத்தைச் சென்று வணங்குங்கள். உங்கள் பாவங்களெல்லாம் தீயில் பட்ட பஞ்சு போல், தீய்ந்து விடும். தேவாதி

தேவர்களான பிரமன், சிவன் முதலானவர்களும் தங்கள் தங்களுக்குத் தேவையானவற்றைப் பெறுவதற்காக திருவேங்கடமலைக்கு வந்து திருவேங்கடவன் திருவடிகளிலே எப்போதும் தூய மா மலர்களை இட்டு வணங்கி நிற்பார்கள். நீங்களும் அங்கே சென்று வணங்கி வழிபடுங்கள் என்கின்றார் ஆழ்வார். வெங்கொடும் பாவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல் மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கட மலையான தென்று புராணச் செய்யுள் கூறுகின்றது.

பாசுரம் –43

**"மங்குல்தோய் சென்னி வடவேங் கடத்தானை**
**கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான் - திங்கள்**
**சடையேற வைத்தானும் தாமரைமேலானும்**
**குடையேறத் தாங்குவித்துக் கொண்டு"**

என் அன்பர்களாகிய திருமாலடியார்களே! மேக மண்டலத்தளவும் வளர்ந்துள்ள சிகரங்களையுடைய திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவன் திருவடிகளைத் தொழுது அவனுக்கு ஒவ்வொரு அந்தி வேளையிலும் திருக்காப்பு இடுவதற்குச் சந்திரசேகரனான சிவபெருமானும் நான்முகனான பிரம்மாவும் முத்து, குடை முதலான ஆராதனைப் பொருட்களையெல்லாம் சேகரித்துக் கொண்டு செல்லுவார்கள். எனவே நீங்களும் திருவேங்கடம் சென்று திருவேங்கடவனை வணங்கி நற்பேறு பெறுங்கள் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம் - 44

**"கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய்
தண்ட வரக்கன் தலைதாளால் - பண்டெண்ணி
போம் குமரன் நிற்கும் பொழில்வேங்கடமலைக்கே
போம் குமர ருள்ளீர் புரிந்து"**

கிளரொளி இளமை கெடாமல் இருப்பவர்களே என் வார்த்தையை நிதானமாகக் கேளுங்கள் என்கின்றார் ஆழ்வார்.

முன்பொரு காலத்தில் இராவணன் தன் பத்துத் தலைகளையும் மறைத்துக் கொண்டு, நான்முகனிடம் சென்று அவனை வஞ்சித்து வரம் கேட்டான். எம்பெருமான் அப்போது ஒரு சிறு குழந்தையாய் பிரமன் மடியிலே தோன்றி, இவன் பத்து தலைகளையுடைய இராவணன். இவன் உன்னை வஞ்சித்து வரம் வாங்க வந்துள்ளான். இவனுக்கு நீ வரமளித்தால் பெரும் தீங்காக முடியும். என்று தெரிவிப்பதற்காகத் தன் திருவடியால் அவன் பத்து தலைகளையும் எண்ணிக்காட்டினான்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த எம்பெருமான் நின்றருளும் திருவேங்கட மலைக்கு விரும்பிச் சென்று சேருங்கள் என்கின்றார் ஆழ்வார். வயது முதிர்ந்த பின்பு தண்டூன்றித் தள்ளாடி நடக்கும் முதுமையில் திருமலையை நெஞ்சால் நினைக்கவும் முடியாது. எனவே இளமை முடியும் முன்னே திருமலைக்குச் சென்று திருவேங்கடவனைச் சேவித்து நற்பேறு அடையுங்கள் என்கின்றார் ஆழ்வார்.

**"கிளரொளி யிளமை கெடுவதன் முன்னம்**

**வளரொளி மாயோன் மருவிய கோயில்
வளரிளம் பொழில் சூழ் மாலிருஞ் சோலை
தளர்வில ராகில் சார்வது சதிரே"**

(திருவாய் மொழி-2-10-1)

எனும் திருவாய்மொழி இங்கு நோகதத்தக்கதாகும்

பாசுரம்–45

**" புரிந்து மலரிட்டுப் புண்டரீகப் பாதம்
பரிந்து படுகாடு நிற்ப தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு"**

திருமாலடியவர்கள் பெரும் பக்தியுடன் வந்து வணங்கி, நறுமண மலர்களைத் திருவடிகளில் சேர்த்து, இத்திருமேனிக்கு என்ன தீங்கு வருமோ என்று அஞ்சி, வயிறு பிடிக்காமல் பல்லாண்டு பல்லாண்டு என்று காப்புப் பாடினர். வெட்டித் தள்ளின மரங்கள் ஆடாது அசையாது அவ்விடத்திலேயே வாடிக் கிடப்பது போல, எம்பெருமானை விட்டுப் பிரிய மனமின்றி வருத்தத்துடன் வெளியே போகாமல் ஆடாது அசையாது அங்கேயே குடி கொண்டிருக்கும் படிச் செய்தருளபவன் ஸ்ரீ நிவாசன். இந்த குளிர்ச்சி பொருந்திய திருவேங்கட மலையில் நித்ய வாசம் பண்ணுகின்றான் திருவேங்கடவன். மண்ணுலக அடியார்களுக்கு மட்டுமின்றி (விண்ணுலக) (வைகுண்டத்தில் வாழும் நித்ய சூரிகளுக்கும் புகலிடமாக விளங்குகின்றது என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : 1. படுகாடு நிற்ப: வெட்டித் தள்ளப்பட்ட ஆடாது அசையாது

அவ்விடத்திலேயே கிடக்கும் மரங்களைப் போல நிற்றல்.

2. **பரிந்து:** பரிவாவது அருளில்லாத இடத்தில் அச்சம் கொண்டு அன்பு பாராட்டிக் காப்பிடுவது. அது தான் மங்களாசாசனம்

பாசுரம்- 46

**"வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று
எப்பொழுதும் கை நீட்டும் யானையை - எப்பாடும்
வேடு வளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே
நாடு வளைத் தாடுமேல் நன்று"**

இப்பாசுரத்தில் , திருவேங்கடமலையில் வாழும் யானையும் குறவர்களும் கூட திருமாலுக்கும், திருமால் அடியவர்களுக்கும் தொண்டு செய்யும் அருமையை விளக்குகின்றார். விண்ணில் அழகிய ஒளி விளக்கு போல் தோன்றும், சந்திரனைக் கண்ட , திருவேங்கடமலையில் வாழும் யானையானது இச்சந்திரனை நமது துதிக்கையினால் பிடித்தெடுத்து, திருவேங்கடவன் திருக்கோயிலில் இடைவிடாது எரியும் நந்தா விளக்காக வைத்தால் நன்றாக விருக்கும் என்று நினைத்தது. இந்த யானையின் நோக்கமெல்லாம் சந்திரனைப் பிடிக்க வேண்டுமென்பதிலே ஆழ்ந்திருந்ததால், சந்திரனைப் பிடிக்க நீட்டிய தன் துதிக்கையை மேலே உயர்த்தி நீட்டிய வண்ணம், ஆடாது அசையாது மயங்கி நின்றது.

இதைக் கண்ட திருவேங்கட மலைவாழ் வேடர்கள் யானையைப் பிடிக்க மெல்ல அருகில் வந்து வளைத்துக் கொண்டனர்.

இதைக் கண்ட அதே மலை வாழ் குறவர்கள், மிகுந்த பக்தியுடைய அந்த யானையின் மேல் பரிவு கொண்டு, வேடர்களின் வலையினின்று யானையை விடுவிக்க, அவ்வேடர்களின் மேல் அம்பு தொடுக்க, வில்லை எடுத்துக் கொண்டு ஓடினார்களாம். அத்தகைய சிறப்பு வாய்ந்த திருமலையை நாமெல்லாம வலம் வந்து ஆடிப்பாடி மகிழ்ந்தால் திருவேங்கடவனின் அருள் நமக்குக் கிட்டும் என்கின்றார் ஆழ்வார்.

**சிறப்புப் பொருள்கள்**

1. கஜேந்திரன் தாமரை மலரை திருமாலின் திருவடிகளிலிட்டு வழிபட்டதைப் போல அவன் வழித் தோன்றலாகிய திருவேங்கடத்தில் வாழ்ந்த இந்த யானையும்

**"எந்தை தந்தை தந்தை தந்தை தன் மூத்தப்பன் ஏழ்படி கால் தொடங்கி வந்து வழி வழி ஆட் செய்கின்றோம்"**

என்ற பெரியாழ்வார் திருவாக்கின் படி திரு வேங்கடவனுக்கு நந்தா விளக்கு வைக்கும் பகவத் தொண்டாற்ற சந்திரனைப் பிடித்து நந்தா விளக்காக வைக்க எண்ணிய செயல் மெய் சிலிர்க்க வைக்கின்றது.

சூரியன் ஒளி பட்டு பிரதிபலித்து சந்திரன் ஒளிவிடுவது போல திருவேங்கடவன் வலக்கரத்தில

உள்ள திருச் சக்கரத்தின் ஒளி பட்டு இங்கும் ஒளிவீசும் என்று யானை கருதியது போலும். என்னே ! யானையின் தீர்க்க தரிசனமும் அறிவியல் கருத்தும். எண்ணி எண்ணி இன்புறத் தக்கதாகும்.

2. பகவானுக்குச் சந்திரனை நந்தா விளக்காக வைக்க முயற்சித்த யானையின் பகவத் தொண்டிற்கு இடையூறாகச் செயல்பட்ட வேடர்களைத் துன்புறுத்தி யானையை மீட்க முயன்ற குறவர்களின் செயல், திருமாலின் அவதாரச் செயலோடு ஒப்பிட்டு மகிழத்தக்கதாகும். எம்பெருமான் தர்மத்தை நிலை நாட்ட நல்லோரைக் காக்க தீயவர்களை அழிக்க யுகங்கள் தோறும் அவதரிப்பதைப் போலவும்.

"பரித்ராணாய சாதூனாம் விநாசாய சதுஷ்க்ருதாம்
தர்ம சமஸ்த்தாப நார்த்தாய சம்பவாமி யுகே யுகே! "
(பகவத் கீதை . அத். 4.சு.8)

எனும் கீதா வாக்கியத்திற்கு இணங்கவும், இம்மலைவாழ் குறவர்கள் நந்தா விளக்கேற்றும் தர்மத்தைச் செய்ய முயற்சித்த பகவத் பக்தி கொண்ட நல்லதாகிய யானையைக் காக்க, அந்த யானைக்கு இடையூறு செய்த வேடர்களாகிய தீயவர்களை அழிக்க, எம்பெருமான் யுகங்கள் தோறும் அவதரித்ததைப் போல குறவர்கள் தோன்றினர் என்று பொருள் கொள்வது சாலச் சிறந்ததாகும்.

3. திருவேங்கடவனுக்கு நந்தா விளக்கு வைக்க முயற்சித்த யானை ஐயறிவுடைய விலங்காயினும், பகுத்தறிவோடு ஆறறிவு படைத்த மக்கள் செய்யும் செயலுக்கு ஈடானதாகும். இங்கு மாக்களான யானை மக்களாக செயல்பட்டது. எனவே மாக்கள்

மக்களாவதும் உண்டு எனும் பழமொழி இங்கு மெய்ப்பிக்கப்படுகிறது.

4. பகவத் பக்தி கொண்ட யானையாகிய பாகவதனுக்கு ஏற்பட்ட இடரை நீக்க முயன்ற குறவர்களின் பாகவதத் தொண்டு பாராட்டுப் குரியது. பகவத் தொண்டிற்கு பாகவதத் தொண்டே எல்லை நிலம் என்பதை மலைவாழ் குறவர்கள் எவ்வாறு உணர்ந்தார்களோ ! அனைத்தும் அவனருளே.

"அவனருளல்லால் அருளுமில்லை பல்லார் அருளும் பழுது"

எனும் நம்மாழ்வார் திருவாக்கு இங்கு நோக்கத் தக்கதாகும்.

சக்கரவர்த்தித் திருமகன் தனக்கு நான்காவது தம்பியாகக் கொண்ட குகப் பெருமானின் வழித் தோன்றல்களாகிய வேடர்கள், பரம பாகவதனான கஜேந்திரன் வழித் தோன்றலாகிய யானைக்குத் துன்பம் செய்த போது அவர்களைத் எதிரிகளாகவே கருதினர் குறவர்கள் என்பது ஆராயத் தக்கது.

பரமபாகவதனான பிரகலாதனின் தந்தையே யாயினும் பாகவதனுக்குத் தீமை செய்ததால் அழிக்கப் பட்ட செய்தி இங்கு காணத்தக்கதாகும்.

ஆழ்வாரின் ஆழ்ந்த அனுபவங்கள் எண்ணி எண்ணி வியக்கத் தக்கனவாகும்.

பாசுரம்-47

"நன்மணி வண்ணனூர் ஆளியும் கோளரியும்
பொன்மணியும் முத்தமும் பூமரமும் - பன்மணி நீ
ரோடு பொருதுருளும் கானமும் வானரமும்
வேடு முடை வேங் கடம்"

யாளிகளும், வலிமை தங்கிய சிங்கங்களும், குரங்குகளும், வேடர்களும் வாழும் மலை திருவேங்கட மலையாகும். மற்றும் பொன்னையும், மாணிக்கங்களையும், முத்துக்களையும் மலர் மரங்களையும், பலவகைப் பட்ட இரத்தினங்களையும் அருவி நீர் அடித்துக் கொண்டு செல்லும் காடுகளும் நிறைந்த மலை திருவேங்கட மலையாகும். இத்திருமலையில் நீல மணி போன்ற வடிவையுடையவனான திருமால் வாழுகின்றான்.

பாசுரம்-48

"வேங்கடமே விண்ணோர் தொழுவதும்
மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும் -
வேங்கடமே
தானவரை வீழத்தன் ஆழிப்படை தொட்டு
வானவரைக் காப்பான் மலை."

உண்மையான பக்தியுடைய நித்ய சூரிகள் பரமபதத்திலே அனைத்து காலமும் இடைவிடாது பரமபத நாதனைத் தொழுது கொண்டிருக்கின்றனர். அது பகலவன் ஒளியில் விளக்கேற்றி வைப்பது போல் சிறப்படைவதில்லை. ஆனால் இருள் தருமா ஞாலமாகிய மண்ணுலகில் மெய்யறிவற்ற

மக்களிடையில் எளியவனாக அவதரித்து மெய்யறிவைப் புகட்டிய இந்நிலை மிகவும் எளிதாகும்.

திருவேங்கடத்திலே அர்ச்சை நிலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியிருந்து, தன்னைக் கண்டு வணங்கும் மக்களின் உடல் நோய்களையும் மன நோய்களையும் பாவங்களையும் எல்லாம் போக்கி, அவரவர் வேண்டியதை வேண்டியவாறு அளித்து அருள்புரிந்து வரும் மலை திருவேங்கட மலையாகும்.

விண்ணவர்க்குத் தொல்லை தந்த அரக்கர்களையெல்லாம் திருவாழியாழ்வானாலே அழித்தொழித்தவனான திருமாலே திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். வேங்கட மலை பாவங்களைப் போக்கும் மலை என்பதற்கு பிரமாண்ட புராணம் கூறும் ஒருவரலாற்றினைக் காண்போம்.

திருமலையின் மேற்கே உள்ள நந்தநபுரம் என்னும் ஊரில் புரந்தரனென்னும் அந்தணனுக்கு மாதவனென்னும் ஒரு மகன் இருந்தான். அம்மாதவன் தன் மனைவியாகிய சந்திர ரேகை என்பவளோடு பூஞ்சோலை ஒன்றில் விளையாடிக் கொண்டிருந்தான்.

அப்போது மாலினி எனும் சன்டாளக் கன்னிகையின் கட்டழகில் மயங்கி அவளுடன் சென்று இன்ப வாழ்க்கை வாழ்ந்தான். தன் மனைவிக்குத் துரோகம் செய்தான். மாலினி என்பவளுடன் சேர்ந்து புலால் உண்டு கள் குடித்து கைப் பொருளை யெல்லாம் இழந்து பின் வழிப்பறி, கொலை முதலியவற்றைச் செய்து, பொருள் சேர்த்து அவளுக்குக் கொடுத்து வாழ்ந்துவந்தான்.

பின்பு தரித்திரனாகி அவளால் வெறுக்கப்பட்டு துரத்தப்பட்டான். மொய்த்த வல்வினைகளால் பித்தன் போல் அலைந்து திரிந்தான். இறுதியில் திருவேங்கட மலையை அடைந்தான். தன் தவறுகளை உணர்ந்து திருந்த நினைத்தான். திருவேங்கடவனை வணங்கி வழிபட்டான். அவன் பாவமெல்லாம தீய்ந்து சாம்பலாகிமுன்போலவே அந்தண உருவை அடைந்து திருமாலை வணங்கி பரமபத மடைந்தான் என்று பிரமாண்ட புராணம் கூறுகின்றது.

இங்கு "வெங்கொடும் பாவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல்-மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கட மலையானதென்று" என்னும் புராணச் செய்யுள் காணத்தக்கதாகும்.

பரமபதத்திலுள்ள நித்ய சூரிகளும் திருவேங்கடம் வந்து திருமாலின் இரக்கம் எளிமையாகிய குணங்களை அனுபவிக்கின்றனர்.

பாசுரம்-90

"வீற்றிருந்து விண்ணாள வேண்டுவார் வேங்கடத்தான்
பால் திருந்த வைத்தாரே பல்மலர்கள் மேல் திருந்த
வாழ்வர் வருமதி பார்த்து அன்பினராய் மற்றவர்க்கே
தாழ்வாய் இருப்பார் தமர்"

திருவேங்கட முடையான் திருவடிகளில் நறு மண மலர்களைத் தூவி வழிபட்டவர்களே பரமபதத்தில் பெருமையுடன் இருந்து , ஆட்சி செய்ய விரும்பி அப்பேறு பெற்றவர்கள் ஆவர்.

ஆயினும் எம்பெருமானுடை சீர்மைக் குணங்களை அறிந்து பக்தி செய்யும் திருமாலடியவர்கள் எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவர்கள் என்பதனை உணர்ந்து பகவத் தொண்டு செய்பவர்கள்.

எனவே எம்பெருமான் திருமாலடியவர்களை நம்முடையவர்கள் என்று அங்கீகரிக்கின்றான். ஆகவே பரமபதத்திலுள்ள நித்ய சூரிகளை விட மண்ணுலகில் உள்ள உத்தமமான திருமாலடியவர்களே சிறந்து வாழ்வர் என்பது காட்டப்படுகிறது.

உத்தமமான பாகவதர்கள் எல்லாரினும் மேம்பட்டவர்கள் என்பது இப்பாசுரத்தின் சார மான கருத்தாகும். பாகவதர்கள் எம்பெருமானுடைய திருவுள்ளத்தைப் பின் பற்றி செல்பவர்கள் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

நான்காம் திருவந்தாதி முற்றுப் பெற்றது.

## திருச்சந்த விருத்தம்

பாசுரம்-60

"செழுங்கொழும் பெரும்பனி பொழிந்திட
உயர்ந்த வேய்
விழுந்துலர்ந்தெழுந்து விண்புடைக்கும் வேங்கடத்துள்
நின்று
எழுந்திருந்து தேன் பொருந்து பூம்பொழில் தழைக்
கொழுஞ்
செழுந்தடங் குடந்தையுள் கிடந்த மாலு மல்லையே ?"

கனத்த மூடுபனியானது இடைவிடாது தாரை தாரையாய்ச் சொரிய, அப்பனியின் கனத்தாலே மிகவும் உயர்ந்த மூங்கில்கள் தரையளவு சாய்ந்து, பின்பு சூரியனின் ஒளிக்கதிர்களாலே, மூங்கில் இலையில் தூங்கிக் கொண்டிருந்த பனி நீரானது உலர்ந்து போவதாலே, அம்மூங்கில்கள் உயரக் கிளம்பி விண்ணை எட்டி முட்டும் இயற்கை வளம் வாய்ந்தது திருவேங்கடமலை. இத்திருவேங்கட மலையில் அர்ச்சை வடிவில் நின்ற திருக் கோலத்தில் எழுந்தருளியுள்ளான் எம்பெருமான் ஸ்ரீ மந் நாராயணன். அடியார்களுக்கு அருள் புரிய இத்திருமலையில் எழுந்தருளி அருள் சுரக்கும் திருமாலின் எளிமை தான் என்னே !

**சிறந்த பொருள்**

மூங்கில்கள் இருள் சூழ்ந்த இராப் பொழுதில் மூடுபனியின் கனம் தாங்காமல் தரையளவு சாய்ந்து கிடந்து கதிரவன் ஒளியால் பனி நீர் ஆவியாகி மறைய நிமிர்ந்து விடும் என்பது இயற்கை காட்டும் பொருள்.(அதைப் போல) அறியாமையாகிய இருள் சூழ்ந்த இவ்வுலக மக்கள் கம்சாரமாகிய பாவக்கடல் நீரில் ஆழ்ந்து வருந்தி சாய்ந்து கிடப்பர். கதிரவனாகிய எம்பெருமான் திருவருளாகிய ஒளி பட்டவுடன் அறியாமையாகிய பாவம் தீய்ந்து, நல்வாழ்வை அடைந்து நிமிர்ந்து நிற்பர் எனும் சிறந்த பொருள் காட்டப்படுவது உள்ளுறை உவமமாகும்.

**கவிச் சக்ரவர்த்தி கம்பரையே கலக்கிய உவமை :** ஒருநாள் கம்பர் காலையில் வயல்பக்கம் சென்றார். அங்கு ஏற்றம் இரைப்பவர் கீழ்க்கண்ட ஏற்றப் பாட்டைப் பாடி பாதியிலே விட்டு உணவு அருந்த இறங்கி விட்டனர்.

**"மூங்கில் இலைமேலே தூங்கும் "**

மூங்கில் இலையோ மிகச் சிறிய மெல்லிய இலை, அதன் மேல் தூங்குவது எதுவாயிருக்கும் என்று காண முயன்றார். ஆனால் முடியவில்லை. எப்படியும் ஏற்றம் இரைப்பவன் உண்டு களைப்பாறி ஏற்றம் இரைக்க வருவான், பாடலைத் தொடர்வான் என்று அங்கேயே அமர்ந்து விட்டார். ஏற்றம் இரைப்பவன் தன் தொழிலைத் தொடங்கி பாட்டையும் தொடர்ந்தான் பாடினான் பின் அடிகளை.

**"மூங்கில் இலைமேலே தூங்கும் பனிநீரை**
**வாங்கும் கதிரோனே "**

இதைக் கேட்ட கம்பர் காலையில், சிறிய மெல்லிய மூங்கில் இலையின் பேரில் பனிநீர் தூங்கும் என்பதையும், அப்பனி நீரை வாங்கும் கதிரவனைப் போல, எங்கள் துன்பத்தையும் சூரிய நாராயணனான திருமாலே நீக்குவான் என்ற பொருள் கொண்ட பாடலின உவமை நயத்தை எண்ணி எண்ணி வியந்தார்.

ஏற்றம் இரைப்பவரைப் பாராட்டி மகிழ்ந்தார். அத்துடன் ஏற்றப் பாட்டிற்கு எதிர் பாட்டுண்டோ

(பாட்டில்லை) என்றும் புகழ்ந்தார். இந்த உவமைப் பொருள் யுகங்கடந்த நமது திருமழிசை யாழ்வாரின் பாசுரத்தில கூறப்பட்டுள்ளதால் அருளிச் செயலின் இலக்கிய வளத்தை அறிய முடிகிறது.

பாசுரம்–81

"கடைந்து பாற்கடல் கிடந்து காலநேமியைக் கடிந்து
உடைந்த வாலிதன் தனக்கு உதவவந்து இராமனாய்
மிடைந்த ஏழ்மரங்களும் அடங்கவெய்து வேங்கடம்
அடைந்த மால் பாதமே அடைந்து நாளும்
உய்ம்மினோ"

அன்பர்களாகிய திருமாலடியார்களே ! இல்லற இன்பத்தில் ஆழ்ந்து அமிழ்ந்து கிடக்கும் சம்சாரிகளே ! தேவர்களுக்காக திருப்பாற்கடலைக் கடைந்து. அங்கேயே ஷீராப்திநாதனாக அறிதுயிலில் கண்வளந்தருளுகின்றவனும் தாரகாசுரப் போரில் மிகவும் கொடியவனான காலநேமி என்னும் இராவணனின் பாட்டனை அழித்தவனும் அண்ணன்

வாலிக்காக பயந்து நடுங்கிக் கொண்டிருந்த அவன் தம்பி சுக்ரீவனுடைய நம்பிக்கைக்காக, ஒரே அம்பினால் ஏழமரங்களையும், ஏழு மலைகளையும் துளைத்தவனுமாகிய ஸ்ரீ மந் நாராயணன் திருவேங்கட மலையில் திருவேங்கடவனாக நின்ற திருக்கோலத்தில் அடியவர்களைக் காப்பதற்காக எழுந்தருளியுள்ளான். அவனுடைய திருவடிகளை தினமும் மலரிட்டு வணங்கி, அவனருள் பெற்று பல்லாண்டு வாழுங்கள் என்கின்றார் திருமழிசையாழ்வார்.

திருமழியையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் 96 பாசுரங்களையும், திருச்சந்த விருத்தத்தில் 120 பாசுரங்களையும் பாடியுள்ளார். இவற்றுள் நான்முகன் திருவந்தாதியில் 12 பாசுரங்களும் திருச்சந்த

விருத்தத்தில் 2 பாசுரங்களும் திருவேங்கவன் பற்றிப் பாடியுள்ளார்.

**திருமழிசைப் பிரான் திருவடிகளே சரணம்.**



# 6. நம்மாழ்வாரும்



திருவேங்கடவனும்

# நம்மாழ்வாரும் திருவேங்கடவனும்

**நம்மாழ்வார் அவதாரம் :** நம்மாழ்வார் பாண்டிய நாட்டில் திருக்குருகூரில் கலியுகம் பிரமாதி ஆண்டு வைகாசித் திங்கள், விசாக நன்னாள் வெள்ளிக்கிழமை சதுர்த்தி திதி கடக ஓரையில் சேனை முதலியாரின் அம்சமாக, காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் திருக்குறுங்குடி நம்பியெம்பெருமான் திருவருளால் அவதரித்தார்.

இவர் மற்றைய ஆழ்வார்களைக் காட்டிலும் வேறுபட்டு 16 ஆண்டுகள் புளியமரமாகத் தோன்றிய திருவனந்தாழ்வான் கீழே எந்தவித உலக மக்கட் செயல் எதற்கும் கட்டுப் படாமல் இருந்து வந்தார். திருவயோத்தி சென்றிருந்த மதுரகவி யாழ்வார் குறிப்பால் அறிந்து, திருக்குருகூர் வந்து, நம்மாழ்வாரை கண் விழிக்கச் செய்து பேசவும் வைத்தார். அவரையே ஆசாரியனாகவும் கொண்டு, அவரை மட்டுமே பாடினர். நம்மாழ்வாரின் பாசுரங்களையே பாடி மகிழ்ந்தார். இவரது பெருமையை தமிழ்ச் சங்கத்தார் அறிந்து பாராட்டும்படிச் செய்தார் மதுர கவிகள். நம்மாழ்வார் திருக்குருகூரில் இருந்துகொண்டே 36 திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள பெருமான்களைக் கண்டு வணங்கி, அவர்களை மங்களா சாசனம் செய்தார். இவர் உடல் என்றும், மற்ற ஆழ்வார்கள் உறுப்புகள் என்றும் வைணவச் சான்றோர் கூறுகின்றனர். இவர் திருமாலின் திருவடி நிலைகளாக இருப்பதால், எம்பெருமானுடைய திருவடிகள் சடாரி என்றும், சடகோபர் என்றும் வழங்கப்படுகின்றன. இவை பக்தர்களின் தலைகளில் பொருத்தப்பட்டு

வாழ்த்தப்படுகின்றனர். இவருக்கு மாறன். சடகோபர், வகுளாபரணர், மகிழ்மாலை மார்பினர், பராங்குசர் போன்ற பல சிறப்பு பெயர்கள் சூட்டப்பட்டன.

இவர் இருக்கு வேத சாரமாக திருவிருத்தத்தையும், யஜுர் வேத சாரமாக திருவாசிரியத்தையும், அதர்வண வேத சாரமாக பெரிய திருவந்தாதியையும், சாம வேத சாரமாக திருவாய்மொழியையும் அருளிச் செயல்களாக திருவாய் மலர்ந்தருளியுள்ளார். இவர் வாழ்நாள் முழுவதும் வேறு எதிலும் மனதைச் செலுத்தாமல், எம்பெருமானோடு கூடி மகிழ்ந்தும், அவனைப் பிரிந்து துன்புற்றும், முப்பத்தைந்து ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்திருந்து, எம்பெருமான் திருநாடாகிய அந்தமில் பேரின்பத்தை அடைந்தருளினார்.

நம்மாழ்வார் திருமலையில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனின் சிறப்பைத் தம் பாசுரங்களில் மிகச் சிறப்பாகப் பாடியுள்ளார். அவற்றை இங்கு காண்போம்.

இவரது அவதாரச் சிறப்பைக் கீழ்காணும் பாசுரங்களால் அறியலாம்.

**"ஏரார் வைகாசி விசாகத்தின் ஏற்றத்தை**
**பாரோர் அறியப் பகர்கின்றேன் - சீராரும்**
**வேதந் தமிழ்செய்த மெய்யன் எழில் குருகை**
**நாதன் அவதரித்த நாள்."**

**"வானணியும் மாமாடக் குருகை மன்னன் வாழியே !**
**வைகாசி விசாகத்தில் வந்துதித்தான் வாழியே !**
**திருக்குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே !"**
(வாழித்திருநாமம் -6)

**திருவேங்கடத்தைப் பாடிய பாசுரங்கள்**

1. திருவிருத்தம்.....................................8
2.பெரிய திருவந்தாதி...........................1
3.திருவாய் மொழி..............................34
4.திருவாய்மொழி நூற்றந்தாதி.........1
மொத்தம்.......44

## திருவிருத்தம்

பாசுரம்-8

**"காண்கின்றனகளும் கேட்கின் றனகளும் காணில் இந்நாள்**
**பாண்குன்ற நாடர் பயில்கின்றன இதெல்லாம் அறிந்தோம்**
**மாண் குன்ற மேந்தி தண்மாமலை வேங்கடத்து உம்பர்நம்பும்**
**சேண் குன்றம் சென்று பொருள்படைப் பான்கற்ற திண்ணனவே"**

இப்பாசுரம் - தலைமகள் தோழியை நோக்கிக் கூறியதாகும். தலைமகன் பொருள் தேடும் பொருட்டு பிரியப் போவதை அறிந்த தோழி தலைவனை நோக்கிக் கூறியதாகக் கொள்ளலாம்.

தலைமகள் தோழியை நோக்கி, அன்பு மிகுந்த என் தோழியே! மலைகளையுடையதான நாட்டுக்குத் தலைவனான நம் தலைவன், இன்றைய நாளில் செய்கின்ற பலவகையான செயல்களும், சொல்லுகின்ற சொற்களும், ஆராய்ந்து பார்த்தால் வெளி உபசாரமாகத் தோன்றுகின்றன. இவ்வாறு வரம்பு கடந்த விதமாக இவர் செய்வதற்கும், சொல்வதற்கும் ஒரு கருத்து

இருக்கவேண்டும். அது எதுவாக இருக்கக் கூடுமென்றால், பெருமை மிக்க கோவர்த்தன மலையைக் கையிலே தூக்கி, பசுக்கூட்டங்களையும், கோபர்-கோபிகைகளையும், கோகுலத்தையும் காத்த கண்ணனெம்பெருமான் உகந்து எழுந்தருளியிருக்கும், குளிர்ச்சி பொருந்தியதும் தேவர் விரும்பக் கூடியதுமாகிய திருவேங்கடமாமலையில் சென்று, பொருள் தேடுவதற்காகவே நம்மைப் பிரிந்து போக நினைக்காமல் இருந்தாராகில் இத்தகைய புதிய செயல்களைச் செய்யவும், புதிய சொற்களைப் பேசவும் நேராது.

பாசுரம்-10

"மாயோன் வட திரு வேங்கட நாடவல்லிக்
கொடிகாள் !
நோயோ உரைக்கிலும் கேட்கின்றிலீர் உரையீர் நுமது
வாயோ ? அதுவன்றி வல்வினையேனும்
கிளியுமெள்கும்
ஆயோ ? அடும் தொண்டையோ ? அறையோ ?
இதறிவரிதே. "

ஆச்சரியமான குணங்களையுடைய எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் வட வேங்கடமலையில் வாழும் பூங்கொடிகள் போன்ற இளம் பெண்களே ! நான் படும் நோயினை நானே சொல்லிக் கொண்டாலும், நீங்கள் காது கொடுத்து கேட்கவில்லை. நான் வருத்தப்படுவது எனக்கு மட்டும் தெரிகிறதேயொழிய, அதற்குக் காரணம் என்ன என்பது எனக்குத் தெரிய வில்லை. எனவே தயவுசெய்து நீங்களே சொல்லுங்கள்.

உங்களுடைய வாய் அழகோ ? அல்லது நானும் என் கிளியும் தளரும்படியான உங்களுடைய ஆயோ ! என்ற சொல்லோ ? கோவைக்கனி போல் சிவந்த உங்களது உதரத்தின் அழகோ, எனது உயிரைக் கொல்லுகின்றது. இவற்றுள் இது தான் என்னை வருத்துகின்றது என்று என்னால் அறியமுடியவில்லை. தயவு செய்து இதனை நீங்களே சொல்லுங்கள்.

சிறப்புப் பொருள் : ஆச்சரியமான திருக்கல்யாண குணங்களையுடைய எம்பெருமான் இவ்வுலக மக்களைக் காக்கும் பொருட்டு, தன்னைத் தாழ்த்திக் கொண்டு பரமபதத்தை விட்டுத் திருமலையில் வந்து எழுந்தருளியிருக்கின்றான். இந்த எளிமையை நாடுபவரும் கோல் தேடி ஓடும் கொடி போல் எம்பெருமானைப் பற்றுபவருமான ஆழ்வாரே ! உம்மிடத்து நாங்கள் வைத்திருக்கும் பக்தியினால், நாங்கள் படும் துன்பத்தைச் சொன்னாலும் தேவரீர் கேட்க மாட்டேன் என்கின்றீர். உமது திருமுக மண்டல மலர்ச்சியோ அல்லது உம்மைப் பிரிந்து போக முடியாதபடி கட்டுகின்ற பாச பந்தமுடைய நாமும், எம்பெருமானும் ஈடுபடும் படியான உமது திருவாய் மொழியோ, திருவாயின் அழகோ, குரலோசையோ, இவற்றில் எம்மை வருத்துவது எது வென்று பகுத்தறிவது கடினமாயுள்ளது. தயவு செய்து நீரே உறுதி செய்து சொல்லும்.

பாசுரம்-15

**"கயலோ நும்கண்கள் ? என்று களிறு வினவி நிற்றீர்**
**அயலோர் அறியிலும் ஈதென்ன வார்த்தை ? கடல்**
**கவர்ந்த**

**புயலோடு லாங்கொண்டல் வண்ணன் புனவேங்கடத்**
**தெம்மொடும்**
**பயலோ விலீர் கொல்லை காக்கின்ற நாளும்**
**பலபலவே"**

ஐயா ! இங்கு யானை வந்ததா என்று கேட்டுக் கொண்டு வந்தீர். ஆனால் அந்த கேள்வியோடு நில்லாமல், எங்கள் கண்கள் மீன் போன்ற கண்களோ என்று கேட்கின்றீர். இந்த பொருந்தாத கேள்வியை அயலார் கேட்டால் என்ன நினைப்பார்கள் ? இவர்கள் இருவருக்கும் ஏதோ ரகசிய உறவு உண்டு போலும் என்றல்லவோ நினைப்பார்கள். ஆதலால், நீர் கூட்டுப் பயிர் பார்ப்பவர்போல் இங்கு எம்முடன் நீண்ட நேரம் வீண் பேச்சுப் பேசி நிற்பது தகுதியல்ல.

நீருண்ட மேகம் போல் கரிய திருமேனியையுடைய எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவேங்கட மலையில் நாங்கள் பலவருடங்களாகத் தினமும் தினைப்புனம் காத்து வருகின்றோம். ஆனால் இப்புதுமையை ஒரு நாளும் கண்டதில்லை. இவை கண்களோ ? கயல்களோ? என்ற தலைவன் கேள்வியைக் குறிப்பால் அறிந்த தோழி, அவனது ஆவலை மறுப்பதாகப் பிறர்க்குத் தோன்றும் படிக் கூறுகின்றாள். (அல்லது)

தலைவன் தலைவியையும் தோழியையும் நோக்கி நும் கண்கள் கயலோ என்றான். இதைக் கேட்ட தோழி தலைவனை நோக்கி, எங்கள் கண்ணழகில் ஈடுபட்டுப் பேசினீர் உமது உகப்புக்கு நாங்கள் மிக்க மகிழ்ச்சியடைந்தோம். ஆனால் யானையைப் பற்றிக் கேட்டீரே, அது எதற்கு? இப்படிக்

களிறு வினவி நிற்பது உமக்குத் தகுமோ? அன்பை அயலார் அறிந்தாலும் அறியட்டும். அதனால்

நமக்கென்ன? வந்த காரியத்தை விட்டுக் களிறு வினவுதல் ஒரு வார்த்தையோ ? நாங்கள் உமக்கு அயலார் அல்லோம். உமது வரவை எதிர்நோக்கி நாங்கள் நெடுநாட்களாகத் தினைக் கொல்லையைக் காத்திருக்கின்றோம். இன்று வரை வரவில்லையே என்று வருந்தினாள் தலைவி. இவ்வாறு தலைமகளின் காதலைத் தோழி தலைமகனுக்குக் குறித்துக் காட்டினாள். இதனைத் தமிழர்கள் வேழம் வினாதல் என்பார்கள்.

பாசுரம்-31

"இசைமின்கள் தூதென்று இசைத்தால்
இசையிலம் என் தலைமேல்
அசைமின்கள் என்றால் அசையுங்கொலாம்?
அம்பொன் மாமணிகள்
திசைமின் மிளிரும் திருவேங்கடத்து வன்தாள் சிமய
மிசைமின் மிளிரிய போவான் வழிக் கொண்ட
மேகங்களே !"

அழகிய பொன்னும் , சிறந்த நவமணிகளும் எங்கும் மின்னல் போல் ஒளிவீசும் சிறந்த திருவேங்கட மலையின் மேல் சென்று சேருவதற்காகப் புறப்பட்ட மாமுகில்களை நோக்கித் தலைகமள், எனது தலைமகனுக்கு என் நிலையைச் சொல்லும் பொருட்டு எனக்குத் தூதாக நீங்கள் செல்ல வேண்டும் என்று வேண்டினாள். அதற்கு அம்மேகங்கள் உடன் படவில்லை. மீண்டும் அவற்றை நோக்கி, எனது

தலையின் மேல் உங்கள் பாதங்களை வைத்தாவது நீங்கள் சொல்லுங்கள் என்று வேண்டினாள். அதற்கும் அவை இசையவில்லை. அதை நினைத்து தலைவி வருந்துகிறாள்.

**சிறப்புப் பொருள்** : பாகவதர்கள், ஆழ்வாருடைய பகவத் குணானுபவமான நெஞ்சை மீளச் செய்வது எம்பெருமானுக்கே அரிது என்றால் நம்மால் முடியுமோ என்று கைவிட்டனர்.எனவே ஆழ்வார் திருமலையை நோக்கிச் செல்லும் சிலரைக் கண்டு, இவர் நம் குறையை எம்பெருமானிடம் விண்ணப்பஞ் செய்து , நம்மை அவனோடு சேர்ப்பதற்கு ஏற்ற பரிந்துரையாளர் ஆவர் என்று தீர்மானித்து அவர்களை ஆசார்யர்களாக ஏற்றுக் கொண்டார். அவர்கள் இவருக்கு ஆசார்யர்களாக இசையாமையால் நமது தலைமேல் இவர்களின் திருவடிகளை வைப்பதும் சிறந்த செயலாகும் என்று கருதி அதனை வேண்டுகின்றார்.

பாசுரம்-50

**"ஒண்ணுதல் மாமையொளி பயவாமை விரைந்து நந்தேர்**
**நண்ணுதல் வேண்டும் வலவ ! கடாகின்று தேன் நவின்ற**
**விண்முதல் நாயகன் நீள் முடி வெணமுத்த வாசிகைத்தாய்**
**மண்முதல் சேர்வுற்று அருவி செய்யா நிற்கும் மாமலைக்கே"**

நெடுநாள் நாயகியைப் பிரிந்த நாயகன் , தான் மீண்டும் வருவதாக முன்பு சொல்லி வந்த சமயம் , நெருங்கியதைக் கண்டான். அவள் ஆற்றாமையைப்

போக்கக் கருதினான். நெடுநாள் கடந்து சென்ற வழியைச் சிறிது நேரத்தில் கடந்து, விரைவில் தலைவியைக் காண ஆவலடைந்தான். எனவே, தேரை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனுக்குக் கட்டளை யிட்டான்.

ஓ பாகனே ! அழகிய நெற்றியையுடைய என் தலைவியின் மேனியில் பிரிவால் ஏற்படும் பசலை நிறம் தோன்றுவதற்கு முன், வண்டுகள் பாடப் பெற்றதும், மலையுச்சியில் தோன்றி மலையடிவாரம் வரை பாயும் அருவிகள் பாயக் கூடியதும், குளிர்ச்சியுடன் இருப்பதும் ஆகிய திருவேங்கட மலைக்குப் போய்ச் சேர வேண்டும். எனவே தேரை விரைவாகச் செலுத்து என்றான் தலைவன்.

சிறப்புப் பொருள் : எம்பெருமானையும் அவனடியார்களையும் பிரியும் துயர்நீங்க, ஆழ்வாரைத் தேற்ற விருப்பங்கொண்டனர் பாகவதர்கள். பாகவதர்கள் தங்கள் மனதை விரைவாகச் செல்லத்தூண்டி , திருமண் காப்பை அணிந்துள்ள ஆழ்வார் அழகு கெடுவதன் முன்னம் ஆழ்வார் எழுந்தருளியுள்ள மேலான இடத்தைச் சென்று சேருகின்றனர்.

பாசுரம்-60

**"முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங் குழல் குறிய**
**கலையோ அரையில்லை நாவோ குழறும் கடல் மண்ணெல்லாம்**
**விலையோ வெனமிளிரும் கண் இவள்பரமே ! பெருமான்**

**மலையோ திருவேங் கடமென்று கற்கின்ற வாசகமே"**

தலைவனை வசப்படுத்துவது, மார்பழகாலும், சொல் திறமையாலும், கருத்தோடு கடைக்கண் பார்வையாலும் இயலும். ஆனால் இத்தலைவிக்கோ மார்பகமும் அரும்பவில்லை, குழலும் நீண்டு வளரவில்லை, ஆடையுடுக்கவும் தெரியவில்லை, பேசும் திறமையும் இல்லை, கடைக்கண்ணால் கருத்தைத் தெரிவிக்கவும் தெரியவில்லை. இத்தகைய இளம் பெண்ணாயிருக்கும் இப்பேதைப் பெண் எப்படித் தலைவனிடம் வினாவுதல் பொருந்தும். இது மிகவும் ஆச்சரிய மாகவும் விசித்திரமாகவும் இருக்கின்றது.

**சிறப்புப் பொருள்** : எம்பெருமானை அடைந்து அவனை அநுபவிக்க உறுதுணையான, பக்தி முதிர்ந்து பரம பக்தியாகவும் மாறவுமில்லை, தலையாலே பிரணாமம் பூர்ணமாகத் தோன்றவில்லை, அறையில் ஆடையை இறுக உடுத்திக் கொண்டு முன்னே கிளம்பும் முயற்சியுமில்லை இடைவிடாது பெருமான் பெயர்களைச் சொல்லுவது மில்லை, தியான ரூபமான ஞானம் இன்னும் பிறக்கவில்லை. இத்தகையவர் பக்தியில் இறைவனை அடையும் முயற்சி தகுமோ? தகாது.

பாசுரம்-67

**"காவியும் நீலமும் வேலும் கயலும் பலபலவென்று**
**ஆவியின் தன்மை அளவல்ல பாரிப்பு அசுரரைச் செற்ற**
**மாவியம் புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம் சேர்**
**தூவியம் பேடையன்னாள்கண்க ளாய துணைமலரே"**

அசுரர்களை அழித்தவனும், பெரிய ஆச்சரியமான கருடப் பறவைமேல ஏறிச் செல்லுகின்றவனுமாகிய திருமாமகள் கேள்வனான திருமால், திருவேங்கட மாமலையில் எழுந்தருளியுள்ளான். அம்மலையில் வாழ்கின்ற அன்னப் பேடை போன்ற நடையழகுடைய வளான தலைவியின் இருதாமரைப் பூக்களைப் போன்ற கண்கள் செம்மையால் செங்கழுநீர்ப் பூவையும், கருமையாலும் கூர்மையாலும் நீலோத்பல மலரையும், ஒளியாலும் வருத்தும் தன்மையினாலும் வேலாயுதத்தையும், குளிர்ச்சியாலும் வடிவத்தாலும் மீனையும், மருட்சியால் மானையும் ஒத்தவை. அத்தகைய தலைவி வெற்றி கொண்டு வருத்துவதற்கு அடிகோலிய பரப்பு எனது உயிரின் தன்மைக்கு ஏற்ற அளவல்ல. மிகப் பெரியது. அவைகளின் அளவு மெல்லிய என் உயிரை மாய்க்கத் தேவையில்லை.

சிறப்புப் பொருள் : தீயவர்களை அழித்து, நல்லோரைக் காக்கும் ஒழுக்கச் சீலனும், கருடனை வாகனமாகக் கொண்டவனும், வேதங்களாலும், உத்தம புராணங்களாலும் இவன் புகழை எடுத்தோத முடியாத சிறப்பையுடையவனும், பரம கருணா மூர்த்தியானவனும், அழகு மிக்க மங்கள கரமான திருமேனியையும், கணப் பொழுதும் நீங்காது உறைவேன் என்று திருமகள் வாழும் திருமார்பினையுடையவனும், ஆகிய திருமால் திருவேங்கட மலையில் வாழ்கின்றான். இத்திருவேங்கட மாமலையில் மிக்க ஈடுபாடுடைய ஆழ்வார், தமது ஞான வைபவத்திற்கு எம்மை வய்ப்படுத்திக் கொள்வது ஒரு பெரிய காரியமோ ? இல்லை என்கின்றார்.

தமக்கும் தம்மடியார்க்கும் துணையாகின்ற பரந்த ஞானமும் அனுட்டானங்களும் இருமலர்களாய கண்கள் என்கின்றது.

அந்த ஞானம் செம்மையான

காவியை வென்றது = ராஜோ குணத்தைக் கடந்தது.
நீலத்தை வென்றது = கரிய நிறமான தபோ
குணத்தைக் கடந்தது.
வேலை வென்றது = வெண்மை நிறமான சத்வ
குணத்தைக் கடந்தது.
கயலை வென்றது =இம்முக்குணங்களையும் கடந்து
சலனமின்மையை சொன்னது.

பாசுரம்-81

**"உறுகின்ற கன்மங்கள் மேலன ஓர்ப்பிலராய்**
**இவளைப்**
**பெறுகின்ற தாயர் மெய்ந் நொந்து பெறார்கொல்!**
**துழாய் குழல் வாய்த்**
**துறுகின்றிலர் தொல்லை வேங்கட மாட்டவும்**
**சூழ்கின்றிலர்**
**இறுகின்றதால் இவளாகம் மெல்லாவி யெரி**
**கொள்ளவே "**

எம்பெருமானகிய தலைவனை இடைவிடாது நினைத்துக் கொண்டேயிருந்ததால் நம்மாழ்வாராகிய பாராங்குச நாயகி அவனை அடைய முடியாமையால் உள்ளத்து நோயும் உடல் நோயும் உண்டாயிற்று.

இதையறிந்த தலைவியின் தாய், காம நோய் என்றறியாமல் வெறியாட்டு முதலிய செயல்களில் ஈடுபட்டனர். அதுவும் குலதெய்வமாகிய

திருவேங்கடவனை விட்டு, இதர தெய்வ வணக்கம் செய்தனர். நோய் ஒன்றாக இருக்க, மருந்து வேறாக இருந்தது. இதையறிந்த தலைவி மேலும் மிகவும் வருந்த, தலைவி நிலையறிந்த தோழி, அத்தாய்மார் காதுகளில் கேட்கும் படி முன்னிலைப் படர்க்கையாகக் கூறுகின்றாள்.

இப்போது இத்தலைவிக்கு நேர்ந்துள்ள நோயின் தன்மையையும், அதனைத் தீர்க்கும் வழி முறையையும் ஆராய்ந்து அறியாத இவர்கள்,

வெறியாட்டு முதலிய தேவையற்ற காரியங்களை வீணாகச் செய்கின்றனர். அந்தோ இவளைப் பெற்ற தாயும், வளர்ப்புத் தாயும், மெய் நொந்து பெற்றவர்களாய் இருந்தால், இவள் பிழைக்கும் வழியில் முயலாது வேண்டாத வேறு வழிகளிலே தலையிடுவார்களோ.

இவளுக்கு ஏற்பட்ட நோய் திருவேங்கடவன் பற்றியதால், அவன் அணிந்த திருத்துழாய் மாலையை முடியில் சூட்ட வேண்டும். திருவேங்கடத்திற்கு அழைத்துச் சென்று திருவேங்கடச் சுனையில் நீராட்டி, அவனைக் கண்டு வணங்கச் செய்ய வேண்டும். இதுவே இவள் நோய்க்கு மருந்தாகும். ஆனால் இவர்கள் அதைச் செய்யாமல் இவளது உயிரைப் போக்கிவிடுவார்கள் போலிருக்கின்றதே ! என்ன பரிதாபம்.

ஆழ்வாருக்கு, எம்பெருமானது திருத்துழாய் முதலானவற்றை பெறுவதும், அவன் உகந்து

எழுந்தருளிய திருப்பதிகளிலே வசிப்பதும், அவன் திருப்பெயர்களைச் சொல்வதும் ஆகிய இவைகள் தாம் இந்த ஆற்றாமைக்கு மருந்தாகும். அவை செய்யாமையால் ஆழ்வாருக்குத் தளர்ச்சி மிகுந்தது.

## பெரிய திருவந்தாதி

ஆழ்வார் திருவிருத்தத்தில் தமது ஞானக் கண்ணுக்கு இலக்கான எம் பெருமானை நோக்கி, தேவரீரை அநுபவிப்பதற்கு இடையூறான உடல் தொடர்பைத் தொலைத்துத் தந்தருளவேணும், என்று வேண்டினார். ஆனால் எம்பெருமான் ஆழ்வார் ஆவலை உடனே நிறைவேற்றாமல் காலம் தாழ்த்தினார். ஆழ்வாரைக் கொண்டு உலகமக்களுக்கு சில திவ்யப்பிரபதங்களைத் தோற்றுவித்து, அவற்றால் சம்சாரிகளைத் திருத்திப் பணி கொள்ளத் திருவுள்ளம் பற்றினார். ஆழ்வாரை இந்நிலத்தில் நிறுத்துவதற்காகத் தன்னுடைய திருக்கல்யாண குணங்களை ஆழ்வாருக்குக் காட்டிக் கொடுத்தார்.

ஆழ்வார் அவற்றைக் கண்டு மிக்க மகிழ்ச்சியடைந்தார் திருவாசிரியத்தில். அப்படி அநுப்வித்த அநுபவம் உள்ளடங்காமல் கரை புரண்டு பெருகிச் செல்வதைப் பேசுகின்றார் இந்தப் பெரிய திருவந்தாதியில். இத்திருவந்தாதியில் ஒரு பாசுரத்தில் திருவேங்கடவனைப் பாடுகின்றார்.

பாசுரம் - 68

**"கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்**
**புல்லென் றொழிந்தனகொல்? ஏபாவம் - வெல்ல**

**நெடியான் நிறம் கரியான் உள்புகுந்து நீங்கான்**
**அடியேனது உள்ளத் தகம்"**

மிகவும் உயர்ந்தவனும் கரிய திருமேனியை உடைய கண்ணனெனும் பெருமான், தனது பெருங்கருணையினாலே, சிறியவனான எனது உள்ளத்தினுள்ளே புகுந்து கணநேரமும் பிரியமாட்டேன் என்று உறுதியாக வீற்றிருக்கின்றான். ஆகையால் முன்பு அவன் உகந்து எழுந்தருளிய திருப்பதிகளாகிய திருவேங்கடமாமலை, திருப்பாற்கடல், ஸ்ரீ வைகுந்த மாநகரம் முதலான இடங்களெல்லாம் அவன் இல்லாமையாலே பொலிவிழந்துவிட்டன. எனவே அங்கு சென்று சேவிப்பார் யாவரும் இல்லை. நடமாட்டமே இல்லை. அத்திருப்பதிகளெல்லாம் புல் மூடிப் போய் காடும் மேடுமாகிவட்டன. இங்கு, பனிக்கடலில், தடவரைவாய் எனும் பெரியாழ்வார் இருபாசுரங்களும் நோக்கத்தக்கனவாகும். இரவில் தூங்கும் முன் இப்பாசுரங்களைப் பலமுறை சொல்லவேண்டுமென்பர் பெரியோர்.

## திருவாய்மொழி

பாசுரம் - 1-8-3.

**"கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு**
**தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே."**

எம்பெருமான் மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் எளியனாய் திருவேங்கடமலையில் வீற்றிருக்கின்றான்.

என்னே அவனது எளிமையும், பரிவும், பாசமும் என்று முக்தராய்ப் பேசுகின்றார்.

இருள்தரு மாஞாலமாகிய இம் மண்ணுலகத்தார்க்கும், அந்தமில் பேரின்பம் தரும் விண்ணோர்க்கும் கண் ஆவான் எம்பெருமான்.

இரட்டைக் குழந்தையைப் பெற்ற தாயானவள் இருகுழந்தைகட்கும் பால் கொடுக்க வசதியாக நடுவிலே படுத்திருப்பதைப்போல விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் ஒன்றாகக் காட்சி தந்து அருள் சுரப்பதற்காகத் திருமலையில் எழுந்தருளியுள்ள நீர்மைக் குணந்தான் என்னே !

தமது திருக்கண்களால் இருவர்க்கும் அருள் பார்வையைப் பொழிகின்றான். இருவர்க்கும் அருள்புரிபவர் இல்லை என்கிற வருத்தமாகிய வெம்மை தீரும்படி குளிர்ச்சி பொருந்தய திருமலையில் எழுந்தருளியுள்ளான்.

பாசுரம் 2.6.9

**" எந்தாய் ! தண்திருவேங்கடத்துள் நின்றாய் !**
**இலங்கை செற்றாய் மராமரம்**
**பைந்தாள் ஏழும் உருவ ஒருவாளி கோத்தவில்லா**
**கொந்தார் தண்ணந் துழாயினாய் ! அமுதே ! உன்னை**
**என்னுள்ளே குழைத்த எம்**
**மைந்தா ! வானேறே ! இனி எங்குப் போகின்றதே ! "**

எனது ஆத்மத் தந்தையே ! அடியார்களுடைய அனைத்து துயரங்களும் தீரும்படி, குளிர்ச்சி பொருந்திய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே ! முன்பு இராமனாய் அவதரித்து, இலங்கை பொடிப் பொடியாய் போகும்படி அழித்தவனே ! குரங்கரசன் சுக்ரீவன், உமது வலிமையினை நம்பும்படியாக, ஒரே அம்பினால் ஏழு மராமரங்களின் பருத்த அடிப்பாகத்து புகுந்து துளைத்து, வீழ்த்தியதோடு, ஏழு மலைகளையும் துளைத்து உன் வில் திறனை அவர்களுக்குக் காட்டியதைப் போல, அடியேனுக்கும் காட்டினாய்.

குளிர்ச்சியும் அழகும், நறுமணமும் நிறைந்த திருத்துழாய் மாலைகளை அணிந்துகொண்டு, உம்முடைய மிக்க அழகினைக்காட்டினாய். அந்தமில் பேரின்பம் அளிக்கும் பரமபதத்திலே திருமாமணி மண்டபத்திலே பிராட்டியார்களாலும், நித்ய முக்தர்களாலும் மிக்க குதூகலத்துடன் அமுதம் போல் கருதப்பட்டவனே ! இவைகளையெல்லாம் எனக்குக்காட்டி, உம்மை அமுதம் போல் யான் அநுபவிக்கும்படிச் செய்தீர் ! உன்னை என்னுள்ளே இருக்கச் செய்த இளமைப்பருவமுடையவனே ! நித்ய சூரிகளுக்கு ஏறுபோன்றவனே ! நீ, என்னை விட்டுப் போவேன் என்று சொன்னாலும், உன்னால் முடியுமோ? போகத்தான் இடமுண்டோ? இல்லை என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம் - 2.6.10

"போகின்ற காலங்கள் போய காலங்கள் போகு
**காலங்கள் தாய் தந்தை**

**உயிராகின்றாய், உன்னை நான் அடைந்தேன்
விடுவேனோ?
பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே ! பரமா !
தண்வேங்கடம்
மேகின்றாய் ! தண்துழாய் விரைநாறு கண்ணியனே !"**

எங்கும் பரவுகின்ற பழமையான புகழையுடைய மூன்று உலகங்கட்கும் தலைவனே! திருக்கல்யாண குணங்களாலுண்டான புகழை உடையவனே ! உமக்கு ஒத்தவரும் மேற்பட்டவரும் இல்லாதவனாய் தனிக்கோல் செலுத்தும் செங்கோல் உடைய செல்வனே! எளியனாய், குளிர்ச்சி பொருந்திய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே ! குளிர்ச்சியானதும் அழகுடையதும், தூய்மையானதும் மிக்க நறுமணமுடையதும் ஆகிய திருத்துழாய் மாலைகள அணிந்திருப்பவனே ! இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் பெற்ற தாய் போல் அன்பு செலுத்துபவனும், தந்தையைப் போல் நன்மை செய்பவனும் உயிர்போல் இருப்பவனும் அனைத்து உறவினர்களாய் இருப்பவனும் ஆகிய எம்பெருமானே ! தேவரீரை அடியேன் ஒரு நாளும் விட மாட்டேன். தேவரீருக்கும் அடியேனுக்கும் இருக்கும் உறவு ஒழிக்க ஒழியாது. தேவரீர் அடியேனுக்குச் செய்யும் நன்மைகளையெல்லாம் அறிந்த பின்பும் அடியேனை விரும்பி ஒனறாகக் கலந்திருக்கும் உம்மை விடுவேனோ! விடமாட்டேன்.

பாசுரம் 2-7-11

**"பற்பநாபன் உயர்வற வுயரும் பெருந்திறலோன்**

**எற்பரன் என்னையாக்கிக் கொண்டு எனக்கே**
**தன்னைத் தந்த**
**கற்பகம் என் அமுதம் கார்முகில் போலும்**
**வேங்கடநல்**
**வெற்பன் விசும்போர் பிரான் எந்தை தாமோதரனே."**

நான்முகன் தோன்றிய தாமரையைத் தனது நாபியில் உடையவனே! அளவற்ற அழகையுடையவனே! அளவின்றி உயர்வற உயரும் பெரும் திறலையுடையவனே! எத்தகைய நற்குணங்களும் இல்லாத அடியேனை குணம் உடையவனாக்கினவனே! அடியேனது மனம் வேறு வகையில் செல்லாமல் தடுத்து, உம்மையே இன்புடன் அநுபவிக்கும்படிச்செய்தவனே! அடியேன் உம்மை முழுதும் அநுபவிக்கும்படி, கற்பக மரம்போல் எனக்குத் தன்னைக் கொடுத்த உயர்ந்த குணத்தை உடையவனே! அமுதம் போல் இனிமையாய் இருப்பவனே! கார் முகில் போல் அளவில்லாத மேன்மையுடைய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனே! சிறந்தவர்களான நித்ய சூரிகளுக்கும் நீசனான அடியேனுக்கும் தலைவராய் இருப்பவரே! யாசோதைப் பிராட்டியால் முடிகள் மிகுந்த கயிற்றினால்

கட்டுண்ட பெருமாயனாக இருக்கும் என்னப்பன், என்னிடத்தில் மிகவும் விருப்பத்துடன் குடியிருக்கின்றான். அவன் ஒரு நாளும் நம்மை விடமாட்டான் என்கின்றார் ஆழ்வார்.

ஸ்ரீ நம்மாழ்வார், வல்வேங்கடத்து எம்பெருமானைக் கண்டு, அவனுடைய அளவற்ற அழகில் ஈடுபட்டு,

அவனை இங்கேயே அனுபவிக்கத் தீர்மானித்து, தமக்குத் துணையாகத் தம்முடைய உள்ளத்தையும், பகவத் பக்தர்களையும் கூப்பிடுகின்றார் இந்த 'ஒழிவில் காலமெல்லாம்' என்னும் இப்பத்தில்.

பாசுரம் 3-3-1

**"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி**
**வழுவிலா அடிமைசெய்ய வேண்டும் நாம்**
**தெழிகுர லருவித் திருவேங் கடத்து**
**எழில்கொள் சோதிஎந்தை தந்தை தந்தைக்கே"**

நம்மாழ்வார், வடவேங்கடத்து எம்பெருமானைக் கண்டு, அவனைத் தாம் இருக்குமிடத்திலேயே அநுபவிக்கத் தீர்மானித்து, தமக்குத் துணையாகத் தமது உள்ளத்தையும், பகவத் பக்தர்களையும் கூப்பிடுகின்றார்.

அருவிகள் நிறைந்த திருவேங்கட மலையில் அளவற்ற அழகுடன் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடவனுக்கு, எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும், அனைத்து செயல்களையும், அவனுக்கு எப்பொழுதும் அடிமையாக இருந்து, செய்யவேண்டும்.

**வழுவிலா அடிமை.**

1. அடிமையில் ஒன்றும் ஒருவர்க்கும் பங்கு கொடுக்காதது.
2. எல்லா அடிமைகளும் தானே செய்யவேண்டும்.
3. இளையபெருமாள் பிரியாமல், காட்டிலும் கூடவே சென்று செய்த அடிமைகள்.

4. பரதாழ்வான் படைவீட்டில் பிரிந்து இருந்து 14 ஆண்டுகள் செய்த அடிமை.
5. அனந்தான் பிள்ளை திருவேங்கடத்தில் கோனேரியைக் கட்ட சிறுவனாக வந்த திருவேங்கடவனுக்கே பங்குதராத அடிமை.

**வேங்கடத்து எழில்கொள்சோதி :** வேங்கடத்து எழில்கொள் சோதி குன்றத்து இட்ட விளக்காயிருக்கும். வேங்கடத்து மேயவிளக்கல்லவா.

**எந்தை தந்தை தந்தைக்கு :** எந்தைக்கும், அவர் முந்தைக்கும், அவர் தந்தைக்கும் தந்தை, உருத்திரன் தந்தை, பிரமனப்பன் மூத்த அப்பன் - அவனே முதல்வன்.

இப்பாசுரத்தால், கைங்கர்யப் பிரதானமான திருமந்திரத்தின் பொருளை அருளிச் செய்கின்றார். புருஷார்த்தம் கைஙகர்யமே என்று உறுதிசொல்லும் திருமந்திரம். இதன் பொருள், எம்பெருமானுக்கே உரியனான நான், எனக்கு உரியன் அல்லன்.ஸ்ரீமந்நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்ய வேண்டும்.

பாசுரம் 3-3-2

**"எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும்**
**முந்தை வானவர் வானவர் கோனொடும்**
**சிந்து பூ மகிழும் திருவேங்கடத்து**
**அந்தமில் புகழ்க் காரெழில் அண்ணலே"**

கானமும், வானரமும் ஆகிய இவைகளுக்கு முகங்கொடுத்து அருள் சுரந்து நிற்கின்ற எளியவனாய் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளான். அவன் நமது தந்தை, அவர் தந்தை ஆகிய ஏழுதலைமுறையாளர்க்கும், சிவன், பிரமன் முதலான அனைவர்க்கும் முதல்வன் ஆவான்.

மற்றும் ஆளியும், கோளரியும், பொன் மணியும், முத்தும், பூமரமும் ஆகியவற்றைக் கொடுத்துக்கொண்டு நின்ற நிலையில் எழுந்தருளியுள்ளான் திருவேங்கடவன். இவன் அனைத்து கல்யாண குணங்களையும் இயல்பாகவே உடையவன்.

இத்திருவேங்கடத்தில் கிளையில் உள்ள பூக்களைக் காட்டிலும் நிலத்திலே விழுந்த பூக்கள் அந்நிலத்தினுடைய தன்மையாலே மணம் மிகுந்து மலர்ந்து தோன்றுகின்றது.

இத்தகைய சிறப்புடைய திருவேங்கடமலையில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனை அர்ச்சை நிலையில் கண்டு களிக்க பரமபதத்திலிருந்து, சேனை முதலியாரோடும் நித்ய சூரிகள் வந்து மலர்கள் தூவி வணங்குகின்றனர்.

இத்துணை சிறப்பு வாய்ந்த இத்திருவேங்கடவனைக் கண்டு வணங்குவதைவிட்டு, பரமபதம் செல்ல இம்மண்ணுலக மக்கள் விரும்புகின்றனர்.

பாசுரம் 3-3-3

**"அண்ணல் மாயன் அணிகொள் செந்தாமரைக்**
**கண்ணன் செங்கனி வாய்க்கரு மாணிக்கம்**
**தெண்ணிறைச் சுனை நீர்த்திரு வேங்கடத்து**
**எண்இல் தொல் புகழ் வானவர் ஈசனே."**

எல்லார்க்கும் தலைவனானவனும், அழகு, ஒழுக்கம் முதலியவைகளால் ஆச்சரியங்களை உடையவனும், வேறு ஒப்பனை வேண்டாத கருணையாலும், நறுமணத்தாலும் தாமரை மலரை ஒத்த கண்களை உடையவனும், செந்துவர் பவளவாயினால் எழுகின்ற புன் முறுவலில் அகப்பட்டாரை மீளாதபடி வடிவழகை உடையவனும், கரியமாணிக்கம் போன்ற வடிவினையுடையவனும் ஆனவன் திருவேங்கடவன். தெளிந்த நிறைந்த தண்ணீரையுடைய சுனைகள் பொருந்தியதும், சிரமத்தைப் போக்கக் கூடியதும் திருவேங்கடம். அளவிறந்த இயற்கை எழிலையுடைய இத்திருவேங்கடத்தில், கடலில் எண்ணற்ற இரத்தினங்கள் இருப்பதைப் போல எண்ணற்ற நற்குணங்களையுடைய திருமால் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். இவன் நித்ய சூரிகளுக்கும் தலைவன் ஆவான்.

பாசுரம் 3-3-4

**"ஈசன் வானவர்க்கு என்பன் என்றால் அது**
**தேசமோ திருவேங் கடத்தா னுக்கு?**
**நீசனேன் நிறைவு ஒன்றுமிலேன் என்கண்**
**பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே."**

எம்பெருமான் முடிசூடி அரசு செலுத்துகின்றான், திருவேங்கடத்தில். ஆனால் அவன் பரமபதத்தில் சிறையில் இருப்பவனைப் போல உள்ளான். எளிமையை மேற்கொண்டு மண்ணவரும் விண்ணவரும் எளிதில் கண்டு வணங்கும்படி பரமபதத்தை விட்டு திருவேங்கடமலையில் நின்ற நிலையில் எழுந்தருளியுள்ளான்.

## அடியேன் நீசன்

1. தாய்க்கும் மற்றொரு பொருளுக்கும் வேற்றுமை காட்டாது செயல்புரிபவன்.
2. சாத்திரங்கள் விலக்கியதைச் செய்து அவற்றிலிருந்து மீளாதவன்.
3. நின்றவா நில்லா நெஞ்சினையுடையவன்.
4. நன்மை சொன்னவனின் உயர்வைப் பொறுக்கமாட்டாதவன்.
5. அவற்றை இல்லையென்று சொல்லி அபசாரங்களைச் செய்தவன்.
6. நன்மை சொன்னவர்களை விட தான் மேலானவன், என்று நினைத்தவன்.
7. நன்மை விரும்பினவர்களிடத்தில் வஞ்சனையைச் செய்தோம் என்ற இரக்கமில்லாதவன்.
8. ஆத்மாவிற்குத் தகுதியில்லாத குணங்களை உடையவன்.
9. ஆத்ம குணங்கள் ஒன்றுமில்லாதவன்.
10. தாழ்விற்கு எல்லை நிலமானவன்.

இத்தகைய விரும்பத் தகாத குணங்களின் இருப்பிடமாகவும், நிறைவான குணங்கள் ஒன்று கூட இல்லாதவனாகவும் உள்ள என்னிடம் எம்பெருமான்

திருவேங்கடவன் பற்றை வைத்தான். அத்தகைய ஒழுக்கச் சீலனான எம்பெருமானை நித்திய சூரிகளுக்கு மட்டும் தலைவனாக இருந்து, அவர்களுடனே கலந்தான் என்று சொல்வது ஏற்றமோ? ஏற்றமில்லை.

பாசுரம் - 3.3.5

"சோதியாகி எல்லா உலகும் தொழும்
ஆதிமூர்த்தி என்றால் அளவு ஆகுமோ
வேதியர் முழு வேதத்து அமுதத்தை
தீதுஇல் சீர்த்திரு வேங்கடத் தானையே ? "

வேதங்களையறிந்த அந்தணர்களுடைய எல்லா வேதங்களாலும் சொல்லப்படுகின்ற அமிர்தம் போன்ற இனிமையுடையவனை, குற்றமற்ற புகழையுடைய திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பேரொளியுருவனாகி எல்லா உலகத்தாராலும் தொழப்படுகின்ற, முதற்காரணப் பொருளாய் இருக்கின்ற வடிவையுடையவன் என்று கூறினால் அது பெருமையாகுமோ? ஆகாது.

சோதியாகி : தனக்கு மேல் ஒன்று இல்லாத பேரொளியுருவமான திருமேனியையுடையவன், பேரொளிகளின் கூட்டமானவன். நீலநிறமுடைய மேகத்தின் நடுவிலே தோன்றும் மின்னற் கொடி போன்று ஒளியுடையதாயும் உருக்கிய தங்கம் போன்று மிகுந்த ஒளியுடையதாயும் இருக்கிற ஒரு சிகை (கூந்தல்) இருக்குமானால் அது எம்பெருமானின் சரீரத்துக்கு ஒப்பாகலாம். இதனால் எம்பெருமானுடைய ஒளியே விஞ்சி நிற்கும் என்று அருளப்படுகிறது.

**எல்லா உலகும் தொழும்** : மிகவும் தாழ்ந்தவராகத் தன்னைக்கருதி , தானே தொழுத போதே மண்ணவர் விண்ணவர் முதலான எல்லா உலகத்தவரும் தொழும் , முழுமுதற்கடவுள் என்பது விளக்கப்படுகின்றது. தொழமாட்டோம் என்று நினைத்துக் கொண்டிருந்தவர்களும் கூட கண்டவுடன் தொழுதார்கள் ஆதலின் எல்லா உலகும் என்றார்.

**ஆதி மூர்த்தி** : உலகங்களையெல்லாம் படைப்பதற்கு முன்னே நான்முகனைப் படைத்தவனும், அந்த நான் முகனுக்கு வேதங்களை உபதேசித்தவனும், உலகங்கட்கெல்லாம் காரணப் பொருளாய் போற்றுதற்குரியவனுமான திருமாலே ஆதிமூர்த்தி என்றார்.

**வேதியர் முழு வேதத்து அமுதம்** : வேதமானது பெரியோர்கட்கு அழிவற்ற செல்வமாய் இருக்கின்றது. வேதங்களைச் செல்வமாக உள்ள அந்தணர்களுடைய எல்லா வேதங்களாலும் சொல்லப்படுகின்ற இனிமையுடையவன். எல்லா வேதங்களும் திருமாலையே பரம் பொருளாகச் சொல்லுகின்றன. எல்லா வேதங்களும் திருமாலாகிய பரம் பொருளிடத்தில் ஒரே முகமாய் இருக்கின்றன. எல்லா வேதங்களாலும் அறியப்படுகின்ற ஆனந்த குணத்தையுடையவன் திருமால். எனவே வேதியர் முழுவேதத்து அமுதம் என்றார்.

**தீது இல் சீர்த் திருவேங்கடத்தானை**

1) சீருக்குத் தீதாவது, அடியார்களுடைய குணங்களை மெய்ப்பித்தல். ஏற்றுக்கொள்ளும்

போது இன்ன அடியவர் விரும்பத்தக்கவர், இன்ன அடியார் விரும்பத்தகாதவர் என்று ஆராயும் குற்றமில்லாதிருத்தல். அடியார் குற்றங்களைக் குணமாகக் கொண்டு ஏற்று அருள் புரியும் தன்மையுடையவன் ஆதலால் தீது இல் சீர்த்திருவேங்கடத்ததான் என்றார்.

2) தன்னை நாடி வந்தவர்களுடைய பாவங்களைப் போக்கி, அவர்கள் திருவேங்கடவன் அருள் பெறுவதற்கு ஏற்றபடி துய்மையானவர்களாக்கும் சிறப்புடைய திருவேங்கட மலையை, எழுந்தருளியிருக்கும் இடமாகக் கொண்டவன் திருமால் என்ற பொருளையும் கொள்ளலாம்.

பாசுரம் -3 .3.6

**"வேங்க டங்கள் மெய்ம் மேல்வினை முற்றவும்**
**தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்**
**வேங்க டத்துஉறை வார்க்கு நமஎன்ன**
**லாம் கடமை அது சுமந்தார்கட்கே"**

திருமலையிலே எழுந்தருளி, தினமும் வசித்து வரும் திருவேங்கடவனை வணங்கும் கடமையை உணர்ந்து வணங்கும் அடியவர்களுடைய,பகவானை அடைவதற்குத் தடை செய்த பாவங்களும், இனி வரக்கூடிய பாவங்களும் தீயினில் தூசாகத் தீய்ந்து போகும். இது சத்தியம். இவ்வாறு பாவங்கள் தொலையப் பெற்றதால் அடியவர்கள் தங்களால் இயன்ற அளவு பகவத்-பாகவதத் தொண்டுகளைச் செய்து மகிழ்வர்.

அடியவர்கள் தங்கள் பாவங்களைத் தலையிலே சுமந்து கொண்டு வந்து, தன் திருடிகளிலே சேர்த்தால், அவற்றைத் தீயினில் தூசாக்கியதை எண்ணி மகிழ்ந்தான் திருவேங்கடவன். அது மட்டு மன்றி அடியவர்களுக்குத் தமது அருளைக் கொடுத்ததையும் எண்ணி, அவர்கள் தேக முடிவில் தமது திருவடிகளை அடையும் பேற்றையும் நல்கினான். அவர்கள் இம்மண்ணுலகில் வாழும் நாட்களில் தமது திருவுருவை வணங்கவும், தமது திருக்கல்யாண குணங்களைப் பேசவும், தாம் விரும்பும் பகவத்-பாகவதத் தொண்டுகளையும் செய்து காலம் கழிக்கவும் அருள் புரிந்தான்.

**கடன்கள் :** ஒருவன் மூன்று கடன்கள் உள்ளவனாக வந்து பிறக்கின்றான்.

1. பிரம்மச்சரிய காலத்தில் செய்யவேண்டிய முனிவர் கடன்
2. யாகம் செய்வதால் தீரும் தேவர் கடன்
3. புத்திரனைப் பெற்று அவனால் செய்யப்படும் புத்திரர்கடன்

இம்மூன்று கடன்களையும் செய்து, பின்னரே பரமபதத்தில் விருப்பம் கொள்ள வேண்டும். இக்கடன்களைச் செய்யாமல் பரமபதத்தை விரும்புபவன் கீழே வீழ்த்தப்படுவான் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

முனிவர் கடன் கேள்விச் செல்வம் பெறுவதாலும் , தேவர் கடன் வேள்வி செய்வதாலும்,

தென்புலத்தார் கடன் புத்திரர்களைப் பெறுவதாலும் தீரும்.

**அது சுமந்தார்கட்கு**

நாம் நமக்கு உரியவரல்லேம் , எம்பெருமானுக்கே அடிமையென்று பொருள்படும் நம: என்ற சொல்லைச் சொல்லும் முயற்சியைச் சிறுமையாகவும், அதனால் பெறுகின்ற பேற்றின் கனத்தையும், பகவான் திருவருளையும் கனமாகவும் கருதி, இக்கனத்தை இவ்வடியவன் சுமக்க வல்லவனோ என்பர். அதைச் சுமக்கவல்வர்கள் என்கின்றார். அத்தகையவர்கள் பாவங்கள் வெந்து எம்பெருமானுக்கு நல்லன செய்வர் எனப் பொருள் கொள்ள வேண்டும் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம் -3.3.7

**"சுமந்து மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு**
**அமர்ந்து வானவர் வானவர் கோனொடும்**
**நமன்று எழும்திரு வேங்கடம் நங்கட்குச்**
**சமன்கொள் வீடு தரும்தடங் குன்றமே"**

பரமபதத்திலுள்ள நித்ய சூரிகள் , சேனை முதலியாரோடும் வந்து சிறந்த நறுமண மலர்களையும், தண்ணீரையும், விளக்கையும், வாசனைப் புகையையும் தாங்கிக் கொண்டு வணங்கி எழுகின்ற திருவேங்கட மாமலையானது, நமக்கு ஒத்ததாகவுள்ள பரமபதத்தைக் கொடுக்கக் கூடியதாகும்

**சுமந்து மாமலர் நீர் சுடர் தூபம் கொண்டு** : அடியவர்கள், ஒரு கருமுகை மாலையேயாகிலும், இதனை எம்பெருமான் கண்டருளுவானே ! அணிந்து அருளுவானே ! நமக்கு அருள் பொழிந்து அருளுவானே.

நமக்கு அருள் பொழிந்து அருளுவானே எனும் இவர்கள் அன்பின் மிகுதியாலே **கனத்துத்** தோன்றுகின்றதால் சுமந்து என்கின்றார்.

அன்புடையவன் அணிவித்ததால் சுமை குறைவான அம்மாலை, அன்பின் மிகுதியால் கனம் உடையதாகியது.

**சமன் கொள் வீடு தரும்** : எம்பெருமானை அறிந்தவன் குற்றம் அற்றவனாகவும், பூர்ண ஒப்புமையையும் அடைகின்றான். இந்த ஞானம் உடையவர்கள் எனக்குச் சமமான உருவத்தை அடைந்து தம்மையே யொக்க அருள் செய்வர் என்று சொல்லுகிறபடி, எம்பெருமானை ஒத்ததாகிய வைகுண்டத்தைத் தரும்.

**பாசுரம்-3.3.8**

**"குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்**
**அன்று ஞாலம் அளந்த பிரான், பரன்**
**சென்று சேர்திரு வேங்கட மாமலை**
**ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே"**

இந்திரனால் பெறப்பட்ட விழாவினைத் தடுத்து, கண்ணன் கோவர்த்தன மலைக்கு விழாச் செய்ய, அதனால் கோபம் கொண்ட இந்திரன் ஏழுநாட்கள் கல்மழை பொழிந்தான். இந்த கடும் மழையினின்று

கோக்களையும், கோபியர்களையும், கோகுலத்தையும் காக்க கோவர்த்தன மலையை எடுத்து குடையாகப்பிடித்தவன் கண்ணன். இது கோகுலமாகிய ஓர் ஊரைக் காத்ததைக் காட்டியது.

இந்திர பதவிக்கு ஆசைப்பட்டு , இந்திர பதவிக்கு உரிய தவத்தைச் செய்தான் மாவலிச் சக்ரவர்த்தி. இதை யறிந்த இந்திரன் திருமாலைச் சரணம் பற்றினான். இந்திரனைக் காக்கும் பொருட்டு வாமனனாக , மாவலியிடம் சென்று தன் திருவடிகளால் அளந்து கொள்ளக் கூடிய மூவடி மண்ணை யாசித்துப் பெற்றான். ஓங்கி வளர்ந்து ஓரடியால் மண்ணுலகையும் இரண்டாமடியாப விண்ணுலகையும் அளந்து, மூன்றாவது அடியை மாவலியின் தலைமீது வைத்து அவனைப் பாதாள உலகம் அனுப்பி இந்திரனைக் காத்தான் திருமால்.

இவ்வாறு அடியவர்களைக் காத்து அருள்புரிந்த, உயர்ந்த திருமாலே இன்று திருவேங்கட மாமலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். அவன் விரும்பிவாழ்கின்ற திருவேங்கட மாமலையை மட்டுமே தொழுதால் பொதும், நம் தீவினைகள் யாவும் தீய்ந்து போகும். பெறவேண்டிய பேற்றினைப் பெறவில்லையே என்னும் துயரம் நீங்கும் படி நாம் பரமபதமாகிய பெரும் பேற்றினைப் பெறுவோம். மேலும் நாம் செய்ய வேண்டிய பகவத்-பாகவதத் தொண்டுகளுக்குத் தடையாக உள்ளவையும் போகும்.

## பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை

மலை = உலகிலேயே உயர்ந்ததான இடம்
மாமலை = எப்படிப்பட்ட மலை? மாமலை. எம்பெருமான் உவந்து வாழ்வதால் சிறப்பும், ஏழுமலைகளையுடையதால் மிகப் பெரிதும் ஆகிய மாமலை.

**ஏழுமலைகள்**

1. அஞ்சனாத்ரி.
2. கருடாத்ரி.
3. வேங்கடாத்ரி.
4. நாராயணாத்ரி.
5. சேஷாத்ரி.
6. விருஷபாத்ரி.
7. விருஷாத்ரி.

எத்தகைய மாமலை? வேங்கட மாமலை (கடம் வேம்) என்று பொருள் கொள்ள வேண்டும். இம்மலை வருவோர் பாவங்களைத் தீய்த்துவிடும் மாமலை வேங்கட மாமலை என்ன சிறப்புடையது? திருவேங்கட மாமலையெனும் சிறப்புடையது. திருவாகிய திருமகளுக்கும் திருவான திருமால் வாழும் மலை. எனவே திருவேங்கட மாமலையானது.

எத்தகைய திருவேங்கட மலை? பரன் சென்று சேர் திருவேங்கட மலை. முழுமுதற் கடவுளான பரன் விரும்பி வாழ்கின்ற மலையாதலால், பரன் சென்று சேர்திருவேங்கடமாமலை எனப்பட்டது.

மலை
மாமலை
வேங்கட மாமலை
திருவேங்கட மாமலை
பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை.

பாசுரம்-3.3.9

**"ஒயும் மூப்புப் பிறப்புஇறப் புப்பிணி
வீயு மாறுசெய் வான்திரு வேங்கடத்து
ஆயன் நாள்மல ராம் அடித் தாமரை
வாயுள் ளும் மனத்துள்ளும் வைப் பார்கட்கே"**

திருவேங்கடத்தில் கண்ணனே திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். அத்தகைய திருவேங்கடவனது அன்று மலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைக் கண்டு வணங்கி, அவனது திருப்பெயர்களை வாயாரச் சொல்லி, அவனது புகழையும், பெருமையையும், சீர்மையையும் மனத்தில் வைத்து வழிபடுபவர்களது, மூப்பும் பிறப்பும், இறப்பும் , நோயும் நீங்கும். நோயே பிணியாகும். பிணி என்பது உடல் தொடர்பு காரணமாக வருகின்ற அனைத்து நோயுமாகும். உடலில் நோயுண்டானால் உள்ளமும் நோகும். எனவே எம்பெருமான் உடல் நோயைப் போக்க அதனால் உண்டாகும் உள்ளத்தின் நோயும் ஒருங்கே போகும்.

**நாள் மலராம் அடித்தாமரை** : நாள் மலராம் தாமரை அடி என மாற்றிப் பொருள் கொள்ள வேண்டும். கதிரவன் வரவு கண்டு காலையில் மலர்ந்து, கதிரவன் மாயும் மாலையில் வாடிவிடுவதால் தாமரைக்கு நாள்

மலர் என பெயர் சொல்லப்பட்டது. அத்தகைய அன்று மலர்ந்த செந்தாமரை மலர் போன்ற இளஞ் சிவப்பு நிறத்தையும் நறு மணத்தையும் உடையது திருமாலின் திருவடி. எனவே நாள் மலராம் அடித்தாமரை என்றார்.

பாசுரம்-3.3.10

**"வைத்த நான்வரை எல்லை குருகிச் சென்று**
**எய்த்து, இளைப்பதன் முன்னம் அடைமினோ**
**பைத்த பாம்பணை யான் திரு வேங்கடம்**
**மொய்த்த சோலை மொய் பூந்தடம் தாழ் வாரே"**

தன்னுடைய பரிசத்தாலே விரித்த படங்களையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய எம்பெருமான் அப்படுக்கையைக் காட்டிலும் விரும்பி வசிக்கின்ற திருப்பதி, திருவேங்கடமாகும். அடர்ந்த சோலையையும், நெருங்கிய பூக்கள் பூத்துக் காட்சியளிக்கும் பொய்கைகளையுமுடைய திருப்பதி மலையடிவாரத்தை, உங்களுக்கென்று ஏற்படுத்திய ஆயுளின் முடிவைச் சென்று குருகி இளைப்பதற்கு முன்னமே சென்றடையுங்கள். அப்படி அடைந்தீர்களானால் நீங்கள் பிறவி நீத்து திருமால் திருநாடாகிய பரமபதம் அடைவது உறுதி. ஏனென்றால், இந்த உடலை உயிருடன் கூட்டி மண்ணுலகில் நம்மை அனுப்பிவைத்ததே, நாம் திருவேங்கடவன் எழுந்தருளியுள்ள திருவேங்கடம் அடைவதற்கே ஆகும்.

பாசுரம்-3.3.11

**"தாள்ப ரப்பிமண் தாவிய ஈசனை**
**நீள்பொழில் குரு கூர்ச் சட கோபன்சொல்**
**கேழ்இல் ஆயிரத்து இப்பத்தும் வல்லவர்**

வாழ்வர் வாழ்வுஎய்தி ஞாலம் புகழவே"

கடினமான மலரைப் பரப்பினாற் போல, அழகிய திருவடிகளைக் கொண்டு, காடும் மலையுமான பூமியை வருத்தமின்றி அளந்து கொண்ட எம்பெருமானை, எங்கும் நிழல் செய்யும் படி வளர்ந்த சோலைகளையுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் அருளிச் செய்த ஒப்பற்ற ஆயிரம் பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களையும் கற்று வல்லவர்கள், உலகோர் அனைவரும் போற்றிப்புகழும் பேற்றினைப் பெற்று வாழ்வார்கள். அதாவது கைங்கரிய மாகிற பேற்றினையடைந்து அனுபவிக்கப் பெறுவார்கள்.

பாசுரம்-3.5.8

"வார்புனல் அம்தண் அருவி வடதிரு வேங்கடத்து
எந்தை
பேர்பல சொல்லிப் பிதற்றிப் பித்தர் என்றே பிறர்கூற
ஊர்பல புக்கும் புகாதும் உலகோர் சிரிக்க நின்று
ஆடி
ஆர்வம் பெருகிக் குனிப்பார் அமரர் தொழப்படு
வாரே"

ஒழுகுகின்ற தண்ணீரையுடைய அழகிய குளிர்ந்த அருவிகள் நிறைந்த வடதிருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற, அடியேன் ஆத்மத் தந்தையின் திருப்பெயர்கள் பலவற்றைச் சொல்லிப் பிதற்றிப் பித்தர் என்று பிறர் கூறும் படிப் பல ஊர்களிலே புகுந்தும் புகாமலும் உலக மக்கள் சிரிக்கும் படியாக நின்று ஆடி, அன்பு பெருகி, நடனம் செய்கின்றவர்கள் தேவர்களாலே தொழப்படுவார்கள் என்கின்றார் ஆழ்வார்.

**வார்புனல் அம்தண் அருவி வடதிருவேங்கடத்து எந்தை:**
நீண்டு வளர்ந்து தொங்குகின்ற புற்களையுடையதும் காட்சிக்கு இனியதும் துயரங்களைப் போக்குவதுமாகிய அருவிகளை உடையதும் ஆகிய வடதிருவேங்கடத்து எழுந்தருளியுள்ள எம்பெருமானே !

**பேர்பல சொல்லிப் பிதற்றி:**
உம்முடைய திருப்பெயர்கள் பலவற்றையும், உம் திருக்குணங்களைக் குறிக்கும் பெயர்களையும், பல காலம் பல நேரம் பெரும்பக்தியுடன் சொல்லினேன்.

**பித்தர் என்றே பிறர் கூற:**
உம்முடைய பெயரைக் கேட்டால் பேரின்பமடைவர்கள் கேட்கும் படி; உம்மைப் பொருவில் சீர்ப்பூமி என்றும், கண்ணனே என்றும், குன்றங்கள் அனைத்தும் வாழ்கின்றவன் என்றும், தாமரைக் கண்களையுடையவன் என்றும், ஊழிக்காலத்தில் பூமியை உண்டவன் என்றும், உலகத் தோற்றக் காலத்தில்உமிழ்ந்தவன் என்றும் யாவரும் எவையும் நீரே என்றும் அடியேன் கூற, பிறர் அடியேனை, பித்தன் என்றே கூறுகின்றனர். பேயரே எனக்குயாவரும். யானும் ஓர் பேயனே எவர்க்கும் என்ற நிலையை அடைந்தேன்.

**ஊர்பலபுக்கும் புகாதும் உலகோர் சிரிக்க நின்று ஆடி ஆர்வம் பெருகக் குனிப்பர்:**
மக்கள் வாழும் இடம், மக்கள் வாழா இடம் எங்கும் புகுந்து , இவன் செய்வது என்ன என்று அடியேனைப்

பார்த்து பிறர் சிரிக்கும் படி ஆடினேன். ஆடிப்பாடி அரங்கவோ என்று கூவினேன்.

அமரர் தொழப்படுவாரே:
அடியேனைப் போல உம்பெயரைச் சொல்லி ஆடிப்பாடி மகிழும் பக்தர்கள் தேவர்களால் தொழப்படும் பெருமையை அடைவர்.

பாசுரம்-3.9.1

**"சொன்னால் விரோதம்இது, ஆகிலும் சொல்லுவன்**
**கேண்மினோ !**
**என்நாவில் இன்கவி யான்ஒருவர்க்கும் கொடுக்கிலேன்**
**தென்னா தெனாஎன்று வண்டு முரல் திரு வேங்கடத்து**
**என்ஆனை என்அப்பன் எம்பெரு மான்உளனாகவே"**

மக்களே மானிடர்களைப் பொருள் வேண்டிப் பாராட்டிப் புகழ வேண்டாம். மானிடம் பாட வேண்டாம் என்றால் உமக்கு விரோதமாயிருக்கும். என்றாலும் என் கடமையினால் சொல்லுகின்றேன். கேளுங்கள் அறுகால் வரிவண்டுகள் எம்பெருமானின் ஆயிரம் பெயர்களையும் விடியற்காலையிலே பாடிமகிழும் . அந்த வண்டுகளின் ஒலி தென்னா தென்னா என்று ஒலிக்கும். அத்தகைய வண்டும் பாடும் திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் என் யானையும் என் அப்பனுமாகிய எம்பெருமானைத் தொழுவதற்கும் பாடுவதற்கும் உரியவனாகவும் ஆவான். எனவே அடியேன் அத்திருவேங்கடத்தானைப் பற்றி அன்றி, அடியேன் நாவினின்றும் வருகின்ற இனிய கவிகளை யான் ஒருவர்க்கும் கொடுக்க மாட்டேன் என்கின்றார் ஆழ்வார்.

**சொன்னால் விரோதம் இது ஆகிலும் சொல்லுவன் கேண் மின்களே:**

வேறு பலனைக் கருதினவர்களாய் தேவையற்ற நற்பயன் தராத கவிபாடுகின்ற உங்களை அத்தகைய கவி பாடாதீர்கள் என்று யான் கூறுவது உங்களுக்கு விரோதமாகத் தோன்றும். ஆனாலும் யான் உங்களுக்கு நன்மையே சொல்லுவேன் கேளுங்கள். உங்கள் கேட்டினைப் பொறுக்க முடியாமல், அதற்குப் பரிகாரம் பிறக்கும் வரையிலும் சொல்லுவதை நிறுத்த மாட்டேன். நீங்கள் உங்களுக்கு விருப்பமானதை நிறுத்தாததைப் போல நானும் உங்களுக்கு வேண்டிய நன்மையைச் சொல்லுவதினின்றும் நிறுத்தமாட்டேன்.

அற்பப் பலனைத் தரும் மானிடவர்களைப் பாடுவதை விட்டு, வேண்டியதை வேண்டியவாரும், நீங்காத பக்தியையும், தொண்டையும், நல்லன எல்லாவற்றையும், திருமாலின் திருவருளையும், பரமபதத்தையும் தரவல்ல எம்பெருமான் திருவேங்கடவனைப் பாடுங்கள்.

பால் குடிக்கக் கால் பிடிப்பாரைப் போன்று , பகவத் விஷயத்தைப் பாடுவதற்கு கால் பிடிக்கின்றார் ஆழ்வார்.

**என் நாவில் இன்கவி யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்**

நான் பெருமானுக்கு அடிமை ஆகையாலே, எனக்குக் காரணமான அவனுக்கு நான்

அடிமையானேன். அதனால் என் நாவும் அவனுக்கு அடிமையாயிற்று. என் கவிகள் எம்பெருமானைப் பற்றி பாடப்பட்டதாலும், அவற்றை அவன் கேட்டு மகிழ்ந்ததாலும் அவை அவனுக்கு இன் கவிகள் ஆயிற்று. அவனுக்கு இன் கவிகளானதால், அவன் அடிமையான எனக்கும் அவை இன் கவிகளாயின. அவனுக்கே அடிமையான யான் என் கவிகளால் அவன் புகழை யல்லால் வேறு ஒருவர் புகழைப் பாட மாட்டேன். ஏனெனில், எம்பெருமான் திருவருளால், என்னை அவர்பற்றி பாடுவித்தவன் அவனே அல்லவா?

**தென்னா தெனா என்று வண்டுமுரல் திருவேங்கடத்து என் ஆனை:**

வண்டுகள் மதுவைக் குடித்து, மயக்கத்தாலே, இன்பம் அடைந்து , ரீங்காரம் செய்தது இசையாக ஆனாற் போல் ஆழ்வாரும் பகவானை அனுபவித்ததால் உண்டாகும் மகிழ்வின் எல்லையும் முடிவுமாக எழுந்தது கவி ஆயிற்று.

வேதத்தைக் காட்டிலும் ஸ்ரீ ராமாயணத்திற்கு உண்டான ஏற்றம் போல, ஸ்ரீ வால்மீகி பகவான் கவிபாடிய செய்தியைக் காட்டிலும் ஆழ்வார் திருவேங்கடவனைப் பற்றிப் பாடிய கவிகள் ஏற்றம் பெற்றன. அவையே மொழி, வாய் மொழி , திருவாய் மொழியாயின.

இசை வாசித்து யானையை அடுக்குவதைப் போல, ஆழ்வார் திருவாய் மொழியைப் பாடி திருவேங்கடவனாகிய யானையைக் கட்டினார்.

**என் அப்பன் எம்பெருமான் உளனாகவே:**

எவ்வாறு ஒரு தந்தை தன் மகனை நல்வழிப்படுத்துவானோ, அப்படியே என்னைப் பிறரைப் போல் மானிடம் பாடாமல் தடுத்து எம்பெருமானையே பாடும் படிச் செய்தான் என் ஆத்மத் தந்தையாகிய திருவேங்கடத்தான்.

**பாசுரம்-4.5.11**

**"மாரிமாறாத தண்ணம் மலை வேங்கடத்து**
**அண்ணலை**
**வாரி மாறாத பைம்பூம் பொழில் சூழ் குருகூர் நகர்**
**காரி மாறன் சடகோபன் சொல்லாயிரத்து**
**இப்பத்தால்**
**வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே"**

மழை தவறாமல் பொழிந்து கொண்டிருக்கும், குளிர்ச்சியும் அழகும் கூடிய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கட நாதனை; எப்பொழுதும் வருவாய் மாறாமல் இருக்கும், புதுமையான பூக்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட திருக்குருகூரிலே எழுந்தருளியிருக்கும் காரி மாறனான சட கோபரால் அருளிச் செய்யப்பட்ட ஆயிரம் பாசுரங்களில் இப்பத்துப் பாசுரங்களையும் சொல்பவர்கட்கு வாசனை மாறாத தாமரை மலரில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பிராட்டியார் வினையைத் தீர்ப்பார் என்கின்றார்.

குறிப்பு :

1. பெருமழையானது காட்டுத்தீயை அணைப்பது போல துன்பங்களை தீர்க்கும் மலை திருவேங்கடமலையாகும்.

2. இப்பாசுரங்களைக் கற்பவர் நித்திய சூரிகளைப் போல நன்மையை அடைவர்.

பாசுரம்-6.6.11

**"கட்டெழில் சோலை நல்வேங்கட வாணனை**
**கட்டெழில் தென்குருகூர்ச் சடகோபன் சொல்**
**கட்டெழி லாயிரத்து இப்பத்தும் வல்லவர்**
**கட்டெழில் வானவர் போக முண்பாரே"**

மிக்க நறுமணம் கமழ்கின்ற சோலைகள் நிறைந்த மிகுந்த சிறப்புடைய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் குறித்து,

திருமால் தொடர்புடையதால் அரண் அழகு பொருந்திய குருகூரில் தோன்றிய, ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச் செய்த . தொடையழகு மிக்கது ஆயிரம் பாசுரங்கள். அவற்றுள் இசை , சொல், பொருள் ஆகிய அழகுகளைப் பெற்ற இந்தப் பத்துப் பாசுரங்களையும் கற்று ஓத வல்லவர், நித்ய சூரிகளைப் போன்ற வைகுந்த இன்பத்தை அடைவர்.

பாசரம்-6.9.5

**"விண்மீ திருப்பாய் ! மலைமேல் நிற்பாய் ! கடல் சேர்ப்பாய்**
**மண்மீ துழல்வாய் ! இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!**
**எண்மீ தியன்ற புறவண்டத்தாய் ! எனதாவி**
**உள்மீ தாடி உருக்காட்டாதே ஒளிப்பாயோ"**

வைகுந்தத்தில் பரத்துவ நிலையில் வீற்றிருக்கின்ற எனது எம்பெருமானே ! பெரும் கருணா மூர்த்தியாக விண்ணவரும்- மண்ணவரும் கண்டு வணங்கும்படி திருவேங்கடத்தில் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளீர். பக்தர்கள் குறைகளைக் கேட்பதற்காகவே திருப்பாற்கடலில் ஷீராப்தி நாதனாக எழுந்தருளியுள்ளீர். எல்லாரும் உமது திருமேனி அழகைக் கண்டு களிக்கும் படி இராமகிருஷ்ண அவதாரங்களை எடுத்து, பூமியில் எங்கும் திரிந்து உலாவினீர். அனைத்து உயிரினங்கள், சடப்பொருள்கள் அனைத்திலும் எள்ளுக்குள் எண்ணெய் போல் மறைந்திருக்கின்றீர். என் உயிருக்கு உயிராய் இருக்கின்றீர். இது தேவரீருக்கு தகுதியாகுமோ?

## ஆறாம் பத்து-பத்தாம் திருவாய் மொழி

### அவதாரிகை

முன் திருவாய் மொழியில் தமக்கு எம்பெருமானுடைய புறச் சேர்க்கை இவ்வுலகில் வேண்டும் அல்லது தம்மை வைகுந்தத்திற்கு அழைத்துக் கொண்டு போக வேண்டும் என்று ஆழ்வார் உரத்த குரலில் கூப்பிட்டார். ஆனால் எம்பெருமானோ ஒன்றும் செய்யவில்லை. இனி அவனைச் சேவிப்பதற்கு அவன் திருவடிகளில் சரணம் பண்ணுவதைத் தவிர வேறு வழி இல்லையென்று தீர்மானித்தார்.

இந்தத் திருவாய்மொழியில் அவனுடைய திருக்கல்யாண குணங்களில் ஈடுபட்டு, எல்லா உலகங்களும் தன்னைக் கண்டு களித்து, உய்ய

வேண்டுமென்று மிக்க கருணையினால் திருவேங்கடமாகிற சிறந்த மாமலையில் எழுந்தருளியிருக்கும் அவனுடைய திருக்குணங்களை ஒன்பது பாசுரங்களில் சிறக்கப் பேசி, பத்தாவது பாட்டில் பெரிய பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு சரணம் பண்ணுகிறார். கோலத் திருமா மகளோடு உன்னைக் கூடாதே என்றும் தடந்தாமரைகட்கே என்றும் திருவுள்ளம் பற்றுகின்றார். சரணாகதியினால் மோட்சத்தோடு பிற பலன்களும் பெறலாம் என்கின்றார். அதற்கு மிக எளிமையாக, மண்ணுலகில் உள்ள திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனைச் சரணம் பற்றுகின்றார்.

பாசுரம்-6.10.1

**"உலகம் உண்ட பெருவாயா ! உலப்பில் கீர்த்தி அம்மானே !**
**நிலவும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி ! நெடியாய் ! அடியேன் ஆருயிரே**
**திலதம் உலகுக் காய் நின்ற திருவேங்கடத்தெம் பெருமானே !**
**குலதொல் அடியேன் உனபாதம் கூடுமாறு கூறாயே"**

பிரளய காலத்தில் உலகத்தை எல்லாம் உண்ட பெரிய திருவாயினையுடையவனே! அழியாத புகழையுடைய அம்மானே! எப்பொழுதும் நிலை பெற்றிருக்கின்ற சுடர்கள் சூழ்ந்திருக்கின்ற ஒளியையுடைய மூர்த்தியே! நெடியோனே! அடியேனுக்கு அரிய உயிராக இருப்பவனே! உலகுக்கெல்லாம் திலகம் போன்று நிற்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற

எம்பெருமானே! தொன்று தொட்டு வருகின்ற தொண்டர் குலத்திலே பிறந்த அடியேன் உமது திருவடிகளைச் சேரும்வகையினைக் கூறியருளும்படி வேண்டுகின்றேன்.

**உலப்பில் கீர்த்தி அம்மானே** : குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாக இருப்பவன். இறைவன் குணங்கள் அளவற்றவை. அவனது திருக்கல்யாண குணங்களை உலகோர் எல்லாம் ஒருங்கு சேர்ந்து பதினாயிரம் வருடங்கள் கூறினாலும் முடிவு பெறாதவை. இராம பிரானது மங்களகரமான குணங்கள் பல இருக்கின்றன.

**நிலவும் சுடர் சூழ் ஒளிமூர்த்தி** : இவன் வடிவழகு ஒரு சமயம் விளங்கி பின்னர் குறைவது அல்ல. பகைவர்களும் போற்றும் வடிவழகு உடையவன். ஒளிப்பொருள்களைத் திரட்டிப்பிடித்ததைப் போல் ஒளிகளின் திரளாய் விளங்குபவன். கவர்ச்சிகரமான ஒளியுடையவன். மன்மதனுக்கும் மன்மதனாக இருக்கும் அழகுடையவன்

**நெடியாய்** : அழகு , புகழ் போன்ற குணங்களுக்கு எல்லை உண்டானாலும் இவன் அழகிற்கு எல்லை காணமுடியாத நெடியவன்

**திலதம் உலகுத்காய் நின்ற திருவேங்கடத்து எம்பெருமானே !**
பெண்களுக்கு நிறைந்த ஆபரணங்கள் அழகை மிகுதிப்படுத்துவதைப் போல, இவ்வுலகினுக்குத் திலகமாகவும் ஆபரணமாகவும் விளங்குகின்றது திருவேங்கடம். இத்திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளவனே! என் ஆருயிரே!

**குலதொல் அடியேன் உனபாதம் கூடுமாறு கூறாயே !**

வழிவழியாய் உம்மையே பற்றி நிற்கும் எம்குலத்தில் தோன்றிய அடியேன் உமது திருவடியை அடையும் படியான வார்த்தையை அருளிச் செய்ய மாட்டீரோ ! செய்ய வேண்டும் என்கின்றார் ஆர்வார்.

பாசுரம்-6.10.2

**''கூறாய் நீறாய் நிலனாகிக் கொடுவல் லசுரர்
குலமெல்லாம்
சீறா எரியும் திருநேமிவலவா ! தெய்வக் கோமானே !
சேறார் சுனைத்தா மரைசெந்தீ மலரும் திரு
வேங்கடத்தானே
ஆறா அன்பில் அடியேன் உன் னடிசேர் வண்ணம்
அருளாயே''**

கொடிய வலிய அசுரர் கூட்டம் முழுவதும் கூறு கூறாகிச் சாம்பலாகி மண்ணோடு மண்ணாகும் படியாகச் சீறி, ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அழகிய சக்கரத்தாழ்வானை வலக்கையில் தரித்திருப்பவனே! நித்திய சூரிகளுக்குத் தலைவனே! சேறு பொருந்திய சுனைகளிலே தாமரை மலர்கள் சிவந்த நெருப்பினைப் போன்று மலர்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! குறையாத அழகினையுடைய உனது திருவடிகளை அடியேன் சேரும் படித் திருவருள் புரிய வேண்டும்.

கொடு 'வல்லசுரர் குலமெல்லாம்:

கொடிய செயல்களைச் செய்யக்கூடியவராயும், ஒருவராலும் வெல்ல முடியாதபடி வலிமையுடையவராயும் உள்ள அசுரர் குலமெல்லாம் வேரோடு மடியும் படிச் செய்தவன் எம்பெருமான்.

அசுரர் குலத்தில் தோன்றிய இரணிய கசிபு, இராவணன் போன்ற ஓரிருவர் செய்த தீய செயல்களால் அவர்களது குலம் முழுவதும் அழியும் படி ஆயிற்று.

**தெய்வக் கோமானே:**

அடியார்களுக்காக வந்து தோன்றுவதோடு மட்டுமல்லாமல் அயர்வறும் அமரர்களுக்கும் அதிபதியாகவும் விளங்குபவன். அகல்விசும்பிலும் , நிலவுலகிலும் நிகழும் தீவினைகள் கெடும் படிச் செங்கோல் நடத்துபவன்.

**சேறு ஆர் சுனைத்தாமரைச் செந்தீ மலரும் திருவேங்கடத்தானே:**

தாமரை வளர்வதற்கேற்ற சேறு நிறைந்துள்ள சுனைகளிலே செந்தாமரைகளானவை அதிக அளவில் மலர்ந்திருக்கும். செந்தாமரையின் செம்மை நிறம் நீரில் பட்டு செந்தீ போல காட்சியளிக்கின்றது. எண்ணெயாலே எரியும் விளக்கு போலே நீராலே எரியும் விளக்குபோல் தோன்றியுள்ளது. நீரிலே நெருப்பு எழுந்ததைப் போல காட்சியளிக்கும். அத்தகைய சுனைகளையுடைய திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே !

**உன் அடிசேர் வண்ணம் அருளாயே !**

உன் திருவடிகளிலே சரணாகதி செய்து, உமக்கு பகவத் தொண்டாற்றும் படியான பேற்றினை எனக்கு அருள வேண்டுமென்று வேண்டுகின்றார் ஆழ்வார்.

**பாசுரம்-6.10.3**

**"வண்ண மருள்கொள் அணிமேக வண்ணா மாய**
**அம்மானே !**

**எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே ! இமையோர்**
**அதிபதியே !**
**தெண்ணல் அருவி மணிபொன் முத்தலைக்கும்**
**திருவேங்கடத்தானே !**
**அண்ணலே உன்னடி சேர அடியேற்கு ஆஆ**
**என்னாயே. "**

கண்டார் மனம் மயக்கமடையக் காரணமான வடிவினையுடைய அழகிய மேக வண்ணனே ! ஆச்சரியத்தையுடைய அம்மானே ! மனத்தினில் புகுந்து இனிக்கின்ற அமுதே ! நித்திய சூரிகளுக்குத் தலைவனே! தெளிந்த நல்லருவிகள் நவமணிகளையும், பொன்னையும் முத்துக்களையும் கொழித்துக் கொண்டு வருகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே ! அண்ணலே ! உன் திருவடிகளைச் சேர்வதற்கு, உமது அடிமையான என் மீது ஐயோ ஐயோ என்று திருவுள்ளம் பற்றி யருள வேண்டும்.

**வண்ணம் அருள் கொள் அணி மேக வண்ணா !**

இரக்க குணத்தையுடைய காண்பதற்கு இனிய மேகம் போன்ற வடிவினையுடையவனே ! கண்டார் நெஞ்சினை இருளப்பண்ணக் கூடியதாய் இருக்கும் அண்ணலே !

**மாய அம்மானே இமையோர் அதிபதியே:**

வடிவழகு மட்டுமல்லாத, வியக்கத்தக்க குணங்களாலும் செயல்களாலும் பெரியவன் ஆனவனே!

**எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே**

தெய்வப் பிறவியிலே பிறந்து, செயற்கரிய செயல்களைச் செய்து, எல்லோரும் வணங்கும் படியாக இனிதானவனே, நினைத்த மாத்திரத்திலே தானே வந்து மனம் புகுந்து, நினைக்கும் போதெல்லாம் தித்திக்கும் அமுதானவனே! தேவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பவனே !

**தெண்ணல் அருவி மணி பொன் முத்தலைக்கும் திருவேங்கடத்தானே !**

தெளிந்த , நீரையுடைய மலையருவிகள், ஒளிமிக்க மாணிக்கக் கற்களையும் பொன்னையும், முத்துக்களையும் மலையிலிருந்த அடித்துக் கொண்டு செல்லும் திருவேங்கடமலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே !

**அண்ணலே ! உன் அடிசேர அடியேற்கு ஆ ஆ என்னாயே !**

நீ அருள்புரிவாய் என்று என்மனம் சந்தேகமின்றி நம்பும்படிச் செய்தவனே ! அடியேன் உனது திருவடிகளில் சரணாகதி செய்து நிற்க , ஐயோ ! ஐயோ ! என்று அடியேன் மீது இரக்கப்பட்டு, உமது திருவருளைப் பொழிகின்றதல்லவா உமது திருவடிகள். அவைகளே அடியேனுக்கு உபாயமாகவும் உபேயமாகவும் விளங்குகின்றன. அத்துணை சிறப்பு வாய்ந்தவைகளன்றோ உமது திருவடிகள். எனவே அடியேன் உமது திருவடிகளைச் சரணாகப் பற்றினேன்.

**பாசுரம்-6.10.4**

**"ஆவா என்னாது உலகத்தை அலைக்கும் அசுரர்**
**வாணாள் மேல்**
**தீவாய் வாளி மழை பொழிந்த சிலையா ! திருமா மகள்**
**கேள்வா !**

தேவா சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும்
திருவேங்கடத்தானே !
பூவார் கழல்கள் அருவினையேன் பொருந்து மாறு
புணராயே !"

ஐயோ ! ஐயோ ! என்று இரக்கம் காட்டாமல் உலகத்திலுள்ளவரை வருத்துகின்ற அசுரர்களுடைய வாழ்நாளின் மேல், வாயிலே நெருப்பினையுடைய அம்புகளை சரமழை போல் பொழிந்த வில்லையுடையவனே ! திருமகள் கேள்வனே ! தேவாதி தேவனே! தேவர், முனிவர் கூட்டங்கள் விரும்புகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானே! போக்குதற்கரிய தீவினைகளையுடைய அடியேன், உம்முடைய தாமரை மலர்போன்ற திருவடிகளைச் சேருமாறு அருள்புரிய வேண்டும்.

**ஆ ஆ என்னாது உலகத்தை அழிக்கும் அசுரர்:**

அசுரர்கள் உலகோரை நலியச் செய்த போது, அத்துயரம் தாங்காது ஐயோ ! ஐயோ என்று அலறித் துன்பத்தை வெளிப்படுத்தினர். துன்பத்தை வெளிப்படுத்த ஐயோ ! என்ற சொல் தவிர வேறு சொல் இல்லை. அத்தகைய துன்பத்தைச் செய்து உலக் மக்களைத் துன்புறுத்திய அசுரர்.

**வாணாள் மேல் :** அசுரர்கள் வீரக் கோலத்தால் வந்த ஒப்பனை அடையாளம் அழியாமல் இருக்க, அவர்கள் உயிர்கள் நலிவுறும் படி,

**தீ வாய் :** பெருமாள் விடுத்த அம்பு, பிரளய கால அக்னியைப் போல நெருப்பை கக்கிக் கொண்டு, சென்று அவர்கள் மேல் பட்டு துன்பத்தை உண்டாக்கி,

அவர்கள் உடலில் ஒருபக்கம் புகுந்து மறுபக்கம் வரக்கூடியவை.

**வாளி மழை பொழிந்த சிலையா !**

அத்தகைய அம்புகளை சரமழைபோல் இடைவெளியின்றி வரிசை வரிசையாகப் பொழிந்த கோதண்டம் என்னும் வில்லைப் பெற்றவனே !

**திருமாமகள் கேள்வா !**

ஒருவில்லை முறித்து என்னை மணந்த அவ்விராமன் இன்று பதினாலாயிரம் அசுரர்களும் விட்ட அம்புகள் அனைத்தும் இவர்மீது பட்டு, கண்ட இடமெல்லாம் யுத்த காயமாகவன்றோ இவர் திருமேனி கிடக்கின்றது, என்று வருந்திய சீதா தேவி, இராமனை மார்போடு அணைத்து அப்புண்களுக்கு வேது(ஒற்றடம்) கொடுத்தாள். அத்தகைய திருமகளுக்குக் கேள்வனான உம்மை அடைய , திருமகளின் பரிந்துரை இல்லாமல் துன்புறுகின்றேனே !

**தேவா சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே !**

விரோதிகளை அழித்ததனால் உம் திருமேனியில் மிகுந்த ஒளி தோன்றியவனே ! அன்பர்களும் முனிவர் கூட்டங்களும் மிகவும் விரும்பும் வண்ணம் அவர்கள் கண்டுகளிக்கவும், அவர்களுக்கு நீர் அருள் புரியவும் நின்ற திருக்கோலத்தில் காத்துக் கிடக்கும் திருவேங்கடத்தானே !

**பூவார் கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே !**

தாமரை மலரை ஒத்த திருவடிகள், உமது திருவடிகள். அத்தகைய சீரிய திருவடிகளை அடியேன் அடைய முடியாத படி பெரும் தீவினைகளைச் செய்துள்ளேன். அத்தீவினைகளைப் போக்கி உமது திருவடிகளைப் பற்றுவதற்குரிய வழிமுறைகளைக் காட்டி, யான் அடையும் படிச் செய்ய வேண்டும்.

பாசுரம்-6.10.5

"புரணா நின்ற மரமேழ் அன்றெய்த ஒருவில்
வலவாவோ !
புணரேய் நின்றமர மிரண்டின் நடுவே போன
முதல்வாவோ !
திணரார் மேகமெனக் களிறு சேரும் திருவேங்
கடத்தானே !
திணரார் சார்ங்கத்து உனபாதம் சேர்வ தடியேன்
எந்நாளே"

சேர்ந்து ஒன்றுபட்டிருந்த மராமரங்கள் ஏழனையும் சுக்ரீவன் நிமித்தமாக அம்பு எய்த ஒப்பற்ற வில்வலவனே ! சேர்ந்து பொருந்தியிருந்த இருமரங்களின்ன நடுவே சென்ற முதல்வனே ! திண்மை பொருந்திய மேகமோ என்று ஐயப்படும் படியாக யானைகள் வந்து சேர்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே ! திண்மை பொருந்திய கோதண்டத்தை உடைய உனது திருவடிகளை அடியேன் எந்த நாளில் சேர்வேனோ ? அறியேன்.

புரணா நின்ற மரம் ஏழ் அன்று எய்த ஒருவில் வலவாயோ !

இராமனுடன் நட்பு கொண்ட சுக்ரீவன் இராமனிடம், தன் அண்ணன் வாலியை வென்று தன் மனைவியை மீட்டுத் தரும்படி வேண்டினான். வாலியை வெல்லக்கூடிய வலிமை இராமனிடம் உள்ளதா என்றறிய நினைத்து, ஆங்கே மாறிய நிலைகளில் இருந்த ஏழு மராமரங்களை ஒரே அம்பினால் வீழ்த்தும்படிக் கூறினான்.

ஏழு மராமரங்களையும் ஒரே நேர் கோட்டில் வரும்படிச் செய்து , ஒரே அம்பினால் துளைத்து வீழ்த்திய எம்பெருமானே ! சுக்ரீவனின் ஐயத்தைப் போக்கிக் காப்பாற்றிய நீ , ஐயம் இல்லாமலே பற்றின என்னைக் காக்க வேண்டாவோ ?

**புணர் ஏய் நின்ற மரம் இரண்டின் நடுவே போன முதல்வாவோ !**

கண்ணன் செய்த குறும்புகளைப் பொறுக்க மாட்டாத யசோதை கண்ணனை சிறுத்தாம்பினால் உரலில் சேர்த்துக் கட்டினாள். கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளிய போது, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டதால், அம்மரங்களிரண்டும் முறிந்து, விழுந்த அளவில் , முன் நாரதர் சாபத்தால் மரங்களாய்க் கிடந்த நளகூபரன், மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் சாபந் தீர்ந்து சென்றனர்.

**திணரார் மேக மெனக்களிறு சேரும் திருவேங்கடத்தானே !**

மேகங்களுடன் எல்லாவகையாலும் ஒப்புமையுடையது யானை. அடர்த்தி மிகுந்த மேகம்

என்னும்படி யானைகள் வாழ்கின்ற திருமலையிலே நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! "மதயானை போல் எழுந்த மாமுகில்கள்" , "மேகம் எனக் களிறு சேரும்" எனும் அருளிச் செயல்கள் இங்கு நோக்கத்தக்கனவாகும்.

**திணார் சார்ங்கத் துனபாதம் சேர்வதடியேன் எந்நாளே!**

திண்மை வாய்ந்த ஸ்ரீ சார்ங்கத்தை யுடைய உமது திருவடிகளை அடியேன் என்று அடைவேனோ ? அதை நீர் தெரிவிக்க வேண்டும்.

பாசுரம்-6.10.6

**"எந்நாளே நாம் மண் ணளந்த இணைத் தாமரைகள் காண்பதற்கென்று**
**எந்நாளும் நின்றிமை யோர்கள் ஏத்தி இறைஞ்சி இனம் இனமாய்**
**மெய்ந்நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங் கடத்தானே !**
**மெய்ந்நான் எய்தி எந்நாள் உன்னடிக் கண் அடியேன் மேவுவதே"**

உலகத்தை அளந்த இரண்டு திருவடிகளைக் காண்பதற்கு எந்த நாள் கூடுமோ என்று தேவர்கள் கூட்டங் கூட்டமாக எப்பொழுதும் நின்று கொண்டு துதித்து வணங்கி உடலாலும் நாக்கினாலும் , மனத்தாலும் வழிபாடு செய்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே ! அடியேன் முழு பக்தியுடன் உன்னை வணங்கி, உன்னை அடைந்து ,

உன் திருவடிகளை அடைவது எந்த நாளோ ? அருளுவாய்.

**எந்நாளே நாம் மண்ணளந்த இணைத் தாமரைகள் காண்பதற்கு**

இந்திரனுக்காக மாவலியிடம் சென்று மூன்றடி மண் வேண்டி , ஓரடியால் மண்ணுலகையும், இரண்டாமடியால் விண்ணுலகையும் அளந்து, மூன்றாமடியால் மாவலியை பாதாள உலகம் அனுப்பிய திருமாலின் திருவடிகளைக் கண்டு களிப்பதற்கு. எந்நாளும் நின்று இமையோர்கள் ஏத்தி இறைஞ்சி இனமினமாய் தினமும் வந்து, வணங்கி, வழிவட கூட்டங் கூட்டமாக வந்து கூடுவர் திருவேங்கடமலையில்.

**மெய் நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங்கடத்தானே**

திருவேங்கடமலைக்கு வந்து சேர்ந்த வானவர்கள் தங்கள் உடலாலும் , நாவினாலும் , மனத்தினாலும், முறையே வணங்கியும், புகழ் பாடியும், நினைத்தும் வழி பாடு செய்யும் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே !

**மெய்ந் நான் எய்தி எந்நாள் உன்னடிக்கண் அடியேன் மேவுவதே**

அடியேன் உண்மையாகவே, உமது திருவடிகளைப் பற்றிக் கொண்டு பிரியாமல் இருக்கும் நாள் எந்த நாளோ ? அருள்வீர்.

பாசுரம்-6.10.7

"அடியேன் மேவி அமர்கின்ற அமுதே ! இமையோர்
அதிபதியே !
கொடியா அடுபுள் உடையானே ! கோலக் கனிவாய்ப்
பெருமானே !
செடியார் வினைகள் தீர்மருந்தே ! திருவேங்கடத்தெம்
பெருமானே !
நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலாது
ஆற்றேனே."

அடியேன் அடைந்து அநுபவிக்கின்ற அமுதே! நித்திய சூரிகளுக்குத் தலைவனே! பகைவர்களைக் கொல்லுகின்ற கருடனைக் கொடியில் உடையவனே! கொவ்வைக் கனிபோன்ற அழகிய சிவந்த திருவாயினையுடைய பெருமானே ! தூறு மண்டிக் கிடக்கின்ற புதர் போன்ற தீவினைகளைத் தீர்க்கின்ற மருந்தே! திருவேங்கடத்தில் எழுந்தளியுள்ள எம்பெருமானே! உமது திருவடிகளை அடைவதற்கு எந்தத் தொண்டையும் செய்யாமல் இருக்க நொடிப் பொழுதும் அடியேன் ஆற்றியிருக்க மாட்டேன்.

பாசுரம்-6.10.8

"நோலா தாற்றேன் உனபாதம் காண என்று
நுண்ணுணர்வின்
நீலார் கண்டத் தம்மானும் நிறைநான் முகனும்
இந்திரனும்
சேலேய் கண்ணார் பலர்சூழ விரும்பும் திருவேங்
கடத்தானே
மாலாய் மயக்கி அடியேன் பால்வந் தாய்போலே
வாராயே"

உமது திருவடிகளைக் காண்பதற்கு எந்தத் தொண்டையும் செய்யாமையால். ஆற்றியிருக்க மாட்டேன் என்று நுட்பமான அறிவையும், விடம் பொருந்திய கழுத்தினை, உடைய சிவபெருமானும் , குணம் நிறைந்த நான்முகனும், இந்திரனும் ஆகிய தேவர்கள் , சேல் போன்ற கண்களையுடைய பெண்கள் பலரும் தங்களைச் சூழ்ந்து நிற்க வழிபாடு செய்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானே ! எல்லாரையும் மயக்கிக் கிருஷ்ணனாய் வந்ததைப் போலே அடியேன் பக்கலிலும் வர வேண்டும்.

பாசுரம் 6-10-9

**"வந்தாய் போலே வாராதாய் ! வாராதாய் போல்**
**வருவானே**
**செந்தா மரைக்கண் செங்கனிவாய் நாற்றோள் அமுதே**
**! எனதுயிரே !**
**சிந்தா மணிகள் பகரல்லைப் பகல்செய் திருவேங்**
**கடத்தானே !**
**அந்தோ அடியேன் உன பாதம் அகல கில்லேன்**
**இறையுமே. "**

வந்தவனைப் போன்றிருந்து வாராமல் இருப்பவனே ! வாராதவனைப் போன்றிருந்து வருகின்றவனே ! செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையும் சிவந்த கோவைக்கனி போன்ற திருவாயினையும் நான்கு திருத்தோள்களையுமுடைய அமுதம் போன்றவனே ! என் உயிரானவனே ! சிந்தாமணி என்னும் இரத்தினங்களின் ஒளியானது இருட்டினை நீக்கிப் பகலாகச் செய்கின்ற

திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! ஐயோ! அடியேன் உன்னுடைய திருவடிகளைச் சிறிது பொழுதும் நீங்கமுடியாமல் உள்ளேன்.

பாசுரம் 6.10.10

**"அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா !**
**நகரில் புகழாய் ! உலகமூன் றுடையாய் ! என்னை ஆள்வானே !**
**நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே !**
**புகல்ஒன் றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே "**

சிறிது நேரமும் விட்டுப் பிரியேன் என்று பெரிய பிராட்டியார் நித்தியவாசம் செய்கின்ற திருமார்பினையுடையவனே! ஒப்பில்லாத புகழையுடையவனே! மூன்று உலகங்களையும் உடையவனே! என்னை ஆள்கின்றவனே ! ஒப்பில்லாத நித்ய சூரிகளும் முனிவர்கள் கூட்டங்களும் விரும்புகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! வேறுகதி ஒன்றுமில்லாத அடியேன் உமது திருவடிகளிலே பொருந்தி அடைந்தேன் என்கின்றார் ஆழ்வார்.

**அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா:**

திருமகள் நமது ஆத்மத் தாய். திருமால் நமது ஆத்மத் தந்தை. நாம் ஆத்மா. நமது ஆத்மா திருமால்திருவடியைச் சென்று சேரும் வரையில் நமது ஆத்மத் தந்தையாகிய திருமால் நமது தவறுகளுக்குத்

தண்டனையைச் செய்து பின்னரே தமது திருவடிகளில் சேர்த்துக் கொள்ளுகின்றான்.

ஆனால் நமது ஆத்மத் தாயாகிய திருமகளோ , நமது மலை போன்ற குற்றங்களைக் கடுகளவாகக் குறைத்துக் காட்டியும், நாம் செய்யும் நற்தெண்டுகள் கடுகளவாகிலும் அதனை மலையளவாகப் பெரிதாகக் காட்டியும், நமக்குத் தண்டனை அளிக்காது அருள் புரியும் படிப் பரிந்துரைப்பாள். அப்போதும் அவர் அருள்புரியவில்லையென்றால், தமது அழகைக் காட்டி , மயக்கி அருள்புரியச் செய்வாள்.

எனவேதான் கண நேரமும் திருமாலை விட்டுப் பிரியாமல் திருமால் வலமார்பில் வாழ்ந்து கொண்டிருக்கின்றாள். இதனை இராமாயண வரலாறுகள் கொண்டு அறியலாம்.

**அவள் (திருமகள்) சன்னதியாலே காகம் தலைப்பெய்தது**

தண்டகாரண்யத்தில் சீதாதேவியின் மடியில் இராமபிரான் தலை வைத்து உறங்கிக் கொண்டிருந்தான். அப்போது இந்திரன் மகன் சயந்திரன் காக்கை உருக்கொண்டு சீதா தேவியின் மார்பகத்தைக் குத்திவிட்டான். பெருகிய குருதி இராமன் முகத்தில் விழ , விழித் தெழுந்த இராமன் செய்தியறிந்து, பிரம்ம அஸ்திரத்தை ஏவினான். இராம பாணத்திலிருந்து எந்த வானவரும் அவனைக் காக்க முடியாமல் போக திரும்பிவந்து சீதையின் கால்களில் சரணாகதி செய்தான். ஆத்மத் தாயாகிய சீதை அவனை இராமபிரான் திருவடிகளில் சரணம் பற்றச் செய்தாள்.

சரணாகதனான இராமன் அவன் செய்த தவறுக்கு ஒருபக்க கண்பார்வையை அறுத்து, சரணம் பற்றியதால் உயிரைக் காத்தான். இவ்வாறு சீதை இராமனுடன் இருந்ததால் காகம் பிழைத்தது.

**அவள் சன்னதி இல்லாமையாலே மாரீசனும் இராவணனும் மாண்டனர்:**

இராவணன் சீதையை எடுத்துச் செல்ல இராமனையும், இலக்குவனையும் பிரிக்க ஒரு சூழ்ச்சி செய்தான். இராவணன் கட்டளைப்படி மாரீசன் இராமன்-சீதைமுன் பொன் மானாக உருவமெடுத்து விளையாடினான். சீதை அம்மானைப் பிடித்துத் தரும் படி வேண்ட, இராமன் மாரீசனாக வந்த மானைத் தொடர்ந்தான். அது நீண்ட தூரம் துள்ளி ஓடியது. இறுதியில் இராமன் அம்பு எய்ய மாரீசன் அடிபட்டு வீழ்ந்து, இராமனுடைய குரலில் இலக்மணா, சீதா என்று அபாயக்குரல் கொடுத்து மாண்டான். இப்படி சீதையின் கண்பார்வைக்கு அப்பால் துரத்திச் சென்று மாரீசனைக் கொன்றான். எனவேதான் திருமகள் திருமால் மார்பை விட்டு ஒரு கணமும் பிரியாமல் வாழ்கின்றாள். இப்படி வாழ்கின்ற திருமார்பினையுடைய திருவேங்கடவனே !

**நிகரில் புகழாய்! உலகமூன்றுடையாய்! என்னை ஆள்வானே:**

எல்லையில்லாத கருணையும், பாசமும், எளிமையும் கொண்டு பெரும் புகழாய் விளங்குபவனே! மூன்று உலகங்களையும் தனது ஆட்சிக் குட்படுத்தியவனே! என்னை ஆட்கொள்ளுகின்ற இறைவனே! திருமாலே!

**நிகரில் அமரர் முனிக் கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே !**

ஒப்பில்லாத தேவர், முனிவர் ஆகியோர் விரும்பி, திருவேங்கடம் வந்து, உம்மை வணங்கும்படியாக திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே !

**புகல் ஒன்றில்லா அடியேன் உன் அடிக்கழ் அமர்ந்து புகுந்தேனே !**

அடியேன் சரணாகதி பற்ற வேறு இடம் இல்லாமையால் உமது திருவடிகளின் கீழ் அமர்ந்து சரணாகதி பண்ணுகின்றேன். எல்லாத்தர்மங்களையும் விட்டு, பற்றுக் கோடாகக் கொண்டு, உமது திருவடிகளே உபாயம் என்று பற்றினேன் என்கின்றார் ஆழ்வார்.

**பாசுரம்-6.10.11**

**"அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்**
**என்றென்று அருள் கொடுக்கும்**
**படிக்கே ழில்லாப் பெருமானைப் பழனக் குருகூர்ச்**
**சடகோபன்**
**முடிப்பான் சொன்ன ஆயுரத்துத் திருவேங் கடத்துக்**
**கிவைபத்தும்**
**பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரிய வானுள்**
**நிலாவுவரே"**

அடியீர் ! திருவடிகளிலே பொருந்தி புகுந்து வாழுங்கள் என்று திருவருள் செய்கின்ற, ஒப்பில்லாத திருவேங்கட முடையானை, வயல்கள் சூழ்ந்த திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ நம்மாழ்வார் முடிப்பதாக அருளிச் செய்த , ஆயிரம் பாசுரங்களில் திருவேங்கடத்தைப் பற்றி பாடிய இப்பாசுரங்களைக் கற்றவர்களைப் பற்றியவர்கள் அந்தமில்லா பேரின்பத் திருநாடாகிய பரமபதம் சென்று பேரின்பத்தை அடைவார்கள். நற்கன்றுக்கும் இரங்கி பால் சுரக்கும்

பசு, தோல் கன்றுக்கும் இரங்கி பால் சுரப்பது போல, இவரை நினைத்து இப்பாசுரங்களைக் கற்றவரும், கற்றவர்களைப் பற்றிய வரும் திருநாடு அடைவர்.

**பாசுரம்-8.2.1**

**"நங்கள் வரிவளை யாயங் காளோ !**
**நம்முடை யேதலர் முன்பு நாணி**
**நுங்கட்கு யானொன்று உரைக்கும் மாற்றம்**
**நோக்கு கின்றேன் எங்கும் காண மாட்டேன்**
**சங்கம் சரிந்தன சாயி ழந்தேன்**
**தடமுலை பொன்னிற மாய்த் தளர்ந்தேன்**
**வெங்கண் பறவையின் பாகன் எங்கோன்**
**வேங்கட வாணனை வேண்டிச் சென்றே"**

எனது அன்புத் தோழிகளே! எம்பெருமானிடத்தில் ஏற்பட்ட என் காதலை ஏற்று அருள்புரிய தாமதிப்பதால் என் உடல் மெலிந்ததால் என் கைவளைகள் கழன்று கீழே விழுந்தன. ஆனால், எம்பெருமானே ! நீர் உமது கைகளில் வளையல்களை அணிந்து மகிழ்கின்றீர். இது உமக்கு நியாயமா? நாயகனாகிய உம்மிடம் யான் வர முயற்சிக்கும் என்னை, என் தாய்மார் விரோதிகள் போல் தடுக்கின்றனர். வெட்கத்தினால் அவர்கள் முன் பதில் சொல்ல முடியவில்லை.

அப்படியே உங்களுக்கு எந்தச் சொல்லைக் கொண்டு என்வருத்தத்தைச் சொல்லுவதென்று எனக்குத் தோன்றவில்லை. என் உடம்பைப் பார்த்தால் உங்களுக்குத் தெரியவில்லையோ ?

எதிரிகளைக் கொடுமையாய்ப் பார்க்கும் கருடன் மேல் ஏறிக் கொண்டு வருபவனும், எல்லோரும்

தன்னைக் கண்டு வணங்கும்படித் திருவேங்கட மலையில் எளியனாய் எழுந்தருளியிருப்பவனுமாகிய எம்பெருமானை ஒருநொடிப் பொழுதும் விடாமல் கூடியிருக்க விரும்புகின்றேன். அவனைக் காணப் பெறாமையால் என் கை வளைகள் நழுவிவிட்டன. உடல் ஒளி மங்கிவிட்டது. என் உடல் நிறம் பசலையாகி மாறிவிட்டது. என் உடலும் தளர்ந்து விட்டது. இதன் காரணத்தை நீங்களே யோசித்துக் கொள்ளுங்கள்.

பாசுரம்-9.3.8

**"இன்றிப் போக இருவினை யும் கெடுத்து**
**ஒன்றி யாக்கை புகாமை உய்யக் கொள்வான்**
**நின்ற வேங்கடம் நீள்நிலத்து உள்ளது**
**சென்று தேவர்கள் கைதொழு வார்களே"**

புண்ய பாவங்களாகிற இருவினைகளும் வாசனையோடு போகும்படிச் செய்து, அவற்றைக் கெடுத்து , அசித்தோடு பொருந்தி, ஒரு சரீரத்தை எடுத்து அதனால் வரும் துன்பங்களை அனுபவிக்க வேண்டிவரும் அல்லவா. வேறு ஒரு சரீரம் எடுக்காதவாறு (பிறவி எடுக்காதவாறு) செய்வதற்காக, நீர் வந்து எழுந்தருளியிருக்கும் திருவேங்கடம், மண்ணுலகில் உள்ள சிறந்த திருப்பதியாகும். அத்திருப்பதியால் என்ன பயன்?

இத்திருவேங்கடத்தை அடைந்தவர்கள் பாவங்கள் அனைத்தும் வெந்து போகும். அவர்கள் பாவம் தொலைந்ததால் புண்ணியவான்களாகி பரமபதம் அடையும் பேற்றைப் பெறுவர். பரமபதத்தைச் சென்று சேர்வது மிகவும் அரிது. ஆனால் திருவேங்கடத்தைச் சென்று அடைவது மிகவும் எளிது.

இந்த எளிய முறையைப் பின்பற்றி அரிதான பரமபதத்தை அடையலாம். பரமபதத்தில் விருப்பம் உடையவர்கள் திருவேங்கடம் செல்லுங்கள் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-10.5.6

**"மேயான் வேங்கடம் காயா மலர் வண்ணன்**
**பேயார் முலையுண்ட வாயான்மாதவனே "**

காயாம் பூவின் நிறத்தையுடைய திருமேனியையுடையவனும், கணப்பொழுதும் பிரியேன் என்று திருமகள் வாழும் திருமார்பினையுடையவனும், தாயாக வந்து குழந்தைக்குப் பால கொடுக்க விரும்புகின்றேன் என்று கூறிய பூதனை தந்த விடப்பாலை உண்டவனுமாகியவன் கண்ணபிரான். அக்கண்ணபிரானே இக்கலியுகத்தில் திருமலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். எல்லோரும் தமது திருவடியை அடைந்து வணங்கி வழிபடும் படி மிகவும் சுலபனாய் உள்ளான். எனவே நாம் எளிதில் அவன் திருவடிகளில் அடிமை செய்து உய்யலாம் என்கின்றார் ஆழ்வார்.

கரிய திருமேனியையுடைய திருவேங்கடவனது மார்பில் பொன்னிறமான திருமகள் வாழ்வதால், இப்பொன்னிறம் கரிய நிறத்துடன் சேர்ந்து மிக்க அழகைக் கொடுக்கிறது.

பூதனையை அழித்ததன் மூலம் பக்தர்களுக்கு இடையூறு செய்பவர்களை அழித்து பக்தர்களைக் காக்கும் எம்பெருமான் திருக்குணம் வெளிப்படுகின்றது.

பாசுரம்-10.7.8

"திருமா லிருஞ்சோலை மலையே திருப்பாற் கடலே
என் தலையே
திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே
எனதுடலே
அருமா மாயத்து எனதுயிரே மனமே வாக்கே
கருமமே
ஒருமா நொடியும் பிரியான் என் ஊழி முதல்வன்
ஒருவனே "

உய்ய உலகு படைக்க வேண்டி உந்தியில் நான்முகனைப் படைத்து, அவன் மூலம் அனைத்து தெய்வங்களையும் படைக்கச் செய்தவன் ஸ்ரீ மந் நாராயணன் ஒருவனே. அவன், சிறப்பு வாய்ந்த திருமாலிருஞ்சோலை மலையையும், திருப்பாற் கடலையும் விடாததைப் போல், ஒரு கண நேரமும் விடாமல் என் மனக்கடலில் வாழும் மாய மணாள நம்பியாக விளங்குகின்றான். திருமகளும், மண் மகளும் இருபாலும் திகழ, நலமந்த மில்லதோர் நாட்டில் வீற்றிருந்து தனிக்கோல் செலுத்தும் ஸ்ரீ வைகுந்தத்தையும் இவ் வுலகில் இல்லறத்தால் ஏற்படும், தாயே, தந்தையென்றும் தாரமே கிளை மக்களென்றும் பட்டு ஒழியும் துன்பத்தைப் போக்குவதற்காகவே எழுந்தருளியுள்ள திருமலையையும் விடாததைப் போல, என் உடம்பிலும் ஒரு நொடி நேரமும் விடாது வாழ்கின்றான். எள்ளினில் எண்ணெய் போலும் விட்டுப் பிரிக்க முடியாத விண் வெளியில் விழுந்து உழன்று கொண்டிருந்த என் உயிரையும், மனத்தையும், வாக்கையும் , என் செயலையும் ஒருகணமும் விட்டுப் பிரிவதில்லை. ஆஹா என்னிடத்தில் எம்பெருமானுக்கு என்ன ஆசை ? என்ன பற்று? நான் மிகவும் பேறு

பெற்றவனாவேன். இனி எனக்கு நிகர் யாருமில்லை, என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : எம்பெருமான் கண்ணபிரான் கோபிகைகளுடன், எண்ணற்ற உருவங்களைக் கொண்டு எழுந்தருளி, ராசக்கிரீடை செய்து, அவர்களுக்கு மனநிறைவைத் தந்ததைப் போல், ஆழ்வாரின் உறுப்புகளிலும், பொறிகளிலும், செயல்களிலும் எழுந்தருளி , இன்பத்தை நுகர்ந்து, ஆழ்வாருக்குப் பெரும் களிப்பைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார் என்பது உள்ளுறைப் பொருளாகும்.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம் !



# அழகிய மணவாள மாமுனிவன்



திருவேங்கடவனும

## மணவாள மாமுனிகள் அருளிச் செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி

### மணவாள மாமுனிகள்

இராமானுசரின் மறுஅவதாரமாக, சாதாரண ஆண்டு ஐப்பசித் திங்கள் திருமூல நன்னாளில் (கி.பி. 1370) திருநாவீறுடைய பிரான் தாசர் அண்ணர் என்பாருக்கும் ஸ்ரீ ரங்க நாச்சியாருக்கும், நம்மாழ்வார் அவதரித்த ஆழ்வார் திருநகரியில் திருக்குமாரராய்த் தோன்றினார்.

**"அழகு திகழ்திடும் ஐப்பசியில் திருமூல மதெனும் நாளே"**

கி.பி. 1444. ருத்ரோக்காரி ஆண்டு மாசித்திங்கள் சனிக்கிழமையன்று திருவோண நன்னாளில் திருநாடு எய்தினார்.

பாசுரம் - 23

**"உலகுய்ய மால் நின்ற உயர்வேங் கடத்தே**
**அலர்மகளை முன்னிட்ட அவர்தன் -மலரடியே**
**வன்சரணாய்த் சேர்ந்த மகிழ்மாறன் தாளிணையே**
**உன் சரணாய் நெஞ்சமே உள்"**

நெஞ்சமே ! அனைத்து உலகமும் வாழும் படித் திருமால் திருவேங்கடமலையில் திருவேங்கடவனாக எழுந்தருளினான். பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக் கொண்டு, திருவேங்கடவன் திருவடித்தாமரைகளைப் பற்றிக் கொண்டு, சரணாகதி அடைந்த நம்மாழ்வாருடைய திருவடிகளையே உபாயமாகப் பற்றுவாயாக !

**மணவாள மாமுனிகள் திருவடிகளே சரணம் .**

## குலசேகராழ்வாரும் - திருவேங்கடவனும்

### குலசேகராழ்வார் தோற்றம்

குலசேகராழ்வார் கலி யுகத்தில் பராபவ வருடம் மாசி மாதம் புனர்பூச நன்னாளில் திருமாலின் கௌஸ்துப மணியின் அம்சமாக, சேர மன்னன் திருடவிருதனுக்குத் திருமகனாகத் திருவஞ்சிக்களத்தில் தோன்றினார்.

''வஞ்சி நகரந்தன்னில் வாழ வந்தோன் வாழியே !
மாசிதனில் புனர்பூசம் வந்துதித்தான் வாழியே ! ''
(வாழித் திருநாமம் - 7)

''மாசிப்புனர் பூசம் காண்மினின்று மண்ணுலகீர் !
தேசு இத்திவசத்துக் கேதென்னில் - பேசுகின்றேன்
கொல்லி நகர்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள் ''
(உ.ர.மா. 13)

குலசேகராழ்வார் திருவரங்கன், கண்ணன், இராமபிரான், திருவேங்கடவன் ஆகியவர் பற்றி மொத்தம் 105 பாசுரங்களை அருளிச் செய்துள்ளார். இவற்றுள் திருவேங்கடத்தைப் பற்றி 11 பாசுரங்களைப் பாடியுள்ளார். இப்பாசுரங்களின் பொருளைக் காண்போம்.

பாசுரம் - 31

''ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்கமிடத் தான் தன் வேங்கடத்து
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே !''

சேர மன்னன் குலசேகரன் அரசியல், படைப் பயிற்சி போன்ற பல கலைகளையும் பயின்று, சிறந்த முறையில் அரசாட்சி செய்து வந்தார். சில காலம் கடந்த பின் அரசியலில் ஈடுபாடு குறைந்து திருமால் மற்றும் திருமால் அடியார்கள் தொண்டில் மனம் சென்றது. பின்னர் திருமால் திருப்பதிகளைக் கண்டு சேவிக்க விரும்பினார். இந்த ஆவல் திருவேங்கடத்தில் ஏதேனும் ஒருபொருளாகத் தோன்ற வேண்டும் என்று வளர்ந்தது. மீண்டும் இந்த உடலோடு மறுபிறப்பு எடுப்பதை விரும்பவில்லை.

எனவே திருவேங்கடவனை தினந்தோறும் கண்டு வணங்குவதற்கு வசதியாக, திருவேங்கடத்தில் திருக்கோயிலின் அருகே உள்ள கோனேரிக் கரையில் வாழும் குருகாகப் பிறக்க வேண்டுமென்று விரும்புகின்றார். அதற்கான காரணம் என்ன என்பதை, குலசேதராழ்வார் உள்ளக் கருத்தைக் கொண்டு காண்போம்.

குறுகானது, பாலையும் நீரையும் கலந்து வைத்தாலும், அது நீரை நீக்கி, பாலை மட்டும் உண்ணும். வெண்மை நிறமுடையது. கோனேரிக் கரையில் வாழ்ந்தால் தினமும் திருவேங்கடவன் திருவீதி புறப்பாடு வரும் போது, அவரைச் சேவிக்கும் வாய்ப்பு கிடைக்கும். எனவே கோனேரிக் கரையில் வாழும் குருகாய்ப் பிறக்க விரும்பினார்.

ஆனால் என்றாவது கேனேரியில் நீர் வற்றி விட்டால் வேறு நீர் நிலையைத் தேடி, உணவுக்காகச் செல்வது பறவைகளின் குணமாகும். அவ்வாறு செல்ல

நேரிடலாம். எனவே குருகாகப் பிறப்பதை விட எந்நிலையிலும் திருவேங்கடமலையிலே வாழ்ந்து ஆயுள் இறுதிவரை இருக்க விரும்பினார். எனவே திருவேங்கட மலையில் சுனை நீரில் வாழும் மீனாகப் பிறக்க விரும்பினார்.

பாசுரம்-32

**"ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற் சூழ**
**வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்**
**தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே "**

நிலையற்ற பொருட் செல்வத்தையும், ஆடல்மகளிர் புடை சூழ வீற்றிருக்கும் விண்ணுலகத் தலைவனாகிய இந்திர பதவியையும், மண்ணுலகை ஆளும் அரச பதவியையும் விரும்பவில்லை. ஆனால் திருவேங்கட மலையிலுள்ள சுனைநீரில் வாழும் மீனாகப் பிறக்க விரும்பினார். ஏன் இப்படி விரும்வினார் என்பதற்குக் காரணங்களையும் கூறுகின்றார்.

1. திருமால் முதலில் மீனாக அவதரித்ததால், அம்மீன் சாதியில் மீனாகப் பிறக்க விரும்பினார்.
2. சுனை நீரினின்று பறவையைப் போல் வேறு எங்கும் செல்லாமல் திருவேங்கட மலையிலே இறுதிக்காலம் வரையில் வாழ இயலும்
3. சுனை நீரில் உள்ள அழுக்கையெல்லாம் உண்டு நீரை தூய்மையுடைய தாகச் செய்ய இயலும்.
4 சுனை நீரில் நீராடும் அடியவர்களைத் தீண்டும் பேறு கிடைக்கும்.

இத்தகைய மீனுக்கு வாழ்நாள் மிகக் குறைவாதலால் அதையும் விரும்பாமல் அடுத்து எப்பொழுதும் திருவேங்கடவனுடனே இருக்கும் படியான, பொன் வட்டிலைப் பற்றிக் கொண்டு அவர் பின்னே செல்ல விரும்பினார்.

பாசுரம் - 33

**"பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்**
**துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள் வாசல்**
**மின் வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்**
**பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேன்**
**ஆவேனே "**

சிவ பெருமானும் , நான்முகனும் , இந்திரன் முதலான தேவர்களும். திருவேங்கடவனைக் கண்டு வணங்க திருவேங்கடம் வருகின்றனர். ' இங்கோ மண்ணுலக மக்களும் திருவேங்கடவனைக் கண்டு வணங்க பெருங்கூட்டமாகச் செல்கின்றனர். தேவர்களால் எளிதில் சென்று வணங்க முடியாத வைகுந்த வாசல் திருவேங்கடவன் கருவறை. எனவே திருவேங்கடவனை எளிதில் எந்த நேரமும் கண்டு வணங்கும்படியாக, திருவேங்கடவன் பொன் வட்டிலைக் கையில் ஏந்திக் கொண்டு அவன் செல்லு மிடமெல்லாம் தானும் உடன் செல்லக்கூடிய அர்ச்சகராகப் பிறக்க விரும்பினார்.

இப்படித் திருவேங்கடவனுடனே இருக்கும் வாய்ப்பினால் யான் அகங்கார, மமகாரங்களை அடைந்தாலும் அடைவேன். மற்றும் பிற்காலத்தில்

இந்த அர்ச்சகர் பதவி நிலைக்காமலும் போகலாம். எனவே இதை விடுத்து, எந்தவித ஆபத்துமில்லாத சண்பகமரமாய்ப் பிறக்க விரும்பினார்.

பாசுரம் - 34

**"ஓண்பவள வேலை யுலவுதண் பாற்கடலுள்**
**கண் துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்குப்**
**பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்**
**செண்பகமாய் நிற்கும் திருவுடையேன் ஆவேனே "**

திருப்பாற்கடலுள் பையத் துயின்ற ஷிராப்தி நாதனே இன்று அர்ச்சை நிலையில் திருவேங்கடத்தில் திருவேங்கடவனாக எழுந்தருளி அருள் சுரக்கின்றான் அத்தகைய திருவேங்கடவனைக் கண்டு வணங்க, ஆறு கால்களையுடைய வண்டினங்கள் அவனது ஆயிரம் நாமங்களையும் பாடிச் செல்கின்றன. ஆனால் அடியேன், திருவேங்கடவனுக்கு விருப்பமான நறுமணம் மிக்க சண்பகமலரைப் பூத்துத் தரும் செண்பகமரமாக திருவேங்கடமலையில் பிறக்க விரும்புகின்றேன்.

ஏனெனில் செண்பக மரமாகப் பிறந்தால் நறுமணம் மிக்க செண்பக மலர்களை அதிக அளவில் தோற்றுவிப்பேன். அவைகளை மாலையாகக் கட்டித் திருவேங்கடவன் திருவடி முதல் திருமுடி வரை சூட்டுவர். என் பிள்ளைகளாகிய செண்பக மலர்கள் திருவேங்கடவன் திருமேனியில் தவழுவதற்கான நற் பேற்றைப் பெறுவேன். ஆனால் மரங்களின் வாழ்வும் நீண்ட நாள் இல்லை. பலனோ ஒன்று. எனவே பலபலன்களைத் தரும் புதராகப் பிறக்க விரும்பினார்.

பாசுரம் - 35

**"கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து**
**இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்**
**வேண்டேன்**
**எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்**
**தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே "**

மும்மதம் கொள்ளும் யானை மீதமர்ந்து நாட்டை யாளும் அரசச் செல்வத்தையும் அரசாட்சியையும் யான் விரும்பவில்லை. ஆனால் திருவேங்கட மலையில் தோன்றி வளரும் புதராகப் பிறக்க விரும்புகிறேன்.

ஏனென்றால்,

1. புதராகப் பிறந்தால் புதரில் புற்கள் ஓங்கி வளரும். அவற்றை மேயும் பசுக்களுக்கு உதவி புரியும் பெரும் பேற்றை அடைவேன். புல்லை மேயும் பசுக்கள் பொழிந்து தரும் பால் திருவேங்கடவனுக்கு பாலமுதமாகும். திருமஞ்சன நன்னீராட்டுக்கும் பயன்படும்.

2. புதர்களில் மாணிக்கக் கற்கள் கிடைக்கும் அவற்றைக் கண்டெடுப்பவரில் ஒரு சிலராவது எம்பெருமான் திருவேங்கடவனுக்குத் திருவாபரணத்திற்காக அளிப்பர். அப்போது புதராகத் தோன்றிய அடியேன் ரத்தினக் கற்களைத் தரும் பேற்றினைப் பெறுவேன்.

3. திருவேங்கடவனுக்குப் பூந்தோட்டம் அமைக்க ஏரியைக் கட்டிய அனந்தான் பிள்ளைக்கும் அவரது மனைவிக்கும் உதவ, திருவேங்கடவன் சிறுவனாகச் சென்று அனுமதி கேட்டார். அனந்தான் பிள்ளை மறுக்கவே அவரது தேவிக்கு, மறைவாக உதவினார். இதையறிந்த அனந்தான் பிள்ளை சிறுவதைத் துரத்திக் கொண்டே சென்றார். தன் மண் வெட்டியால் அடித்தார். சிறுவன் முகவாய் கட்டையில் இரத்தம் பீறிட்டது. அப்போதும் தொடர்ந்தார். சிறுவனாக வந்தவன் கருவறையில் சென்று மறைந்தான். திருவேங்கடவன் திருமேனியில் இரத்தம் கொட்டுவதைக் கண்டு, வந்த சிறுவன் திருவேங்கடவனே என்று உணர்ந்து பதைத்தார். உடனே சென்று ஒரு புதரில் உள்ள மூலிகையைக் கொண்டு வந்து ரத்தத்தை நிறுத்தினார். அந்தவடு தான் இன்றும் திருவேங்கடவன் முகவாய் கட்டையில் வெள்ளை நிறத்தில் உள்ளது. இப்படி மூலிகைகளைத் தரும் பேற்றினைப் பெறுவேன் என்றார். இப்புதரும் நீண்ட நாள் இருக்காது என அதையும் விரும்பாமல் என்றும் அழியாத மலை உச்சியாய் பிறக்க விரும்பினார்.

பாசுரம் -36

"மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடும் ஆடலவை ஆதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தேன் ஆவேனே "

தேவலோக நாட்டிய மகளிர்களான உருப்பசியும் மேனகையும் நாட்டியமாடக் கண்டுகளிக்கும் இந்திர பதவியை யான் விரும்பவில்லை. திருவேங்கடவன் புகழைப் பாடும் வண்டினங்கள் வாழும் திருவேங்கட மலையில் பனியும் சூரிய ஒளியும் பட்டு பொன்னிறமாய் காட்சியளிக்கும் மலையுச்சியாகப் பிறக்க விரும்பினார். எம்பெருமான் எழுந்தருளியுள்ள மலைகளை வணங்குவதும், வலம் வருவதும் ஒருவித வழிபாடாகும். திருவேங்கட மலைக்கு வரும் பக்தர்கள் தூரத்தில் வரும் போதே இது தான் திருவேங்கட மலை என்று அறிந்து வணங்குவதற்கு ஏதுவாக மலையுச்சியாகப் பிறக்க விரும்பினார் ஆழ்வார். அதிலும் அவருக்கு திருப்தி ஏற்படாததால், திருவேங்கட மலையில் பாயும் காட்டாறாகப் பிறக்க விரும்பினார்.

பாசுரம்-37

**"வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்**
**கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்**
**தேனார் பூஞ் சோலைத் திருவேங்கட மலைமேல்**
**கானாறாய்ப் பாயும் கருத்துடையேன் ஆவேனே "**

வானத்திலே திகழும் சந்திரனைப் போல, வெண் கொற்றக் குடைக் கீழிருந்து அரசாளும் செல்வத்தை யான் விரும்பவில்லை. பூஞ்சோலைகள் நிறைந்த திருவேங்கட மலையில் பாயும் காட்டாறாகத் தான் பிறக்க வேண்டும் என்கின்றார் ஆழ்வார்.

பூக்களும் தேனும் மூலிகைகளும் கலந்து வருவதால் காட்டாற்றின் நீர் சுவையுடையதாகும். மற்றும் அவற்றில் நீராடும் பக்தர்கள் நோய்களைப் போக்கும். திருவேங்கடத்து நீர் நிலைகளில் புகுந்து அவற்றை நிரப்பி, குடி நீருக்கும், பூஞ்சோலைகளுக்கு வேண்டிய நீருக்கும் பற்றாக்குறை ஏற்படாமல் செய்யும்.

ஆனால் இக்காட்டாறு மழைக் காலத்தில் மட்டுமே பயனை அளிக்கும். எனவே இதையும் முழுமையாக விரும்பவில்லை. அடியார்கள் நடந்து செல்லும் வழியாகப் பிறக்க விரும்புகின்றார் ஆழ்வார்.

பாசுரம் -38

**"பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும்**
**முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான்**
**மறையானான்**
**வெறியார் தண்சோலைத் திருவேங்கட மலை மேல்**
**நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேன் ஆவேனே "**

சிவனும், நான்முகனும், இந்திரனும் அவரவர் தகுதிக்குத் தக்கபடி செய்கின்ற பெரிய யாகங்களின் பயனாக, அவரவர் குறைகளைத் தீர்த்து, அவரவர் விருப்பங்களை நிறைவேற்றி வைப்பவனும், வேதங்களின் பரம்பொருளாகக் கூறப்படுபவனுமான எம்பெருமானுடைய, நறுமணம் மிக்க குளிர்ந்த சோலைகளையுடைய திருவேங்கட மலை மேல் அடியார்கள் நடந்து செல்லும் வழியாகக் கிடக்கும் நிலையை விரும்புகின்றார் ஆழ்வார். அடியார்களின் பாததூளி படுதலால் பாக்யம் செய்தவனாக இருப்பேன். எனவே இவ்வழியாகக் கிடக்க விரும்பினேன் என்கின்றார் ஆழ்வார்.

இன்று பாதையமைத்து பேருந்து வசதி செய்யப்படும் என்பதை முன்னரே அறிந்தார் ஆழ்வார். அடியார்கள் பெரும்பாலோர் பேருந்தில் சென்று விடுவர், நடந்து செல்பவர் ஒருசிலரே இருப்பர் என்று உணர்ந்து இந்த பேற்றினையும் விடுத்தார். அடுத்து என்றும் எப்பொழுதும் அவரைக் கண்டுவணங்கும் படியாகக் கருவறையில் படியாகக் கிடக்க விரும்பினார் ஆழ்வார்.

**பாசுரம்-39**

**"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே**
**நெடியானே வேங்கடவா நின்கோயிலின் வாசல்**
**அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்**
**படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே "**

செடிபோல் அடர்ந்துள்ள கொடிய தீவினைகளைப் போக்கியருளுகின்ற திருமகள் கேள்வனான திருமாலே! பெரியோனே! திருவேங்கடமுடையானே! உமது திருக் கோயிலின் கருவறையில் திருமாலடியார்களும், தேவர்களும், தேவலோக நாட்டியப் பெண்களும் எப்பொழுதும் உம்மைக் கண்டு வணங்கி வழிபடி கூட்டமாக இருப்பர்.

அத்தகைய சிறப்பு வாய்ந்த கருவறையின் படியாக இருக்க விரும்புகின்றேன். அப்படிக்கிடந்தால் எந்த நேரமும் உம்மைக் காணும் பேற்றினைப் பெறுவேன். உமது திருவருட் பார்வையும் அடியேன் மீது படும். இப்படி உம் கருவறையில் படியாகக் கிடக்கும் அடியேனுக்கு அருள் புரிய எண்ணி புன்முறுவல் பூப்பீர் ! அப்போது உமது பவளம் போன்ற

செந்துவர் திருவாயினைக் காணும் பேறு பெறுவேன் என்கின்றார்.

இவ்வாறு ஆழ்வார் கருவறையில் படியாகக் கிடக்க விரும்பியதால் அப்படியினை அனைத்து திருமால் திருக்கோயில்களிலும் குலசேகராழ்வார் படியென்றே சிறப்பித்துக் கூறுவர்.

இப்படி கல்படியாக இன்று கிடந்தாலும் பின் ஒரு காலத்தில் வெள்ளி, அல்லது பொன் போன்ற சிறந்த உலோகத்தகடுகளால் மக்கள் மூடிவிடுவர். அப்போது அப்பேறும் கிடைக்காமல் போகலாம் என்றும் அடுத்து என்ன நினைக்கலாம் என்றும் தயங்கினார் ஆழ்வார்.

இதையறிந்த திருவேங்கடவன், ஆழ்வாரே! நீர் எமக்கு அடிமைப்பட்டவர், சுதந்திர மற்றவர், உமது விருப்பத்திற்கு எதையும் நினைக்கலாகாதே, எனது விருப்பமே உமது விருப்பமாக இருக்க வேண்டும். அப்படியிருக்க நீர் இவ்வாறு நினைப்பது சரியில்லையே என்று உணரும் படிச் செய்தார்.

இதை உணர்ந்த ஆழ்வார் உமது விருப்பமே அடியேன் விருப்பம். உமது திருவுள்ளப்படி இத்திரு வேங்கட மலை மேல் ஏதேனும் ஒரு பொருளாக இருக்க அருள்புரிய வேண்டுமென்று அடுத்த பாசுரத்தில் வேண்டுகின்றார்.

பாசுரம் -40

**"உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழ் உருப்பசி - தன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்
செம்பவள வாயான் திருவேங்கட மென்னும்
எம்பெருமான்பொன் மலைமேல் ஏதேனும்
ஆவேனே"**

மேலுலகங்களை யெல்லாம் ஒரு கொற்றக் குடையின் நிழலிலிருந்து, அரசாண்டு , ஊர்வசியினுடைய அழகிய பீதாம்பரமணிந்த உடலைப் பெறினும் யான் அதனைப் பெற மாட்டேன். பவழம் போன்ற செந்துவர் திருவாயினையுடைய என் அப்பன் திருவேங்கடவன் மலையின் மேல் ஏதேனும் ஒரு பொருளாகப் பிறக்க அருள் புரிய வேண்டும் என்று வேண்டுகின்றார் குலசேகராழ்வார்.

இப்பாசுரங்களைக் கற்றவர்க்கு ஏற்படும் பலன்களைச் சொல்லுகின்றார் பின்வரும் பாசுரத்தில்.

பாசுரம்-41

**"மன்னிய தண்சாரல் வடவேங்கடத் தான் தன்
பொன்னியலுஞ் சேவடிகள் காண்பான்
புரிந்திரைஞ்சி
கொன்னவிலுங் கூர்வேல் குலசேகரன் சொன்ன
பன்னியநூல் தமிழ் வல்லார் பாங்காய பக்தர்களே !"**

பகைவர்களை வெல்லக் கூடிய கூர்மையான வேலையுடைய குலசேகராழ்வார், குளிர்ச்சி பொருந்திய திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவன் திருவடிகளை வணங்க விரும்பி,

அருளிச் செய்த இத்தமிழ்ப் பதிகத்தைக் பாடுபவர் இனிய பக்தர்களாவர் என்கின்றார் ஆழ்வார்.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம் !



# 8. பெரியாழ்வாரும்



# திருவேங்கடவனும்

# பெரியாழ்வாரும்-திருவேங்கடவனும்

## அவதாரம்

விஷ்ணுசித்தரென்றும் பட்டர்பிரான் என்றும் பெயர் பெற்ற பெரியாழ்வார், கலியுகத்தில் குரோதன ஆண்டு ஆனித்திங்கள் ஒன்பதாம் நாள் ஏகாதசி திதி ஞாயிற்றுக் கிழமை சுவாதி நன்னாளில், கருடாழ்வாராகிய பெரிய திருவடியின் அம்சமாக, ஸ்ரீவில்லிபுத்தூரில் அந்தணர் குலத்தில் முகுந்த பட்டருக்கும் பத்மா அம்மையாருக்கும் திருக்குமாரராக அவதரித்தார். திருமால் முழுமுதற்கடவுள் என்பதைப் பாண்டியன் சபையில் விளக்கிய பெருமையும், தன் வளர்ப்பு மகளான ஸ்ரீஆண்டாளைத் திருவரங்கனுக்குத் தந்து திருவரங்கனின் மாமனாரான பெருமையும் பெற்றார்.

''மாநிலத்தில் முன் நம் பெரியாழ்வார் வந்துதித்த
ஆனிதன்னில் சோதியென்றால் ஆதரிக்கும் -
ஞானியர்க்கு
ஒப்போரில்லை இவ்வுலகு தனிலென்று நெஞ்சே
எப்போதும் சிந்தித் திரு'' (உ.ர.மா-17)

## அருளிய அருளிச்செயல்கள்

1. திருப்பல்லாண்டு 2. பெரியாழ்வார்திருமொழி

வேதத்திற்கு ஓம் என்னுமதுப்போல, திவ்யப் பிரபந்தங்களுக்கெல்லாம் சுருக்கமானதும், ஆரம்பத்திலும் முடிவிலும் சேவிக்கக்கூடிய பெருமை பெற்றதுமான திருப்பல்லாண்டு 12 பாசுரங்களையும், பெரியாழ்வார் திருமொழியாகிய 461 பாசுரங்களையும், அருளிச்செய்துள்ளார்.
அவற்றுள் திருவேங்கடமுடையானைப் பற்றி ஏழு பாசுரங்களை அருளிச்செய்துள்ளார்.

## பெரியாழ்வார் திருமொழி

### பாசுரம் 1-4-3

**"சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்துசோதி பரந்தெங்கும்**
**எத்தனை செய்யினும் என்மகன்முகம் நேரொவ்வாய்**
**வித்தகன் வேங்கடவாணன் உன்னை விளிக்கின்ற**
**கைத்தலம் நோவாமே அம்புலீ கடிதோடிவா. "**

கண்ணபிரானுக்கு தொட்டில் பருவம் நீங்கி, தவழ்ந்து விளையாடத்தக்க பருவம் வந்தபின்பு, நிலா முற்றத்திலே சென்று தவழ்ந்து விளையாடுகிறான். அப்போது கண்ணனுடன் விளையாடவா என்று சந்திரனை யசோதைப் பிராட்டி அழைப்பதாகப் பெரியாழ்வார் பாசுரம் பாடுகின்றார்.

யசோதைப் பிராட்டியார், சந்திரனே நீ கண்ணனோடு விளையாட மகிழ்ந்து ஓடிவா என்று கூப்பிட்டும் சந்திரன் வரவில்லை. எனவே சந்திரனைப் பார்த்து, சந்திரனே உன் அழகுக்கு சமமானவர் யாவரும் இல்லை என்ற கர்வத்தினால் வராமல் இருக்கின்றாய், சந்திரா நீ இப்போது பதினைந்து நாட்கள்

வளர்வதுமாய், பதினைந்து நாட்கள் தேய்வதுமாய் இருக்கின்றாய். இப்படியின்றி நீ எப்போதும் தேய்வதின்றி முழுநிலவாகவே விளங்கினாலும் என் கண்ணனின் பேரழகிற்கு ஒப்பாகமாட்டாய்.

ஆகையால், தாமே அழகில் சிறந்தவனென்கிற செருக்கை விட்டுவிடு. உன்னைக் காட்டிலும் பன் மடங்கு சிறந்த அழகிய திருமுக மண்டலத்தையுடைவனான திருவேங்கடவனான கண்ணன் உன்னைக் கைகளால் அழைக்கின்றான். அதைப்பெரும் பேறாகக் கருதி விரைந்து ஓடி வா. நீ வரவில்லையென்றால், நீண்ட நேரமாக உன்னை அழைக்கும் இக்கண்ணனது கை வலிக்கும். எனவே உடனே ஓடிவா.

பாசுரம் 1-8-8

**"என்னிது மாயம்? என்னப்பன் அறிந்திலன்**
**முன்னைய வண்ணமே கொண்டு அளவாயென்ன**
**மன்னு நமுசியை வானில் சுழற்றிய**
**மின்னு முடியனே அச்சோ வச்சோ**
**வெங்கடவாணனே அச்சே வச்சோ."**

திருமால் வாமனனாக மாவலியிடம் சென்று மூன்றடி மண்வேண்டி, ஓங்கி உயர்ந்து பூமியையும் விண்ணையும் அளக்க முயன்றான். இதைக் கண்ட மாவலியின் மகன் நமுசி ஓடி வந்து இந்த செயல் ஏற்றதல்ல. குறளுருவில் தான் அளக்கவேண்டுமென்று தடுத்து திருமாலின் திருவடிகளைப் பிடித்துக்கொண்டான். நமுசியை விண்ணில் தூக்கி எறிந்து மண்ணையும் விண்ணையும்

அளந்தான். வாமனனாக அவதரித்த திருமாலே பின் கண்ணனாகவும் இன்று திருமலையில் திருவேங்கடவனாகவும் எழுந்தருளியுள்ளான். எனவே பெரியாழ்வார் தன்னை யசோதையாக பாவித்துக்கொண்டு திருவேங்கடவனைக் கண்ணனாகவும் பாவித்துக் கொண்டு பேசுகின்றார். ஒளி மிகுந்த நவமணிகளால் செய்யப் பட்ட திருமுடியை அணிந்துள்ள திருவேங்கடவனே விரைவில் வந்து என்னை அணைத்துக்கொள், அணைத்துக்கொள் என்று பிள்ளைப் பாசத்தோடு அழைத்து இன்ப மடைகின்றார்.

அச்சோ எனும் சொல் அணைத்துக்கொள் எனும் பொருளைத் தருகின்றது. பாசத்தின் மிகுதியால் இருமுறை இச்சொல்லைப் பயன் படுத்துகின்றார்.

பாசுரம் 2.6.9

**"தென்னிலங்கை மன்னன் சிரம் தோள் துணிசெய்து
மின்னிலங்கு பூண் விபீடண நம்பிக்கு
என்னிலங்கு நாமத்தனவும் அரசென்ற
மின்னிலங்கு காரற்கு ஓர்கோல் கொண்டுவா !
வேங்கட வாணற்கு ஓர் கோல் கொண்டுவா !"**

இராவணன் ஆண்ட இலங்கை, மதிலரண், மலையரண், காட்டரண் ஆகிய மூன்று அரண்களையுடையது. இம்மூன்று அரண்களைக் கொண்டு அழகுடன் கட்டப்பட்ட, இராக்கதர்கள் வாழும் இலங்கைக்குத் தலைவனான இராவணனுடைய பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும்

அறுத்து ஒழித்தான் இராமபிரான். ஒளி மிகுந்த ஆபரணங்களை அணிந்துள்ள சக்ரவர்த்தித் திருமகனான இராமபிரானை, இராவனனின் தம்பியாகிய தர்மவானான விபீடணனின் சரணாகதியை ஏற்று, இலங்கை அரசை அளித்து முடிசூட்டினான். இராமபிரானின் பெயர் இவ்வுலகில் விளங்கும் வரை இலங்கை அரசு விபீடணனுக்கு உரிமையுடையதாகும் என்றும் திருவாய் மலர்ந்தருளினான்.

இராமபிரானாக அவதரித்த திருமாலே கண்ணனாகவும், இன்று திருவேங்கடவனாகவும் எழுந்தருளியுள்ளான். கண்ணனுக்குத் தலை வார விரும்பிய யசோதை கண்ணனை அழைத்தாள். ஆனால் கண்ணனோ தான் மாடுகளை மேய்க்கச் செல்ல வேண்டும் என்றும், அதற்கான நந்தகோபர் குலத்தாரால் வழிவழியாகப் பயன்படுத்தப்பட்டு வரும் கோலினை பெற்றுத் தந்தால் தலைவாரிக் கொள்ள வருவேன் என்று அடம் பிடித்தான். எனவே யசோதை காக்கையை அழைத்துக் கோல் கொண்டு வரும்படி கேட்கின்றாள்.

பெரியாழ்வார் கண்ணனை திருவேங்கடவனாகக் கண்டு திருவேங்கடவனுக்குத் தலை வார வேண்டும் அதற்காக அவன் விரும்பும் கோலைக் கொண்டு வா என்று காக்கையிடம் கேட்கின்றார். அப்படி நீ கோல் கொண்டு வராவிட்டால் இராவணனைத் தண்டித்ததைப் போல உன்னையும் தண்டித்து விடுவார் என்கின்றார் பெரியாழ்வார்.

பாசுரம் 2.7.3

**"மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்கு
கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்பு துகிலவை கீறி
நிச்சலும் தீமைகள் செய்வாய் ! நீள் திருவேங் கடத்து
எந்தாய் !
பச்சை தமனகத்தோடு பாதிரிச் பூச்சூட்டவாராய்"**

கண்ணனின் தாயான யசோதை கண்ணனுக்குத் தலை வாரி, பூச்சூடி மகிழ விரும்பினாள். இதைப் பெரியாழ்வார் பத்து பாசுரங்களில் பாடி மகிழ்கின்றார். தன்னை யசோதையாக பாவித்துக் கொண்டு, பூச்சுட்டிக் கொள்ள அழைக்கின்றார். எம்பெருமான் கண்ணனுக்கு நறுமனம் மிக்க செண்பகம், மல்லிகை, செங்கழு நீர்ப்பூ, இருவாட்சி, பாதிரி, தமனகம், கருமுகை, புன்னை போன்ற எட்டு வகையான பூக்களைச் சூட்டி மகிழ விரும்புகின்றார்.

கண்ணனாகப் பிறந்த போது, ஆயர் மகளிர் வாழும் மச்சொடு கூடிய மாளிகைகளிலே ஏறிச் சென்று, அவர்களது மார்பு முதலான உறுப்புகளில் அணிந்துள்ள பட்டாடைகளையும் புடவைகளையும் கிழித்து அவர்களுக்குத் தீமையைச் செய்தான். அந்தக் கண்ணனே இன்று திருவேங்கடத்து ஆயனாக எழுந்தருளியுள்ளான். விண்ணையளாவுகின்ற உயர்ந்த மலையாகிய திருவேங்கடமாமலையில் எழுந்தருளியுள்ள பெருமானே ! யான் உனக்கு பச்சை நிறமுடைய இலைப் பூவான தமனகத்தோடு (தவனம்) பாதிரிப்பூவையும் கலந்து மாலையாகத் தொடுத்து வைத்துள்ளேன். இம்மலர் மாலையை வந்து சூட்டிக் கொள்வாயாக என்று பெரியாழ்வார் அழைக்கின்றார்.

பாசுரம்- 2.9.6

"போதர் கண்டாய் இங்கே போதர் கண்டாய்
போதரேன் என்னாதே போதர் கண்டாய்
ஏதேனும் சொல்லி அசல கத்தார்
ஏதேனும் பேச நான் கேட்க மாட்டேன்
கோது கலமுடைக் குட்ட னேயோ !
குன்றெடுத் தாய் குட மாடு கூத்தா !
வேதப் பொருளே ! என்வேங் கடவா !
வித்தகனே ! இங்கே போத ராயே."

கண்ணபிரான் கோகுலத்தில் உள்ள அனைத்து கோபியர் வீடுகளுக்கெல்லாம் சென்று, அங்குள்ள பால், தயிர், வெண்ணையெல்லாம் களவாடியுண்டு, அவர்களுக்குப் பல வகைகளிலும் தொல்லை தருவதை இன்பமாகக் கருதினான். கண்ணனது தொல்லைகளைப் பொறுக்க மாட்டாத கோபியர்கள் கண்ணனது இல்லம் வந்து, யசோதைத் தாயை அழைத்து, கண்ணன் செய்த குறும்புகளையெல்லாம் சொல்லி, கண்ணனை அழைத்துக் கொள்ளும் படி வேண்டினர். யசோதை கண்ணனை அழைத்தாள். கண்ணனே! உன்னை இக்கோபப் பெண்கள் குறை கூறுவதைக் கேட்டு என் மனம் வாடுகின்றது. இத்துயரை என்னால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. நீ உடனே என்னிடம் வந்து விடு.

இந்திர விழா தடைபட, அதனால் கோபங்கொண்ட இந்திரன் கோக்களையும், கோகுலத்தையும், கோபர்களையும் துன்புறுத்த ஏழு நாட்கள் விடாத கல் மழை பொழிந்த போது நீ கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து

கோகுலத்தையும்,கோக்களையும், கோபர்களையும் காத்தாய். இக்குலத்தைக் காக்க வன்றோ நீ இக்குலத்தில் வந்து பிறந்தாய். உன்னையே எங்கள் குலக்கொழுந்தாகவும், குல நிதியாகயும் கருதியுள்ளோம்.

ஆயர்கள் செல்வம் மிகுந்தால். அச்செல்வச் செறுக்கால் தலையில் பல குடங்களை அடுக்காக வைத்துக் கொண்டும், இரு தோள்களில் இரு குடங்களையும் இருகைகளில் இரு குடங்களையும் வைத்துக் கொண்டு விளையாடும் கூத்து குடக்கூத்தாகும். தலையிலும் தோள்களிலும் வைக்ககப்பட்ட குடங்களுக்கு இடையூறு நேரா வண்ணம் கைகளில் உள்ள குடங்களை வானில் வீசி மீண்டும் பிடித்து விளையாடுவர். இந்தக் குடக் கூத்தை ஆடி மகிழ்விப்பவனல்லவா நீ !

அத்தகைய கண்ணன் இன்று திருவேங்கடமலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான். தன்னை யசோதையாகப் பாவித்துக்கொண்டு திருவேங்கடவனைக் கண்ணனாக பாவித்துக்கொண்டு அழைக்கின்றார் பெரியாழ்வார்.

மண்ணோரையும் விண்ணோரையும் ஒன்றாகவே கருதி, அனைவர்க்கும் எழுந்தருளி அருள் புரிந்து வரும் எம்பெருமானே! உன்னைக் குறை கூறுவாரிடம் நிற்காமல் என்னிடத்தில் விரைவாக வருவாயாக என்று அழைக்கின்றார் பெரியாழ்வார்.

பாசுரம் 3-3-4

"கடியார் பொழிலணி வேங்கடவா கரும்
போரேறே ! நீயுகக்கும்
குடையும் செருப்பும் குழலும் தருவிக்கக்
கொள்ளாதே போனாய் மாலே
கடிய வெங்கானிடைக் கன்றின் பின்போன
சிறுக்குட் டச்செங் கமல
அடியும் வெதும்பி உன்கண்கள் சிவந்தாய்
அசைந்திட் டாய் நீ எம்பிரான் !. "

நறுமணம் மிக்க மலர்களையுடைய பொழில்கள் மிகுந்த மிகவும் அழகிய திருமலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! கரிய நிறமுடைய செறுக்கினால் எதிரே போரிட்டு தன்னிச்சைப்படி திரியும் காளையைப் போல, செருக்கியிருப்பவனே ! கன்றுகளிடத்தில் பாசமுள்ளவனே !

எனக்கு இறைவனாக இருப்பவரே! நீ விரும்பும் குடையையும் செருப்பையும், வேய்ங்குழலையும் நான் உனக்குக் கொடுத்தாலும் நீ அவற்றை வாங்கிக் கொள்ளாமல் கன்றுகள் பின்னே அவற்றை மேய்க்க கானகத்திற்குச் சென்றாய்.

நீ மிகவும் வெம்மையான காட்டிலே கன்றுகளின் பின்னே தொடர்ந்து சென்றதனால் சிறு பிள்ளையாகிய உன்னுடைய கால்கள் செருப்பில்லாமையால் கொதிப்பினால் கன்றிப் போயின. குடையில்லாமல் சென்றமையால் உன் தாமரைக் கண்கள் சிவந்தன, இங்குமங்கும் திரியாமல் இருந்த இடத்திலேயிருந்து கன்றுகளை மேய்க்க வேய்ங்குழலில்லாமையால்

கன்றுகளின் பின்னே திரிந்து திரிந்து நடந்ததால் உன் உடல் இளைத்துப் போயிற்று. இப்படியும் ஒரு துன்பம் இச்சிறு பிள்ளைக்கு நேர வேண்டுமோ என்று யசோதை நொந்து போயினாள். கண்ணா ! இனிமேல் நீ நாளை முதல் காட்டுக்குப் போக வேண்டாம். நீ அழகு செய்து கொண்டு வீட்டிலேயே இரு என்று யசோதை கூறினாள். இப்படிப் பட்ட கண்ணனே இன்று திருவேங்கடத்தில் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ளான் என்று பெரியாழ்வார் பாடுகின்றார்.

**பாசுரம் 6-4-1**

**"சென்னியோங்கு தண்திருவேங்கட முடையாய்! உலகு**
**தன்னை வாழ நின்ற நம்பீ ! தாமோதரா ! சதிரா !**
**என்னையும் என் உடமையையும் உன்சக்கரப்**
**பொறி யொற்றிக் கொண்டு**
**நின்னருளே புரிந்திருந்தேன் இனிஎன் திருக்குறிப்பே!"**

எம்பெருமானே வைகுண்டத்தில் பரம் பொருளாக இருக்கும் நிலையையும், திருப்பாற்கடலில் வியூகநிலையில் பள்ளிகொண்டிருக்கும் நிலையையும், மீன் முதலாக கிருஷ்ணாவதாரம் வரையிலான அவதார நிலையையும், எள்ளுக்குள் எண்ணெய் போலும், கரந்த பாலில் நெய்யே போலும், உடல் மிசை உயிரென எங்கும் மறைந்துள்ள நிலையையும், மண்ணுலக மக்கள் அறிந்து, உம்மை வணங்கி வழிபட்டு உம் திருநாட்டை அடைய முடியாத நிலை கண்டு வருந்தினாய். எனவே உமது ஆதியஞ்சோதி உருவை பரமபதத்திலே வைத்து இம்மண்ணுலகில் ஓவிய, சிலை உருவங்களிலே தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவந்தானே என

எளியனாய் எழுந்தருளி காட்சி தருகின்றீர். மக்கள் உமக்கு நீராட்டி, பூச்சூட்டி, பட்டாடை அணிவித்து, திருவாபரணங்கள் சூட்டி, திருவமுது கண்டருளப் பண்ணி திருவிழா எடுத்து, உன் புகழ் பாடி, ஆடி மகிழ்கின்றனர். எனவே இந்த அர்ச்சை நிலை எளிதாயிற்று.

மண்ணவரும் விண்ணவரும் ஒருங்கே வந்து வழிபடும் நிலையில், உதயகாலையில் கதிரவன் கிளம்பினால் எல்லாருக்கும் ஒளி கிடைப்பதைப் போல, ஆகாயத்தளவும் ஓங்கி உயர்ந்திருக்கும் மலையுச்சிகளையுடைய குளிர்ந்த திருவேங்கட மலையிலே, கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய் எழுந்தருளி, உலக மக்கட்கு அவரவர் விரும்பிய படி வேண்டியதையெல்லாம தந்து வாழ்வித்து அருளுகின்ற சிறந்த நற்குணங்களையுடையவரான திருவேங்கடவனே!

கிருஷ்ணவதாரத்தில் தாய் யசோதை உன் குறும்புகளைத் தாங்க முடியாமல் சிறு சிறு முடிகளையுடைய கயிற்றினால் உரலோடு இணைத்துக் கட்டியதால், அக்கயிற்றின் தழும்பு உமது திருவயிற்றில் தோன்றும் படியாகக் கட்டுண்ட தாமோதரனே !

உமது அடியார்களின் குற்றங்களைக் கண்ணெடுத்தும் பாராத சிறந்தவனே ! என் கண்ணபிரானே !

நீண்ட நாட்களாய் உன் திறத்திலும் உன் குணங்களிலும் ஈடுபடாமல், உலக இன்பங்களையே விரும்பி அங்கு மிங்கும் திரிந்து கொண்டிருந்த

அடியேனை, உமது திருக்கல்யாண குணங்களைக் காட்டி , உம் வயப்படுத்திக் கொண்டு, அடியேன் உனக்கே அடிமையென்று உணரும் படிச் செய்து, உமக்கும் உம் அடியார்களுக்கும் தொண்டு செய்வதற்கு அடியேனை தகுதிப்படுத்த, அடியேனுக்கு ஓர் ஆசாரியரைக் காட்டிக் கொடுத்தீர். அவர் மூலம் அடியேன் உடலில் சங்கு சக்கரப் பொறிகளை ஒற்றிக் கொண்டும், திருமண் காப்பு அணிவித்துக் கொண்டும், தாஸ்ய நாமம் பெற்றக் கொண்டும், திருமந்திரம் முதலான மந்திரங்களைப் பெற்றுக் கொண்டும் உமது வழிபாட்டினை உமது திருவுள்ள உகப்பிற்காகவே செய்து கொண்டு வருகின்ற பேற்றினைத் தந்தீர் ! இதனால் உமது விருப்பமும் அடியேன் விருப்பமும் நிறைவேறின. இனி அடியேன் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை. இனி செய்ய வேண்டுவதெல்லாம் உமது திருவுள்ளப்படியே என்கின்றார் பெரியாழ்வார்.

**பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.**

# 9. ஆண்டாளும்



திருவேங்கடவனும்

# ஆண்டாளும் திருவேங்கடவனும்

## ஆண்டாளின் அவதாரம்

பூமிப் பிராட்டியார் திருமாலிடம் வேண்டி திருமாலடியராக, ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வார் பூந்தோட்டத்தில், திருத்துழாயின் அடிவாரத்தில் சிறு பெண் குழந்தையாக, நளவருஷம் ஆடி மாதம் பூர நன்னாளில் அவதாரம் செய்தார்.

**"இன்றோ திருவாடிப் பூரம் எமக்காக**
**அன்றோ இங்கு ஆண்டாள் அவதரித்தாள்- குன்றாத**
**வாழ்வான வைகுந்த வான் போகந்தனை யிகழ்ந்து**
**ஆழ்வார் திருமக ளாராய்"** (உ.ர.மா-22)

பூந்தோட்டத்தில் தோன்றிய ஆண்டாளை எடுத்துச் சென்று கோதையென்று பெயரிட்டு வளர்த்து வந்தார் பெரியாழ்வார். கோதைக்குத் திருமால் பற்றிய வரலாறுகளை சொல்லிக் கொடுத்தார். திருமாலை அடைய பாவை நோன்பை நோற்று, திருப்பாவையைப் பாடினாள். தக்க பருவம் அடைந்ததும் கோதையின் திருமணத்தைப் பற்றிப் பேசினார் பெரியாழ்வார். ஆண்டாளோ தான் மானிடரைத் திருமணம் செய்து கொள்ளமாட்டேன், திருமாலையே திருமணம் செய்துகொள்வேன் என்று கூறி, எப்பொழுதும் திருமாலின் நினைவாகவே இருந்தாள். ஆனால் திருமாலோ ஆண்டாளுக்குக் காதல் வேட்கையைத் தோற்றுவித்து காலந்தாழ்த்தினார். முற்றிய காதல் வேட்கை திருவேங்கடவனை அடையவேண்டுமென்று மேகங்களைத் தூது விடுத்தாள். இச்செய்திகள்

அடங்கிய பிரபந்தமே, நாச்சியார் திருமொழி ஆயிற்று. இந்த நாச்சியார் திருமொழி ஒரு மாபெரும் காதல் இலக்கியமாகும். முதல், நான்கு, ஐந்து, எட்டு, பத்தாம் திருமொழிகளில் மொத்தம் 16 பாசுரங்களால் திருவேங்கடவனை அனுபவிக்கின்றாள்.

**நாச்சியார் திருமொழி - முதல் திருமொழி**

பாசுரம் - 1

**"தையொரு திங்களும் தரைவிளக்கித்**
**தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்**
**ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து**
**அழகினுக் கலங்கரித்து அனங்கதேவா**
**உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி**
**உன்னையும் உம்பியையும் தொழுதேன்**
**வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை**
**வேங்கட வற்குஎன்னை விதிக்கிற்றியே"**

ஓ காமதேவனே ! மார்கழி மாதம் முழுவதும் ஒரு மாத காலம் பாவை நோன்பு நோற்றிருந்தோம். இனி இத் தைமாதத்தில் ஸ்ரீமந்நாராயணன் எழுந்தருளும் இடத்தைச் சோதித்து, வண்ணங்களுடன் அழகான கோலமிட்டு அலங்கரித்தோம். மாசி மாதம் முதல் 15 நாட்களில் எம்பெருமான் அழகுக் கேற்ப

நுண்ணிய மணலைக் கொண்டு, அவன் எழுந்தருளும் தெருவை மிகவும் அழகாக அலங்காரம் செய்து வாழக் கூடுமோ? என்னும் ஆசையாலே காமதேவனாகிய உன்னையும், உன் தம்பியான சாமனையும் வணங்கினேன். எனவே, கருணைமிக்க மன்மதனே

எம்பெருமானுக்கு மாறுபாடானவர்கள் மீது தீயை உமிழும் சக்கரத்தாழ்வானைத் திருக்கையிலே ஏந்தியிருக்கும் திருவேங்கடமுடையானுக்கு அனைத்து தொண்டுகளையும் செய்யும்படி என்னைக் காக்கவேண்டும். திருவேங்கடவன் அருள்பெறாமையால் தன் உள்ளமும், உடலும் ஒருங்கே வலிவிழந்து, தொண்டுக்கு இடையூறு நிகழாமல் இருக்கத் தன்னைக் காக்கும்படி, ஆண்டாள் காமனை வேண்டினாள்.

பாசுரம் - 3

**"மத்தநன் நறுமலர் முருக்க மலர்**
**கொண்டுமுப் போதும்உன் னடிவணங்கி**
**தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து**
**வாசகத் தழித்துஉன்னை வைதிடாமே**
**கொத்தலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு**
**கோவிந்த னென்பதோர் பேரெழுதி**
**வித்தகன் வேங்கட வாணனென்னும்**
**விளக்கினில் புகஎன்னை விதிக்கிற்றியே"**

ஓ காமதேவனே ! நறுமணம் மிக்க ஊமத்த மலர்களையும், முருக்க மலர்களையும் கொண்டு வந்து மூன்று காலமும் உன் பாதங்களை வணங்கி, உன்னை வழிபடுகின்றேன். நான் உன்னை வழிபட்டதற்குப் பலனாக என் மன விருப்பத்தை நீ நிறைவேற்றாமல் போனால், என் உள்ளம் மிகவும் கொதிப்படைந்து, மன்மதன் உண்மையில் பலன் தரும் தெய்வமல்லன், பொய்த் தெய்வம் என்று நாட்டு மக்கள் அனைவரும் அறியும்படிச் செய்து, உன் பெருமைக்கு இழுக்கை

உண்டாக்குவேன். அப்படி நீ இழுக்கை அடையாமல், தப்பாமல் புகழ் பெற முயற்சிப்பாய்.

மன்மதனே நீ எனக்குச் செய்ய வேண்டிய செயலைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. கொத்துக் கொத்தாய் பூத்திருக்கும் மலர்களாகிய அம்புகளை, வில்லில் தொடுத்துக்கொண்டு, எங்களைக் காப்பதற்காகவே எழுந்தருளியுள்ள கோவிந்தன் என்கின்ற பெயரை என் நெஞ்சிலே எழுதி என்னைத் திருவேங்கடமுடையானிடத்தில் சேர்க்க வேண்டும்.

**வேறு பொருள் :** மன்மதனே! என்னைப் புறக்கணித்து நிற்கும் திருவேங்கடவன் மேல், உன் வில்லில் மலர்களாகிய அம்புகளைத் தொடுத்துச் செலுத்தவேண்டும். அதற்கும் அவன் முகங்காட்டவில்லையென்றால், இந்த கோவிந்தன் ஒரு பெண்ணை ஆதரிக்காமல் துன்புறுத்துகிறான் என்று எல்லோருக்கும் தெரியப்படுத்தி, அவன் பெயருக்கு களங்கத்தை உண்டாக்குவேன். கோக்களையும், கோபியர்களையும், கோபர்களையும், கோகுலத்தையும் காத்தாலன்றோ இவனுக்கு கோவிந்தன் என்று பெயர் சூட்டப்பட்டது.

ஆனால், கோவிந்தன் என்று பெயர்பெற்ற இந்த திருவேங்கடவன் ஒரு பெண்ணின் துயரத்தைப் போக்காமல் துன்பப்படுத்துகின்றான். எனவே இவனுக்கு கோவிந்தன் என்ற பெயர் எப்படிப் பொருந்தும் என்று எல்லோரிடமும் கூறி அவன் பெயருக்குக் களங்கத்தை ஏற்படுத்துவாயாக. இப்படியெல்லாம் சொல்வேன் என்று அவனை பயமுறுத்தி அவன் என் மீது அருள்புரியவும், யான்

அவனோடு சேரவும் எனக்கு உதவிபுரிவாயாக. அல்லது உனது அம்பிலே அவன் கோவிந்த நாமத்தை எழுதி, அதனை என்மீதுசெலுத்தி,என் நெஞ்சம் அவனிடத்தில் செல்லவும், நான் அவனுடன் கூடவும் செய்வாயாக.

இராமபிரானுடைய ராம நாமத்தைச் சொல்லிக்கொண்டே சென்றதால்தான், அனுமன் விண்ணில் பறந்து கொண்டு சென்று கடலைக் கடந்து, இலங்கையில் சீதையைக் கண்டு தூதுச்செய்தியைச் சொல்லி கணையாழியைக் கொடுத்தான். எனவே நீ அவனது திருநாமத்தை எழுதிய உன் பாணத்தை என் மீது எய்தி, என்னை அவனுக்கே அடிமையாக்குவாயாக. பிராட்டி ராம நாமத்தைக் கேட்டு, கணையாழியைப்பெற்று, பிரிவுத் துயர் நீங்கி மகிழ்ந்ததைப்போல யானும் அவனது கோவிந்த நாமத்தைக் கேட்டு மகிழ்வேன் என்று மன்மதனிடம் கூறினாள் ஆண்டாள்.

**நான்காம் திருமொழி**

**பாசுரம் - 2**

**"காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்**
**வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்**
**ஓட்டரா வந்துஎன் கைப்பற்றி தன்னொடும்**
**கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே"**

**ஓ கூடல் தெய்வமே !**

இராமபிரான் தண்டகாரண்யத்தில் ரிஷிகளுடன் கூடியிருந்து வனவாசம் அனுபவித்ததைப் போலவும்,

கண்ணபிரான் பிருந்தாவனத்தில் கோபியருடன் கூடியிருந்ததைப் போலவும், இராமபிரான் திருவயோத்தியில் அனைவருடன் கூடியிருந்து நகர வாழ்க்கையை அனுபவித்ததைப்போலவும், கண்ணபிரான் திருவாய்பாடியிலே யாதவப் பெண்களுடன் கூடியிருந்ததைப் போலவும்,

திருக்கண்ணபுரத்திலே வீற்றிருப்பவனும், நகர-கானகவாசம் இரண்டையும் ஒன்றாகக் கருதி இனிதாகக் கொள்ளும் மனப் பான்மையுடையவனும் தேவர்களுக்காக பரமபத உயர்ந்த நிலையை விட்டுத் தன்னைத் தாழ்த்திக் கொண்டு வாமனனாக அவதரித்து மாவலியிடம் மூவடி மண் வேண்டி, அனைத்து உலகங்களையும் தமது திருவடியால் அளந்தருளியவனும் ஆகிய எம்பெருமான் மிக்க கருணையோடு ஓடி வந்து எனது கையைப் பிடித்து அணைத்துக் கொள்வானாகில் நீ கூடவேண்டும். அதாவது அவன் எழுந்தருளி என்னைக் கூட்டிக்கொள்ளும்படியாக, நீ உதவி புரிய வேண்டும்.

## கூடல் இழைத்தல்

நினைத்த காரியம் நிறைவேறுமா என்பதையறிய கண்ணை மூடிக்கொண்டு வட்டம் போட்டால், வட்டம் கூடினால் காரியம் நிறைவேறும் என்றும், வட்டம் கூடவில்லையென்றால் காரியம் நிறைவேறாது என்றும் நம்பிக்கை கொள்வர்.

இதைப் போலவே, திருவேங்கடவன் தன்னை வந்தடைவானா என்பதை அறிய ஆண்டாள் கூடலிழைத்தாள் என்றும் பொருள் கொள்ளலாம்.

**ஐந்தாம் திருமொழி**
**பாசுரம் - 2**

**"வெள்ளை விளிசங்கு இடக்கையில் கொண்ட**
**விமலன் எனக்கு உருக்காட்டான்**
**உள்ளம் புகுந்துஎன்னை நைவித்து நாளும்**
**உயிர்பெய்து கூத்தாட்டு காணும்**
**கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்**
**களித்திசை பாடும் குயிலே**
**மெள்ள விருந்து மிழற்சி மிழற்றாதுஎன்**
**வேங்கடவன் வரக் கூவாய்."**

இப்பாசுரத்தில், வேங்கடவனிடம் சென்று அவன் தன்னிடம் வரும்படிக் கூப்பிடும்படி குயிலினை வேண்டுகின்றாள் ஆண்டாள்.

தேன் ஒழுகும் செண்பகப் பூவிலே உள்ள சாரமான தேனை உண்டு மகிழ்ந்து, உன் இனிமையான குரலால் இசைபாடும் குயிலே! நீ எனக்கு ஒரு நல்ல செயல் செய்யவேண்டும். வெண்மையான திருச்சங்காழ்வான் கார்முகில் போன்ற திருமேனியுடைய திருமாலின் இடக்கையில் இருந்து கொண்டு, என்னைப்போலே நீங்களும் பகவத் தொண்டு செய்ய வாருங்கள் என அனைவரையும் அழைக்கும். அத்தகைய திருச்சங்கினை ஏந்தியுள்ள திருவேங்கடவன், அவனைக் காணப் பேராவல் கொண்டுள்ள எனக்கு, அவனது திருவுருவைக்

காட்டாமல் மறைக்கின்றான். அவன் காட்டாமையால், அவன் திருவுருவை மறந்து பிழைக்க நினைத்தாலோ மறக்கவும் முடியவில்லை. என் உள்ளத்தில் வந்து புகுந்து, நினைக்கும்போதும், அவன் பெயரைச்சொல்லும்போதும், உள்ளம் ஓடிந்து உருகும்படிச் செய்கின்றான். அத்தளர்ச்சியால் உயிரை விடும் நிலையை அடைந்தேன். இவளை இப்படிப் பிழைக்கவிடலாமா? விடக்கூடாது இன்னும் நெடு நாட்கள் துன்பப்படுத்தவேண்டும் என்று நினைத்து, மறுபடியும் உயிர் தலையெடுக்கச் செய்கின்றான்.

பழையபடி உள்ளம் துன்புற்று துடிக்கச் செய்வதையே பொழுது போக்காகக் கொண்டுள்ளான். நான் இப்படி துன்பப் பட்டுக் கொண்டிருக்க, நீ மட்டும் மகிழ்வோடு இனிமையாகப் பாடிக் களித்து பொழுது போக்கலாமா? இது உனக்கு நியாயமா? எனவே நீ திருவேங்கடவனிடம் சென்று, என் நிலையை எடுத்துச் சொல்லி அவன் இரக்கப்பட்டு என்னிடம் வரும்படிச் செய்வாயாக என்று குயிலிடம் வேண்டுகின்றார் ஆண்டாள்.

எட்டாம் திருமொழி

பாசுரம் - 1

" விண்ணில மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்
தெண்ணீர்பாய் வேங்கடத்து என் திருமாலும்
போந்தானே
கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச்
சோர்வேனை
பெண்ணீர்மை யீடழிக்கும் இதுதமக்கு ஓர்
பெருமையே"

எம்பெருமான் மீது ஏற்பட்ட காதல் வேட்கையால் மனம் வாடியிருந்த ஆண்டாள், எம்பெருமான் இடக்கையில் உள்ள திருச்சங்குடன் சிறிது நேரம் உரையாடி துன்பத்தை மறக்க முயன்றாள். ஆனால் ஆண்டாளின் குறைகளைக் கேட்டு மறு வார்த்தை பேசாமல் இருந்தது திருச்சங்கு. எனவே தன் துயரம் எல்லை கடந்தது. கார்காலம் ஆதலால் கருத்த மேகங்கள் அங்குமிங்கும் திரிந்தன. இதைக் கண்டவுடன் கரிய திருமேனியுடைய எம்பெருமான் அம்மேகங்களுடன் வந்திருப்பான் என்று கருதினாள். எம்பெருமான் உங்களுடன் வந்திருக்கானா என்று மேகங்களைக் கேட்டாள். ஆனால் மேகங்களும் ஏதும் பேசவில்லை. ஆகவே மேகங்களை நோக்கி, நீங்கள் என் தலைவனான திருவேங்கடமுடையான் திருக்கோயிலுக்குச் சென்று என் துயரத்தை அறிவியுங்கள், என்று வேண்டுகின்றாள்.

வானமெங்கும் பந்தல் போல் உலாவிவரும் மேகங்களே என் தலைவனான திருவேங்கடமுடையானும் உங்களோடு கூட இங்கு எழுந்தருளி உள்ளானோ? என்று ஆண்டாள் மேகங்களை நோக்கிக் கேட்டாள். அதற்கு மேகங்கள் மறுமொழி ஏதும் பேசவில்லை. ஆண்டாள் கண்ணீர் விட்டு மேகங்களே நான் இப்படிக் கண்ணீர் விட்டு அழும்படி என்னைத் துன்புறுத்துவது திருவேங்கடவனுக்கு ஒரு பெருமையோ? நீங்களே சொல்லுங்கள் எனறாள்.

பாசுரம் - 2

"மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள் வேஙகடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட தாடாளன்
வார்த்தையென்னே
காமத்தீ யுள்புகுந்து கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்தோர் தென்றலுக்கு இங்கிலக்காய்
நானிருப்பேனே "

ஓ காளமேகங்களே நீங்கள் எனக்காக, உங்கள் கொடைப் பண்பினால் இன்று புதிதாக ஏவல் செய்ய வேண்டுமோ? பயன் நோக்காது மழையைப் பொழியும் வள்ளல் தன்மையை இயல்பாகக் கொண்டவர்கள் அல்லவா நீங்கள். விலை உயர்ந்த முத்துகளையும், பொன்னையும் ஒருவரும் வேண்டாமலிருக்க, நீங்கள் மழையைப் பொழிகின்றீர்கள். இப்படிப்பட்ட வள்ளல் தன்மை மிக்க உங்கள் பாதங்களைத் தொட்டு வேண்டுகின்றேன். எனக்காகத் திருவேங்கடவனிடம ஒரு வார்த்தை சொல்லலாகாதா?

நான் திருவேங்கடவனிடத்தில் வைத்திருக்கும் காமமாகிற தீயானது, எனது கை, கண் போன்ற வெளி உறுப்புக்களைத் துன்புறுத்துவது மட்டுமில்லாமல் என் உள் மனத்திலும் புகுந்து என்னை வாட்டுகின்றது. தென்றல் காற்றானது என் காமத்தீயினுக்குத் துணையாயிருந்துகொண்டு எனது நோயை அதிகப்படுத்துகின்றது. இந்த என் நிலையைத் திருவேங்கடவனிடம் சென்று சொல்லி, அவன் எனக்கு அருள்புரியும்படிச் செய்யுங்கள் என்று ஆண்டாள் மேகங்களிடம் வேண்டினாள்.

பாசுரம் - 3

**"ஒளிவண்ணம் வளைசிந்தை உறக்கத்தோடு**
**இவையெல்லாம்**
**எளிமையால் இட்டுஎன்னை ஈடிழியப் போயினவால்**
**குளிரருவி வேங்கடத்து என் கோவிந்தன்**
**குணம்பாடி**
**அளியத்த மேகங்காள் ஆவிகாத்து இருப்பேனே."**

ஆண்டாள் எம்பெருமானைப் பிரிந்து, அதனால் ஏற்பட்ட துக்கத்தினால் உடல் அழகொழிந்து, தனது பொன்னிறம் மாறி பசலை அடைந்து, உடல் மெலிவால் கை வளைகள் கழன்று, உள்ளம் தளர்ந்து, உறக்கம் ஒழிந்து, சீர் குலைந்து இருக்கும் இருப்பை என்னால் சொல்ல இயலவில்லை. துயர்வரின் நினைமின் எனும் வாக்கிற்கிணங்க, இக்காமத்தால் ஏற்பட்ட துன்பம் நீங்க, எனது நாயகனான திருவேங்கடமுடையான் திருக்கல்யாண குணங்களைப் பாடிப் பரவி, உயிருடன் இருக்க நினைத்தாலும் ஒளி, அழகு, வளை, உள்ளம் இவை அழியும்படி நேர்ந்த இந்த நிலையில், குணம் பாடிப்பரவ என்னால் இயலுமோ? நீங்களே சொல்லுங்கள் என்று மேகங்களிடம் கூறினாள்.

இதனால் தன் நிலையை திருவேங்கடவனிடத்தில் சென்று சொல்லித் தனக்கு அருள் புரிந்து காக்கும்படிச் செய்யுங்கள் என்று மேகத்திடம் ஆண்டாள் முறையிடுகின்றாள்.

பாசுரம் - 4

"மின்னாகத் தெழுகின்ற மேகங்காள் வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு
என்னாகத் திளங்கொங்கை விரும்பித்தாம்
நாள்தோறும்
பொன்னாகம் புல்குதற்கு என்புரிவுடைமை
செப்புமினே"

கரிய திருமேனியை யுடைய எம்பெருமான் திருமார்பில் பொன் போன்ற ஒளியுடைய திருமகள் அகலகில்லேன் இறையுமென்று வாழ்கின்றாள். அதைப்போல கரிய மேனியையுடைய உங்களிடையே ஒளிமயமான மின்னல் மின்னுகின்றது. உங்களைக் கண்டவுடன் திருமகளுடன் வாழும் திருவேங்கடவன் திருவுருவம் என் கண்முன்னே தோன்றுகின்றது. மின்னலோடு கூடி எழுகின்ற மேகங்களே திருவாழ் மார்பனான திருவேங்கடவனிடம் சென்று எனக்காக ஒரு வார்த்தை சொல்லவேண்டும். என் மார்பகத் துள்ள இள முலைகளை திருவேங்கடவன் விரும்பி, அணைத்துக் கொண்டு இடைவிடாமல் கிடக்கவேண்டுமென்று நான் ஆசைப்படுகின்றேன். என் ஆவலை அவனிடம் சென்று சொல்லுங்கள் என்று ஆண்டாள் மேகங்களிடம் வேண்டுகின்றாள்.

பாசுரம் - 5

" வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்
வேங்கடத்துத்
தேன் கொண்ட மலர்சிதறத் திரண்டேறிப்
பொழிவீர்காள்

**ஊன் கொண்ட வள்ளுகிரால் இரணியனை**
**உடலிடந்தான்**
**தான் கொண்ட சரிவளைகள் தருமாகில்**
**சாற்றுமினே. "**

விண்ணில் எங்கும் பரந்து விண்பரப்பையே அபகரித்துக் கொண்டு, ஓங்கி கிளம்புகின்ற மேகங்களே தேன் நிறைந்த மலர்கள் சிதறிவிழும்படி, அவைகளுக்குக் கெடுதல்கள் உண்டாகும்படி மழை பொழிவதால் என்ன பயன். இப்படி தீங்குடன் கூடி மழையைப் பொழிவதே உங்களுக்கு விருப்பம் போலும். மழை வேண்டுமிடத்து மழை பொழிவது தானே சிறப்பு. மழையின்றி வாடுவார்க்கு மழையைப் பொழிந்து அவர்களை இன்பக் கடலில் ஆழ்த்த வேண்டாமா?

அதைப்போல திருவேங்கடவனின் அருள் மழையின்றி பிரிவுத் துயரால் வாடும் எனக்கு, அவனின் அருள் மழை என் மீது பொழியும்படிச் செய்வது உங்கள் கடமையாகும்.

உலக மக்களையும் நல்லோர்களையும் துன்புறுத்திய கொடிய அசுரர் கூட்டங்களை அழித்தும், பக்தப்பிரகலாதனனுக்குப் பல துன்பங்களையும் கொடுத்த இரண்யகசிபுவை அழித்தும் அருள்புரிந்த எம்பெருமான் இன்று திருமலையில் திருவேங்கடவனாக அவதரித்துள்ளான். அவன் மீது எனக்கு ஏற்பட்ட காதலால் உடல் மெலிய, என் கைவளைகள் கழன்று விழும்படிச் செய்தான். அவன் எனக்கு அருள் புரிந்தால் என் உடல் பழைய நிலைக்கு

வரும். எனது துர்பாக்கிய நிலையை அவனிடம் சொல்லி, எனக்கு அருள்புரியும்படிச் செய்யுங்கள், என்று மேகங்களை வேண்டினாள் ஆண்டாள்.

பாசுரம் - 6

**"சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்
மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப்
பொழிவீர்காள் !
உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்து
என்னை
நலங்கொண்ட நாரணற்கு என் நடலை நோய்
செப்புமினே"**

பொருங்கடல் நீரை முகர்ந்து கொண்டு மேலே கிளம்பி விளங்குகின்ற குளிர்ந்த மேகங்களே! உங்களுடைய வடிவழகும் குளிர்ச்சியுமெல்லாம் நன்றாக இருக்கிறது. அதில் ஒரு குற்றமும் இல்லை. ஆனால் தேவர்களுக்காகத் தான் குறுகிய பிரம்மச்சாரியாகச் சென்று, மாவலியிடம் மூன்றடி மண் யாசித்துப் பெற்று, ஓரடியால் மண்ணுலகையும், இரண்டா மடியால் விண்ணையும் அளந்து, மூன்றாவது அடியை மாவலியின் தலை மீது வைத்து அவனை பாதாள உலகம் அனுப்பியவர் திருமால். அவன் இன்று திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ளான். நான் திருவேங்கடவன் மீது பெருங்காதல் கொண்டு அவனருள் கிடைக்காமையால், கொசுக்களால் உண்ணப்பட்டு ஓட்டுக்குள் காலியாக இருக்கும் விளாம்பழத்தைப் போல், திருவேங்கடவன் என் உடம்போடே அணைந்து , என் உள்ளத்தை அபகரித்துக் கொண்டு சென்று விட்டதால் பெரும்

துன்பத்துக்கு ஆளாகியுள்ளேன். நீங்கள் அத்திருவேங்கடவன் பால் தூது சென்று என் நிலையை எடுத்துக் கூறி, எனக்கு அருள்புரியும் படிச் செய்யுங்கள்.

பாசுரம்-7

**"சங்கமா கடல்கடைந்தான் தண்முகில்காள்!**
**வேங்கடத்துச்**
**செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி**
**விண்ணப்பம்**
**கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து**
**ஒரு நாள்**
**தங்கு மேல் என்னாவி தங்குமென்று உரையீரே."**

சங்குகளோடு கூடிப் பெருமை வாய்ந்த கடலைக்கடைந்தருளியும், தனது பக்தர்களுக்காகத் தன்னைத் தாழ விட்டுக் கொண்டு அவர்களைக் காத்து அருளியும் வருகின்ற திருவேங்கடவன் எழுந்தருளியுள்ள, திருவேங்கட மலையில் வசிக்கின்ற மிக்க கருணையுள்ள திருவடிகளிலே அடியேனுடைய வேண்டுதலைச் சொல்ல வேண்டும். அவனது அருள் இல்லாமையில் என் கண்கலங்கியதால் ஏற்பட்ட கண்ணீர் எனது மார்பகத்தில் உள்ள குங்குமம் அழிந்து விடுகிறது. அவன் அருள் கிடைத்தால் இந்த வருத்த நிலை மாறும். என் ஆவி நிற்கும். அவர் என்னோடு கலவி செய்ய வருவாரென்று நம்பி என் மார்பகத்தில் குங்குமக் குழம்பு பூசி அலங்கரித்து வைத்து இருக்கிறேன். அக்குழம்பு சரியாக பயன்படும்படி என்னோடு கலவி செய்தால்தான் என் உயிர் தரிக்கும் என்று சொல்லுங்கள் என்று மேகங்களிடம் வேண்டுகின்றாள் ஆழ்வார்.

பாசுரம்-8

**"கார்காலத் தெழுகின்ற கார்முகில்காள் !**
**வேங்கடத்துப்**
**போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனார்**
**பேர்சொல்லி**
**நீர்காலத்து எருக்கினம் பழ விலைபோல் வீழ்**
**வேனை**
**வார்காலத்து ஒருநாள்தம் வாசகம் தந்தருளாரே."**

பிறர் துயரைக் கண்டு ஐயோ என்று எண்ணி இரக்கம் காட்டி உதவும் மேகங்களே ! கார் காலத்தில் தவறாமல் வந்து சேருகின்றேன் என்று சொல்லிச் சென்ற பெருமான் வராதிருந்தாலும், அவனுடைய வடிவுக்குப் போலியான நீங்களாவது இக்கார் காலத்தில் வந்து தோன்றினீர்களே என்று இன்பமடைகின்றேன். உங்களது உருவத்தில் அவனைக் காணுகின்றேன்

அவ் வெம்பெருமான் வரவில்லையானாலும், நாம் அவனது திருநாமங்களைப் பாடிப் பரவி ஒருவாறு உயிர் தரித்திருப்போம் என்று சக்ரவர்த்தித் திருமகனான இராமபிரானின் பெயர்களைச் சொல்ல ஆரம்பித்தேன். அதனால் உடனே மகிழ்ச்சியடைந்தேன்.

மழைக் காலத்தில் எருக்கஞ் செடியில் இலைகள் பழுத்து அற்று விழுவதைப் போல நானும் தளர்ந்து வீழும்படியான நிலையை அடைந்தேன். இந்நிலையை யான் அடைந்த போதும் அவ் வெம்பெருமான் எனக்கு அருள் புரிய நினைக்க வில்லை. என் வாழ்நாளெல்லாம் இப்படி துக்க மயமாகவே கழியப் போகின்றது. ஒரு நாளாகிலும் ஒரு வாய்ச் சொல்லாகிலும் சொல்லியனுப்பவும் மாட்டாரோ?

நீங்களாவது என் நிலையை எம்பெருமான் திருவேங்கடவனிடம் சொல்லி, எனக்கு அருள்புரியச் செய்யுங்கள் என்று மேகங்களை வேண்டுகின்றாள் ஆண்டாள்.

**பாசுரம் - 9**

**"மதயானை போலெழுந்த மாமுகில்காள் !**
**வேங்கடத்தைப்**
**பதியாக வாழ்வீர்காள் ! பாம்பணையான் வார்த்தை**
**என்னே !**
**கதியென்றும் தானாவான் கருதாது ஓர் பெண்**
**கொடியை**
**வதை செய்தான் என்னும் சொல் வையகத்தார்**
**மதியாரே"**

திருவேங்கட மலையில் வாழ்ந்து கொண்டு, அவனைத் தினம் கண்டு வணங்கி வழிபட்டு மகிழ்ந்து வரும், மதயானைபோல் செருக்குடன் திரிந்து கொண்டிருக்கும்மேகங்களே! திருவனந்தாழ்வானிடத்து அனைத்து தொண்டுகளையும் ஏற்றுக் கொள்வது போல என்னிடத்தும் ஏற்றுக் கொள்வான் என்றிருந்தேன். பாம்பின் படுக்கையில்இருப்பதால், பாம்பின் தன்மையே தானும் பெற்றான் போலும். பாம்பிற்கு இரு நாக்குகள் இருப்பதைப் போல இவனும் இரண்டு நாக்குகளைப் பெற்றான் போலும். அனைத்து மக்கட்கும் அனைத்து வகைகளிலும் அருள்புரிபவன் என்று புகழ் பெற்றிருக்கும் எம்பெருமான், பெண்ணாகிய எனக்கு அருள்புரியாமல் என்னைக் கொலை செய்தான் என்றால் நம்புவார்களோ ? என்று மேகங்களிடம் கூறிக் கதறுகின்றாள் ஆண்டாள்.

பாசுரம்-10

**"நாகத்தினணை யானை நன்னுதலாள் நயந்து உரைசெய்**
**மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்**
**போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை தமிழ்**
**ஆகத்து வைத்துரைப்பார் அவர் அடியராகுவரே"**

தான் விரும்பியபடி யெல்லாம் திருமாலின் அனுபவத்தைப் பெற்று மகிழ்ந்தவரான பெரியாழ்வாருக்குத் திருமகளாரான ஸ்ரீ ஆண்டாள், பாம்பணையில் பள்ளி கொண்டு யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கும் பரவாசுதேவனே திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ள, அவன் மேல் ஆசைப்பட்டு அருளிச் செய்த, மேகம் விடு தூதாகிய இந்த நாச்சியார் திருமொழியைக் கற்று, மனத்துள் வைத்திருப்பவர், தினம் தொண்டு செய்யும் பேற்றினைப் பெற்று, என்றும் இன்பமுடன் வாழ்வார்.

பத்தாம்பத்துபாசுரம்- 10.5

**"பாடும் குயில்காள் ! ஈது என்ன பாடல் ! நல்வேங்கட**
**நாடர் நமக்கு ஒரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்**
**ஆடும் கருளக் கொடியுடையார் வந்து அருள் செய்து**
**கூடுவராயிடில் கூவி நும் பாட்டுக்கள் கேட்டுமே"**

ஆண்டாள், எம்பெருமான் பிரிவாற்றாமையைத் தணித்துக் கொள்ள , பூந்தோட்டத்திற்குச் சென்றாள். அங்கு முல்லைப் பூவானது பூத்துக் குலுங்கி மணம் பரப்பியது. இதைக் கண்ட ஆண்டாள் இன்னும் அதிக துன்பமடைந்தாள். அங்கிருந்து நீங்கி முகத்தை வேறு பக்கம் திருப்பிப் பார்த்தாள்.

எங்கு பார்த்தாலும் மலர்கள் பூத்துக் குலுங்குவதையே கண்டு, மிக்க துன்பம் அடைந்தாள். ஆகவே கண்களை மூடிக்கொண்டாள். கண்ணை மூடினபோதும் ஆண்டாளின் துன்பம் நீங்கவில்லை. காதுகளை மூடமுடியாமையால், குயில்களின் பாட்டுக்கள் உடனே காதுகளில் கேட்டன. அவற்றைக் கேட்டுத் தரிக்க முடியாமல் அக்குயில்களை நோக்கிக் கூறுகின்றாள்

ஓ குயில்கேளே நீங்கள் ஏன் இப்படிப் பாடி என் துயரத்தை அதிகப் படுத்துகின்றீர்கள். போதும், போதும், உங்கள் பாட்டின் அழகு, உங்களுடைய பாட்டைக் கேட்கும் அளவிலா ! நான் இருக்கின்றேன், இல்லையே. ஐயோ என்ன பாட்டு இது! பாவிகாள் பாடினது போதும், இப்போதைக்கு உடனே நிறுத்துங்கள், கோபித்துக் கொள்ளாதீர்கள்.

திருவேங்கடவன் அருள் சுரந்து, இங்கே யெழுந்தருளி, என்னை அணைத்துக் கொண்டு எனக்கு நல்வாழ்வு அளிக்கும் வாய்ப்பு கிடைக்குமாயின், அப்போது நீங்கள் இங்கு வந்து உங்கள் ஆசை தீரப் பாடுங்கள், என்றாள் ஆண்டாள்.

குயில்கள் ஆண்டாளை நோக்கி, அம்மையே திருவேங்கடவன் வந்து உமக்கு வாழ்வு கொடுக்கும் நேரம் எங்களுக்கு எப்படித் தெரியும் என்றன. குயில்களே திருவேங்கடவன் வருகின்றபோது, கருடாழ்வானாகிய பெரிய திருவடி தனது சிறகை விரித்துக் கூத்தாடிக் கொண்டு வருவார். அந்த அடையாளத்தைக் கண்டு நீங்கள் தெரிந்து

கொள்ளலாம். ஒரு கால் நீங்கள் தெரிந்து கொள்ளாவிட்டாலும், நானே உங்களை வரவழைத்து, உங்கள் பாட்டைக் கேட்பேன். நீங்கள் ஐயப்படவேண்டாம், என்று கூறினாள்.

பாசுரம் - 8

**"மழையே மழையே மண்புறம்பூசி உள்ளாய்நின்று**
**மெழுகூற்றினாற் போல்ஊற்று நல்வேங்கடத்**
**துள்நின்று**
**அழகப்பிரானார் தம்மை என் னெஞ்சத் தகப்படத்**
**தழுவி நின்றுஎன்னைத் ததைத்துக் கொண்டு**
**ஊற்றவும் வல்லையே?. "**

ஓ மேகங்களே மழையைப் பொழிகின்ற மேகங்களே! சிலைவடிக்கும் சிற்பிகள் மேலே மண்ணை இணைத்து உள்ளிருக்கும் மெழுகைத் தள்ளிவிடுவது போல, அப்பெருமானும், உடம்பின் மேலே அணைந்து உள்ளிருக்கும் ஆத்மா உருகிக் கழிந்து போகும்படிச் செய்கின்றான். அப்படிச் செய்பவனான திருவேங்கடவன் என் உள்ளத்தில் குடியிருக்கும்படியும் நான் அவனை அணைத்துக் கொள்ளும்படியும் செய்ய, என்னை அவனோடு சேர்த்து வைத்த பிறகு மழையைப் பொழியுங்கள் என்று ஆண்டாள் மேகங்களை வேண்டினாள்.

ஆண்டாள் எம்பெருமானான திருவேங்கடவனை அடைய தனக்குத் துணை புரியுமாறு, காமதேவனையும், கூடல் தெய்வத்தையும், குயிலினங்களையும், மழையையும் வேண்டுகின்றாள். இந்த நாச்சியார் திருமொழி ஓர் ஒப்பற்ற காதல்

இலக்கியமாகும். தமிழ் அன்னைக்குச் சூட்டிய வாடா மாலையாகும்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்



# 10. திருப்பாணாழ்வாரும



திருவேங்கடவனும்

## திருப்பாணாழ்வாரும் திருவேங்கடவனும்

### அவதாரம்

திருப்பாணாழ்வார் கலியுகத்தில் துர்மதி ஆண்டு கார்த்திகை மாதம் ஐந்தாம் நாள் புதன் கிழமை, ரோகிணியில் உரையூரில் பாணர் குலத்திலே தோன்றினார்.

**"கார்த்திகையில் ரோகிணி நாள் காண்மினின்று**
**காசினியீர்**
**வாய்த்த புகழ்ப் பாணர் வந்துதிப்பால்-ஆத்தியர்கள்**
**அன்புடனேதான் அமலனாதி பிரான் கற்றதற்பின்**
**நன்குடனே கொண்டாடும் நாள்"** (உ.ர.மா.10)

### அருளிய அருளிச் செயல்

அமலனாதிபிரான் எனும் அருளிச் செயலில் பத்து பாசுரங்கள் பாடியுள்ளார். அவற்றுள் இரண்டு பாசுரங்களில் திருவேங்கடவனைப் பற்றிப் பாடி மகிழ்ந்தவர்.

### பாசுரம்-1

**"அமலன் ஆதிபிரான் அடியார்க்கு என்னை**
**யாட்படுத்த**
**விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழிவ்**
**வேங்கடவன்**
**நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதிள்**
**அரங்கத்தம்மான்-திருக்**
**கமல பாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே"**

1. இப்பாசுரத்தில் பெரிய பெருமாள் திருவடிகளின் அழகு ஆட்கொண்டது என்கின்றார்.

2. விண்ணில் மேகமாயிருந்து நீராய் மாறி மழையாய்ப் பொழிந்து, காவிரி ஆறாய்ப் பெருக்கெடுத்து, பரவிப் பாய்ந்து, நீர்-நில வளங்களைப் பெருகச் செய்து, நல்ல விளைச்சலைத் தந்து நாட்டு மக்களைக் காப்பதைப் போல பரமபதத்திலிருந்து, ஆதியஞ்சோதி உருவை அங்கு வைத்து, திருமலையிலே அர்ச்சை நிலையிலே நின்றருளி, தெற்கு நோக்கி வந்து காவிரி - கொள்ளிட ஆற்றிடேயே திருவரங்கத்திலே குடதிசை முடியையும் குணதிசை பாதத்தையும் வட திசை பின்பும் வைத்து தென்திசை இலங்கையை நோக்கி திருவரங்கனாகப் பள்ளி கொண்டிருக்கின்ற பெரிய பெருமாளை அனுபவிக்கின்றார். ஆழ்வார் திருவேங்கடவனான திருமாலின் குணங்களைக் கீழ்க்கண்டபடி விளக்குகின்றார் .

விளக்கவுரை

தான் மட்டும் பரிசுத்தனாக இல்லாமல் தன்னோடு தொடர்புடைய, அனைவரையும் பரிசுத்தனாக்கும் வல்லமை கொண்ட திருவடியினையுடையவன். எல்லாராலும் விரும்பத்தக்கவன்.

எல்லா உலகங்களையும், உலகப்பொருள்களையும், உலக உயிர்களையும் படைத்து அவைகளின் அனைத்து காரியங்களுக்கும் மூல காரணனாகவும் உள்ளவன். அனைத்து குணக்கடலாகவும் கருணா மூர்த்தியாகவும் விளங்குகின்ற நிலையினைத் தனக்கு அறிவிக்கின்றான். பலவழிகளிலும் எனக்கு உபகாரஞ் செய்கின்றான்.

எனக்கென்றும் பிறர்க்கென்றும் இருந்து திரிந்த என்னை அவனுக்கும், அவன் அடியார்களுக்கும் அடிமையாக்கி ஆளாக்கினான். சிறந்த புகழையுடையவன். பரமபதத்திலுள்ள நித்ய சூரிகளுக்குத் தலைவனாகயிருப்பவன். இருள் தரும் மா ஞாலமாகிய இம்மண்ணுலக மக்களுக்குக் காட்சி தந்து அருள்புரிந்து இவர்களையும் பரமபதத்தில் சேர்ப்பதற்காகவே, மணம் மிக்க சோலைகளையுடைய திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ளான். இத்திருவேங்கடம், அர்ச்சாவதாரத்திற்குப் பொற்கால் பொலியவிட்ட மலை. ஆற்றிலே அழுந்துவார் ஒருகாலைக் கரையிலே வைத்து கரையேற முயலுவதைப் போல இல்லறத் துன்பக்கடலிலே மூழ்க விருப்பவர் திருவேங்கடம் சென்று, பிறவிக் கடலை நீந்தி, பரமபதம் செல்ல வழிவகுக்கும் மலை திருவேங்கட மலை.

அடியேன் விரும்பாதிருந்த போதிலும் அடியேனிடமிருந்து எந்த பலனையும் நோக்காது தான் மனமுவந்து வந்து உதவுபவனாக உள்ளான். அடியார்க்கு ஆட்படுத்துபவனாகவும், அடியார்களுடைய குற்றத்தைக் காணும் களங்கமில்லாதவனாகவும் விளங்குகின்றான். அடியார் குற்றத்தைப் பொருட்படுத்தாது அருள்புரிபவன்.

மக்கட்கு நன்மை புரிவதால் நீதி தவறாதவன். அவனை அங்கு கலக்குவாரும் இல்லை. அங்கு கலங்குவாருமில்லை. அத்தகைய பரமபதத்திலே இருப்பவன். இங்கு முற்கலனுக்கு எமதண்டனை கொடுக்கவிருந்த யமனின் தவறைச் சுட்டிக் காட்டி,

முற்கலன் "சர்வம் கிருஷ்ணார்பணம்" என்றமையால் அவன் பாவங்களைப் போக்கி, யமதண்டனையாகிய அநீதியைத் தடுத்து பரமபதப் பேறு கிடைக்க நீதி வழங்கிய செயல் காணத் தக்கதாகும்.

திருமலை உயர்ந்த மலையாய் இருப்பதால் அதை விட்டு, அளப்பரிய ஆராவமுதனாக, உயர்ந்த மதில்களையுடைய திரவரங்கத் திருக்கோயிலில், வெள்ளத்தைக் கள்ள மடையாலே பள்ளத்தே மாற்றிவிடும் பள்ளமடை போலே, சமநிலையில் இரு ஆறுகளுக்கிடையே வந்து படுத்துக் கொண்டு படுகாடு கிடக்கின்றான்.

பூலோக வைகுண்டமாகவும், பெரிய கோயிலாகவும் பொன்னரங்கமாகவும், திருவரங்கமாகவும், புனலரங்கமாகவும் விளங்கும் திருவரங்கத்தில் கிடந்த வண்ணம் எழுந்தருளியுள்ள திருவரங்கனின் தாமரை மலர்போன்ற அழகும் நறுமணமும் மென்மையும், இரக்கமும் சிறப்பும் வாய்ந்த திருவடிகளில் ஈடுபடுகின்றார் ஆழ்வார்.

பெருக்காட்டு வெள்ளத்திலே சிக்கியவர் தெப்பம் கொண்டு கரையேறிப் பிழைப்பதைப் போல சம்சாரமாகிய காட்டாற்று வெள்ளத்திலே சிக்கித் தவிக்கும் மக்கள் திருவரங்கன் திருவடியாகிய தெப்பத்தைச் சரண் பற்றி சம்சாரத்தினின்றும் கரையேறி பரமபதத்தை அடைவர் என்கின்றார் ஆழ்வார்.

அத்துணை சிறப்பு வாய்ந்தது திருவரங்கனின் திருவடிகள். இதுவரையில் பல தீய வழிகளில் செலுத்திய அடியேன் கண் பார்வையைத் திருத்தி, நல்வழியில் செலுத்தி, அவனது திருவடிகள் என்றும் கண்ணினின்று அகலாதபடிச் செய்தான். இனியான் அகற்றினும் அடியேன் கண்கள் அகற்றாது என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : பெரிய பெருமாளாகிய திருவரங்க நாதனை அனுபவிக்க விரும்பிய ஆழ்வார் திருவேங்கடமுடையான் பக்கம் போவானேன் ? என்ற வினா எழலாம்.

ஆற்றிலே அமுந்துகிறவன் ஒருகாலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாம் என்று நினைத்து காலை ஊன்றி கரையேற நினைப்பதைப் போல ஆழ்வாரும் பெரிய பெருமாள் அழகிலே அமுந்துகிறவர் ஆகையினாலே திருமலையில் கால் தாழ்ந்தார். மற்றும் பரம பதத்திலிருந்து வந்து ஸ்ரீ வட மதுரையிலே தங்கித் திருவாய்ப் பாடிக்கு வந்ததைப் போலவும் வைகுண்டத்திலிருந்து வந்து திருமலையில் தங்கி திருவரங்கம் வந்து எழுந்தருளினார்.

பாசுரம்-3

"மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள்
சந்தி செய்ய நின்றான் அரங்கத்தரவின் அணையான்
அந்திபோல் நிறத்தாடையும் அதன்மேல் அயனைப்
படைத்த தோரெழில்
உந்திமேலது அன்றோ அடியேன் உள்ளத்தின்
இன்னுயிரே"

திருவேங்கடமலையிலுள்ள பலா மரங்களின் வேர் முதல் கிளை வரை பலாப்பழங்கள் பழுத்துக் கிடந்தன. திருமலையில் வாழும் பெண்குரங்கானது முதலில் வேரில் உள்ள பலாப்பழத்தைத் தின்னத் தொடங்கியது. பின்னர் மேலே கிளைகளிலுள்ள பழங்களைத் தின்ன ஆசைப்பட்டு ஒவ்வொரு கிளையாக குதித்துத் தாவும் மந்திகள் வாழும் திருவேங்கட மலை.

அத்தகைய சிறப்பு வாய்ந்த திருவேங்கடத்தில் அர்ச்சை நிலையில் நின்ற திருக்கோலத்தில் எளியனாய் எழுந்தருயுள்ளான் ஸ்ரீமந் நாராயணன். ஆனால் பரமபதத்திலே நித்திய சூரிகள் மட்டுமே சேவிக்கும் படியும் மண்ணுள்ளோர் சேவிக்க முடியாத பரத்து வநிலையில் எழுந்தருளியுள்ளான். எனவே விண்ணவர்களாகிய நித்திய சூரிகள், திருவேங்கடத்தில் அர்ச்சை நிலையில் எளியனாய் நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவன் திருவடித் தாமரைகளில் மலர்களை இட்டு வணங்க விரும்பி திருவேங்கடம் வந்தடைந்தனர்.

திருவேங்கடத்தில் நின்ற களைப்பு தீரவும் இராமாவதாரத்தில் காட்டிலே நடந்து சென்று முனிவர்களைக் காக்க, அரக்கர்களை அழித்து, சீதையைத் தேடி காடு மேடெல்லாம் திரிந்த களைப்பு தீரவும்; கிருஷ்ணாவதாரத்திலே கன்றுகளையும் பசுக்களையும் மேய்க்க காடுமேடுகளெல்லாம் திரிந்த களைப்பு தீரவும்; திருமால், மேகங்கள் சூழ்ந்த உயர்ந்த திருவேங்கடமலையை விட்டு குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த தாழ்ந்த பகுதியான காவிரிக்கரையில் திருவரங்கத்தில் அனந்தாழ்வானைப் படுக்கையாகக்

கொண்டு, கிடந்த கோலத்தில் திருவரங்கனாக எழுந்தருளியுள்ளான்.

அத்தகைய திருவரங்கனின் திருமேனி அழகிலே ஆழ்வார் ஈடுபடுகின்றார். திருக்கமல பாதங்களைக் கண்டு வணங்கி மகிழ்ந்த ஆழ்வார் சற்றே மேலே தன் பார்வையைச் செலுத்தினார். திருவரங்கன் அணிந்திருந்த கதிரவன் சாயும் அந்தி நேரத்தில் செம்மையும் மஞ்சளும் கலந்த வண்ணமாக பளபளக்கும் பட்டாடையின் மேல் பார்வை பட்டது. அதற்கும் மேலே, நான்முகனைத் தோற்றுவித்த சுழிகளையுடைய அழகிய நாபிக் கமலத்தின் மேல் பார்வை சென்றது. இடையில் அணிந்திருந்த பட்டாடையும், நாபிக்கமலமும் ஆழ்வாரின் மனத்தை ஈர்த்து, அவரது உயிரையும் நிலையாகச் செய்தன என்கின்றார் ஆழ்வார்.

இதனால், அழகிய மணவாளனாகிய திருவரங்கனின் திருக்கமலபாதம், இடைப்பட்டாடை, அழகிய உந்தி, திருவயிறு, திருமார்பு, திருக்கண்டம், சிவந்த பவளம் போன்ற வாய், திருமுக மண்டலம், திருமேனி ஆகியவற்றை மிகுந்த ஈடுபாட்டுடன் மனம் ஒன்றி சேவித்துத் திருவரங்கன் திருவருள் பெற வேண்டுமென்பதை உணர்த்துகின்றார்.

**சிறப்புப்பொருள்கள்**

1. வேங்கடம் என்னாது வட வேங்கடம் என்று பாடுவானேன். பண்டைக் காலத்திலும் ஆழ்வார் காலத்திலும் தமிழகத்தின் வடக்கெல்லையாக வேங்கடம் விளங்கியதால் வடவேங்கடம் என்றார்.

2. திருவேங்கட மலையில் வாழ்ந்த பெண்குரங்கு வேரில் பழுத்த பலாப்பழத்தை விட்டு, கிளைகளில் பழுத்துக்கிடந்த பலாப்பழங்களைத் தின்ன கிளைகள் தோறும் தாவியது. (அதைப்போல) பரமபதத்திலுள்ள வானவர்களாகிய நித்யசூரிகள் மட்டுமே வணங்கி இன்பம் அடையும் பரத்துவ நிலையை விரும்பாமல், அதைவிடத்து இருள் தருமா ஞாலத்தில் அறியாமையாகிய இருளிலே வாழ்ந்து, இல்லறத்தில் ஆழ்ந்து கிடக்கும் சம்சாரிகளைக் கடைத் தேற்ற எளிய அர்ச்சை நிலையில் திருவேங்கடத்தில் எழுந்தருளி அருள்புரிந்து வருகின்றான். இது உயர்ந்த சிறந்த நிலையான பரமபத பரத்துவ நிலையில் இருந்து தன்னைத் தாழ்த்திக் கொண்டு மண்ணுலகில் திருப்பதிகளில் எளியனாய் எழுந்தருளிய சிறப்பைக் காட்டுகின்றது.

3. இவ்வுலக மக்களைக் கடைத் தேற்றவே மண்ணுலகில் திருப்பதிகளில் எழுந்தருளி காட்சி தந்து அருள்புரிகின்றான். ஆனால் வானவர்கள் தங்கள் பரமபதத்தினின்று இங்கு வந்து மண்ணுலக மக்கட்குப் போட்டியாகவும் இடையூறாகவும் இருக்கலாமோ ? இருக்கக் கூடாது. ஆனாலும் இந்த எளிமையை அவர்கள் அங்கு காண இயலாது.

இச்செயல் கண்தெரியாத குருடர்களுக் கென்று ஏற்படுத்திய அறச் சாலையில் கண்தெரியும் மற்றவர்களும் சென்று அவர்கட்கு உரிய உணவைப் பங்கிட்டு உண்ணுவதைப் போலாகும் என்கின்றார். என்னே ! ஆழ்வாரின் இலக்கிய இலக்கண வளம்.

நீரானது மேகத்திலிருந்து தோன்றி, மலையுச்சிகளில் விழுந்து, அருவியாகி மலையிலிருந்து குதித்து, காட்டுப் பகுதியை அடைந்து காட்டாறாகி காடுகளிலுள்ள மரங்களின் வேர்களிலெல்லாம் புகுந்து, சமவெளியை அடைகின்ற போது நீர்ச்சுழியாகி பின்னர் பரந்து பாய்ந்து, கடலாகிய ஆழியைச் சென்றடையும்.

(அதைப்போல)

திருவரங்கனின் திருமேனி அழகான பெரிய ஆறானது, மலை உச்சியாகிய திருமுடியினின்றும் இரங்கி, அகன்ற திருமார்பாகிய தாழ்வரையிலே குதித்து, பரந்து பாய்ந்து கீழ்நோக்கி வந்து, சிற்றிடையிலே உள்ள சுழிபோன்ற நாபியிலே சுழன்று, திருவடியாகிய கடலிலே வந்து தங்கியது. எனவே திருவடியை முன்னர் சேவித்து பின்னரே மற்றவற்றைச் சேவிக்கவேண்டும் என்கின்றார் ஆழ்வார்.

**" காட்டவே கண்டபாதம் கமலநல்லாடை உந்தி**
**தேட்டரு முதரபந்தம் திருமார்வு கண்டம் செவ்வாய்**
**வாட்டமில் கண்கள் மேனி"**

(அமல. பாசு. 1)

இப்பாசுரத்தால் பெரிய பெருமாள் பக்கலில் திருவேங்கடமுடையான் தன்மையும் உண்டென்றும், பெரிய பெருமாளைச் சேவித்தால் திருவேங்கடவனைச் சேவித்த இன்பம் அடையலாம் என்றும் கூறுகின்றார் ஆழ்வார்.

இதற்கு ஒரு எடுத்துக் காட்டையும் காண்பது சிறந்ததாகும்.

திருவரங்கத்திலே திருவரங்கனைத் தினமும் வணங்கி வழிபட்டு வந்த பிள்ளை அழகிய மணவாள அரையர் ஒரு நாள் திருவரங்கன் திருவடிகளிலே புகுந்து, அடியேன், திருமலையில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவன் திருவடிகளைத்தொழுது வரவேண்டுமென்று விரும்புகிறேன், அனுமதி தாருங்கள் என்று வேண்டினாராம்.

அதற்குத் திருவரங்கன் அரையரை நோக்கி, வாரீர் அரையரே திருப்பாணர் அருளிய அமலனாதிபிரான் பாசுரங்களை ஒரு முறை இசையோடு பாடிப் பரவும் என்று கூறினாராம். பிள்ளை அழகிய மணவாள அரையரும் அமலனாதிபிரான் பாசுரங்களை ஒருமுறை இசையுடன் பாடினாராம். கேட்டுமகிழ்ந்த திருவரங்கன், இனி செல்ல விரும்பினால் சென்று வரலாம், இன்றேல் இங்கேயே இரும் என்றாராம். அரையரும் திருவேங்கடமுடையானை திருவரங்கனிடத்தில் கண்டு களித்து போக்கொழிந்தாராம்.

இப்பாட்டின் உள்ளுறைப் பொருளால் பெரிய பெருமானாகிய திருவரங்கன் பக்கலில் திருவேங்கடமுடையானின் தன்மை உண்டென்பது அறியலாகிறது.

**"பாட்டினால் கண்டு வாழும் பாணர்தான்**
**பரவினோமே !"**

**திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்.**

## 11. திருமங்கையாழ்வாரும்



திருவேங்கடவனும்

## திருமங்கையாழ்வாரும் - திருவேங்கடவனும்

**அவதாரம்**

நீலன் என்ற இயற்பெயர் கொண்ட திருமங்கையாழ்வார் கலியுகம் நளவருடம் கார்த்திகைத் திங்கள், வியாழக்கிழமை கார்த்திகை, முழு நிலவு நன்னாளில், சார்ங்கமென்னும் வில்லின் அம்சமாக, திருக்குறையலூரிலே கள்ளர் மரபில் சோழர் சேனைத் தலைவருக்குத் திருகுமாரராய் அவதரித்தார்.

**"கார்த்திகையில் கார்த்திகைநாள் வந்துதித்தேன் வாழியே !"**

இவர் பிறக்கும்போதே நீலநிறத்துடன் பிறந்ததால் "**நீலன்**" என்ற பெயரையும், பல போர்களில் எதிரிகளுக்கு எமனாக விளங்கி சிறந்த போர்வீரராக விளங்கியதால்"**பரகாலன்**" என்ற பெயரையும், திருமங்கை என்னும் சிறு நாட்டுக்கு அரசனாக விளங்கியதால் "**திருமங்கை மன்னன்**" என்ற பெயரையும், திருமாலை அடைய தன்னை பெண்ணாகப் பாவித்துக் கொண்டு திருமாலைத் தலைவனாக அடைய முயன்றதால் "**பரகால நாயகி** " என்ற பெயரையும், தமிழில் நான்கு விதமான சிறந்த கவிகளைப்பாடியதால் "**நாலுகவிப் பெருமாள்**" என்ற பெயரையும், மிகுந்த உடல்வலிமை பெற்றிருந்ததால் "**கலியன்**" என்ற பெயரையும் பெற்றார். மற்றும் **ஆலி நாடன், அருள்மாரி, அரட்டமுக்கி, அடையார் சீயம்,**

கொங்கு மலர்க்குழலியர் வேள், கொற்றவேல் பரகாலன் போன்ற பெயர்களையும் பெற்றார்.

இவர் ஞானசம்பந்தரை கவிபாடி வென்றதால், சம்பந்தர் தமது வேலினைப் பரிசாக அளித்தார்.

குமுதவல்லியை மணக்க விரும்பி, அவளது கட்டளையின்படி பஞ்ச சமஸ்காரம் ஏற்றுக்கொண்டு, திருமாலடியார்களுக்கு அமுது படைத்து குமுதவல்லியை மணந்தார்.

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம், பெரிய திருவந்தாதி, திருவாசிரியம், திருவாய்மொழி ஆகிய நான்கு அருளிச் செயல்களுக்கும் பூண் கட்டினாற் போல பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய ஆறு பிரபந்தங்களை அருளினார்.

பெரிய திருமெழியிலே பரமபதத்திற்குச் செல்லக் காலம் நெருங்கியது என்று எண்ணி, புதுப்பெண் புக்ககத்திற்குப் (மாமியார் வீடு) போகும்போது, பிறந்த ஊரில் உள்ள உறவு முறையாரிடம் சொல்லிக்கொண்டு செல்வது போல, வடக்கே பத்ரிகாசிரமம் முதலான திருப்பதிகட்குச் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் பெருமாள்களையெல்லாம் கண்டு சேவித்து அவர்களைப் பாடிப் பரவினார்.

திருக்குறுந்தாண்டகத்திலே, பசி மிகுதியாகும் வரையில் சோறிடாமல் தாமதம் செய்யும் தாயைப்போல, தன்னை அநுபவிப்பதற்கு உறுப்பான பெருவிடாய் பிறப்பதற்காக எம்பெருமான் முகம் காட்டாது நிற்க, அவனை விட்டுக் கணமும் பிரிந்திருக்க

முடியாமல் மிக்க தாகம் எடுத்தவர்கள் மடுவிலே உள்ள நீரை தாகம் தீரும் வரைப் பருகி, நீரை வாரி மேலே இறைத்துக்கொள்வது போல, எம்பெருமானை வாயினால் பாடியும் தலையாலே வணங்கியும், உள்ளத்தில் நினைத்தும் உயிர் தரிக்கப் பார்த்தார்.

எம்பெருமான் பக்தித்தாகத்தை மிகுதியாகப் பிறப்பித்தார். எனவே திருவெழு கூற்றிருக்கையிலே ஆராவமுதனிடம் பக்தியுடனும் ஆர்வத்துடனும் சரணம் புகுந்தார்.

சரணம் புகுந்தும் எமபெருமானைப் பொறாமையாலே, அவன் முகங்காட்டுவதற்கு, மடலெடுக்கத்தொடங்கினார். சிறிய மடலிலே, அவதாரங்களில் உண்டான நீர்மையை அழிக்கின்றேன் என்று கூறி பயமுறுத்தி அருள்பெற எண்ணினார். அப்போதும் அருள் புரியாததால், நீர்மைக்கு எல்லை நிலமான கோயில்களில் நின்று, நீர்மையை அழிப்பேன் என்று பாடினார் பெரிய திருமடலில்.

இனி முகங்காட்டவில்லை யென்றால் அடியார்கள் எம்பெருமான் உள்ளார் என்பதில் நம்பிக்கை இழப்பர் என்று எண்ணி முகங்காட்டினார். எம் பெருமானைப் பெற்றதை திருநெடுந்தாண்டககத்திலே பாடினார்.

திருவரங்கப் பெருநகரில் மதிள்களைக் கட்டினார். பல திருவிழாக்களை நடத்தினார். தமது இறுதிக் காலத்தில் திருக்குறுங்குடி நம்பியெம்பெருமானை வணங்கி வழிபட்டு பரமபதம் அடைந்தார்.

ஆழ்வார் திருவேங்கடவனை 62 பாசுரங்களில் பாடிப் பரவினார்.

| | | |
|---|---|---|
| பெரிய திருவாய்மொழி | = | 55 பாசுரங்கள் |
| திருக்குறுந்தாண்டகம் | = | 1 பாசுரம் |
| திருநெடுந்தாண்டகம் | = | 3 பாசுரங்கள் |
| சிறிய திருமடல் | = | 1 பாசுரம் |
| பெரிய திருமடல் | = | 2 பாசுரங்கள் |
| | | 62 பாசுரங்கள் |

**பெரிய திருமொழி**

**ஒன்றாம் பத்து - எட்டாம் திருமொழி**

அவதாரிகை

திருமங்கையாழ்வார் சிங்கவேழ் குன்றத்தின் நிலவெம்மையை அனுபவித்து உருகிப்போனார். அங்கு எழுந்தருளியுள்ள நரசிம்மப் பெருமானைப் பாடிப் பரவசமானார். அதைக் கண்டு எம்பெருமான், திருமங்கையாழ்வாரே ! தெழிகுரலருவித் திருவேங்கடம் என்று நெஞ்சு குளிரப்பேசும்படியான திருவேங்கட மாமலையிலே அனைவர்க்கும் எளிதாக நாம் காட்சி கொடுத்து வருகின்றோம் நீவீர் அங்கே வந்து நம்மை வணங்கி ஆனந்த மடைவீர். என்று அருளிச்செய்தார்.

அதற்கிசைந்த ஆழ்வார் திருமலைக்கு எழுந்தருளி, திருவேங்கடத்தைக் கண்டு களித்தார். திருவேங்கடவனைப் பாடிப் பரவினார்.

பாசுரம்-1.8.1

"கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் ஒசிந்த கோவலன் எம்பிரான்
சங்கு தங்கு தடங்கடல்துயில் கொண்ட தாமரைக் கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய்பிளந்த புராணர் தம்மிடம் பொங்கு நீர்ச்
செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம் அடை நெஞ்சமே"

நறுமணம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த குருந்த மரத்தை முறித்து அழித்த கோபால கிருஷ்ணனாகவும் நமக்குத் தலைவனாகவும் சங்குகள் தங்கி இருக்கின்ற க்ஷீராப்தியாகிய திருப்பாற்கடலிலே அறிதுயில் கொண்டு திருக்கண் வளருகின்ற தாமரைக் கண்ணனாகவும் கர்வத்தினால் கொதித்து எழுந்து வந்த பகாசூரன் வாயைக் கிழித்து அழித்தவனாகவும் இருக்கின்ற ஸ்ரீ மந் நாராயணன் பரம கருணையோடு எழுந்தருளியிருக்கும், நீர்வளம் மிகுந்துள்ளதால் சிவந்த மீன்களோடு கூடியிருக்கின்ற சுனைகளை உடைய தாயுமுள்ள திருவேங்கடமலையை விரைவில் அடைவாயாக நெஞ்சமே.

திருவாய் பாடியில் கண்ணனாக அவதரித்தவனும், திருப்பாற்கடலில் பள்ளி கொண்டு அறிதுயில் கொள்பவனும், திருமலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியிருப்பவனும் ஸ்ரீ மந் நாராயணனே என்றார் ஆழ்வார். இப்பாசுரத்ததில் எம்பெருமான் ஐந்து நிலைகளில் வியூக, விபவ நிலைகளைப் பற்றிப் பாடியுள்ளார்.

பாசுரம்-1.8.2

"பள்ளியாவது பாற்கடல் அரங்கம் இரங்க
வன்பேய்முலை
பிள்ளையாய் உயிருண்ட எந்தை பிரானவன்
பெருகுமிடம்
வெள்ளியான் கரியான் மணிநிறவண்ண
னென்றெண்ணி நாள்தொறும்
தெள்ளியார் வணங்கும் மலைத் திருவேங்கடம்
அடை நெஞ்சமே !"

கம்சன், பூதகி என்ற பெண் பேயை, கண்ணனைக் கொல்ல அனுப்பினான். பூதகி ஒரு அழகிய தாயாக உருவ மெடுத்து நந்தகோபன் திருமாளிகை அடைந்து, கண்ணனுக்குப் பால் கொடுக்க விரும்புதாகக் கூறி, குழந்தையாகிய கண்ணனைப் பெற்று விடப்பால் கொடுத்தாள்.

பூதகி கொடுத்த விடப் பாலை உண்பதைப் போல் அவள் உயிரையும் குடித்த கண்ணனது குழந்தைப் பருவ விளையாட்டை அனுபவித்தது ஆயர்பாடியில். உலகைக் காப்பதற்காக அறிதுயில் கொள்வது திருப்பாற்கடலிலும், திருவரங்கத்திலும். கலியுகத்தில் கண் கண்ட தெய்வமாய் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி, மக்கள் அனைவர்க்கும் காட்சி கொடுத்து காத்து வருவது திருவேங்கடத்தில். இத்திருவேங்கடவனான ஸ்ரீ மந் நாராயணன் கிருத யுகத்தில் வெண்மை நிறமுடையவனாகவும், துவாபர யுகத்தில் மணிநிற வண்ணனாகவும், கலியுகத்தில் கார்மேக வண்ணனாகவும் எழுந்தருளியிருப்பவன். தெளிந்த ஞானமுள்ள பக்தர்கள் இதைத் தெரிந்து கொள்வர். அவனே திருவேங்கடத்தில் நித்ய வாசம்

பண்ணுகின்றான் என்று கருதி நாள் தோறும் வணங்குவர். எனவே, நெஞ்சே நீ திருவேங்கடத்தை விரைவில் சென்றடைவாயாக, என்கின்றார் ஆழ்வார்.

**பாசுரம்-1-8-3**

**"நின்ற மாமருது இற்றுவிழ நடந்த நின்மலன் நேமியான்**
**என்றும் வானவர் கைதொழும் இணைத் தாமரையடி யெம்பிரான்**
**கன்றி மாரிபொழிந்திடக் கடிதா நிரைக்கு இடர் நீக்குவான்**
**சென்று குன்றமெடுத்தவன் திருவேங்கடம் அடை நெஞ்சமே!"**

கண்ணன் பலதீய விளையாட்டுகளைச் செய்ய யசோதை கண்ணனை உரலில் கட்டிப் போட்டாள். முன் நாரதர் சாபத்தால் நளகூபரன், மணிக்ரீவன் என்ற குபேரர் புதல்வர் இருவரும் இரு மருதமரமாக வளர்ந்திருந்தனர். கண்ணன் உரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அந்த இரு மருதமரங்களுக்கிடையே எழுந்தருளினான். அம்மரங்கள் முறிய இருவரும் சாபம் தீர்ந்தனர். அத்தகைய கண்ணனாக அவதரித்த திருமால் குற்றமற்றவனும் திருச்சக்கரத்தைத் தனது வலக் கையில் தரித்திருப்பவனும், ஸ்ரீ வைகுண்டத்தில் தினமும் நித்ய சூரிகளால் வணங்கப் படுபவனும் இந்திரன் பெய்வித்த கல்மழையினின்றும் கோகுலத்தையும் கோபர்களையும், கோக்களையும் காக்க கோவர்த்தமலையைத் தூக்கி குடையாகப் பிடித்தவனும், ஆகிய எம்பெருமான் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ள திருமலையே

நமக்குத் துணை யென்று எண்ணி அங்கு செல்ல நினைப்பாய் மனமே ! என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-1-8-4

"பார்த்தற்காய் அன்று பாரதம் கை செய்திட்டு வென்ற
பரஞ்சுடர்
கோத்து அங்கு ஆயர்தம் பாடியில் குரவைபிணைந்த
எம்கோவலன்
ஏத்துவார் தம் மனத்துள்ளான் இடவெந்தை மேவிய
எம்பிரான்
தீர்த்த நீர்த் தடஞ்சோலைசூழ் திருவேங்கடம்
அடைநெஞ்சமே".

அன்று பாண்டவர்களுக்காக பாரதயுத்தத்தை நடத்தி, பல உதவிகளைச் செய்து அவர்கள் வெற்றியடையச் செய்தவனும் அடியார்களுக்காக பல உதவிகளைச் செய்தவனும் ஒளிமிகுந்த திருமேனியையுடையவனும் கோபியர்களுடன் குரவைக் கூத்து ஆடியவனும் தன்னை வணங்கும் அடியார்களின் உள்ளத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி இருப்பவனும் திருவிட எந்தை என்னும் திருப்பதியில் திருமகளைத் தன் இடப்பாகத்தில் கொண்டு நித்ய கல்யாணப் பெருமானாக எழுந்தருளியிருப்பவனும் ஆகிய எம்பெருமான் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ள பல புண்ணிய தீர்த்தங்களையும், பூஞ்சோலைகளையு முடைய திருமலையை அடைய வேண்டுமென்று நினைப்பாயாக மனமே ! என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-1-8-5

"வண்கையான் அவுணர்க்கு நாயகன் வேள்வியில்
சென்று மாணியாய்
மண் கையால் இரந்தான் மராமரமேழும் எய்த
வலத்தினான்
எண்கையான் இமயத்து உள்ளான் இருஞ்சோலை
மேவிய எம்பிரான்
திண்கைம்மா துயர்தீர்த்தவன் திருவேங்கடம் அடை
நெஞ்சமே"

வேண்டியவர்க்கு வேண்டிய படி தானம் செய்த அசுரச்சக்ரவர்த்தியான மாவலியினுடைய யாகபூமியிலே வாமனனாகச் சென்று, இந்திரனைக் காப்பதற்காக, கைநீட்டி மூன்றடி மண்ணை யாசித்துப் பெற்று, ஓரடியால் மண்ணுலகையும் இரண்டாமடியால் விண்ணுலகையும் அளந்து மூன்றாமடியை அவன் தலை மீது வைத்து பாதாள உலகம் அனுப்பியவன் எம்பெருமான். இராமாவதாரத்தில் வாலியைக் கொல்வதில் சுக்ரீவனுக்கு ஏற்பட்ட ஐயத்தை நீக்கி, நம்பிக்கையுண்டாவதற்காக ஏழு மருத மரங்களை ஒரே அம்பினால் துளைத்து வீழ்த்திய மிகுந்த வலிமையுடைவன்.

அடியார்களுக்குக் காட்சி கொடுத்து காப்பதற்காக வில், வாள், கதை, சங்கு, சக்கரம் ஆகிய ஐந்து ஆயுதங்களை ஏந்திய, எட்டு கைகளுடன் காஞ்சியில் அட்டபுயகரம் என்னும் திருப்பதியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ளான். திருவெட்டெழுத்து மந்திரமான "ஓம் நமோ நாராயணாய" எனும் மந்திரத்தைத் தானே நாராயணன் என்ற குருவாகவும், நரநாராயணன் என்ற சீடனாகவும்

இருந்து வெளியிட்ட வதரியிலே வதரி நாராயணனாக எழுந்தருளியுள்ளான்.

திருமாலிருஞ்சோலை மலையிலே கள்ளழகராக எழுந்தருளியுள்ளான். மற்றும் முதலை வாயில் அகப்பட்ட கஜேந்திர ஆழ்வானைக் காப்பாற்றினான். இத்தகைய சிறப்புகளைப் பெற்ற எம்பெருமான் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ள திருவேங்கடமலையே நமக்குப் பெருந்துணை. எனவே அத்திருவேங்கடத்தைச் சென்று சேர்வாயாக மனமே ! என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-1-8-6

**"எண்திசைகளும் ஏழுலகமும் வாங்கிப் பொன்**
**வயிற்றில் பெய்து**
**பண்டு ஓர் ஆலிலைப் பள்ளி கொண்டவன் பால்**
**மதிக்கு இடர் தீர்த்தவன்**
**ஒன்திறல் அவுணனுரத்துகிர் வைத்தவன்**
**ஒள்ளெயிற்றொடு**
**திணதிறல் அரியாயவன் திருவேங்கடம் அடை**
**நெஞ்சமே."**

பிரளய காலத்தில் உலகங்களெல்லாம் அழிந்து போகாதபடி உண்டு தனது திருவயிற்றிலே வைத்து, நோக்கி, ஓர் ஆலிலையில் பள்ளி கொண்டவனும் , சந்திரனுக்கு ஏற்பட்ட களங்கத்தைப் போக்கினவனும் பல வரங்களைப் பெற்று, பல கொடுமைகளைச் செய்து , தேவர் முதலானவர்களையும் துன்புறுத்திய இரணியனை, அழகிய கோரப் பற்களுடனே மிக்க வலிமையுடைய நரசிங்கமாகத் தோன்றி, தனது கூரிய நகங்களால் அவனது மார்பகத்தைப் பிளந்து அழித்தவனுமான எம்பெருமான் திருவேங்கடவனாக

எழுந்தருளியுள்ள திருவேங்கடத்தைச் சென்று அடைவாயாக மனமே ! என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-1-8-7

"பாரும் நீர் எரி காற்றினோடு ஆகாசமும்
இவையாயினான்
பேரும் ஆயிரம் பேசநின்ற பிறப்பிலி பெருகுமிடம்
காரும்வார்பனி நீள் விசும்பிடைச் சோரு மாமுகில்
தோய்தரச்
சேரும்வார் பொழில் சூழ் எழில் திருவேங்கடம்
அடைநெஞ்சமே !"

மண்ணாய் (பூமியாய்) நீராய், நெருப்பாய், காற்றாய், விண்ணாய் ஐம்பெரும்பூதங்களாய் இருப்பவனும் பேர் ஆயிரம் உடைய பீடுடையவனாக விளங்குபவனும் பிறப்பிலியுமான எம்பெருமான் வாழ்கின்ற இடமானது திருவேங்கடம். ஆகாயத்தினின்று மழை நீரும், மிக்க பனிநீரும் பெய்யக் கூடியதும் மேகங்கள் தவழக் கூடிய உயர்ந்த மலை உச்சியை உடையதும் அடர்த்தியான சோலைகள் சூழப் பட்டதும் மிக்க அழகும் உடையது திருவேங்கடம். அத்தகைய சிறப்பு வாய்ந்த திருவேங்கடத்தைச் சென்று சேர்வாயாக மனமே! என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம் 1-8-8

"அம்பரம் அனல் கால் நிலம் சலமாகி நின்ற
அமரர்கோன்
வம்புலா மலர்மேல் மலிமடமங்கை தன் கொழுநனவன்
கொம்பினன்ன இடைமடக் குறமாதர்
நீளிதணந்தொறும்
செம்புனம் மவைகாவல் கொள் திருவேங்கடம்"
அடைநெஞ்சமே !"

விண், நெருப்பு , காற்று, நீர், மண் ஆகிய ஐம்பெரும் பூதங்களாய் இருப்பவனும் நித்ய சூரிகளுக்குத் தலைவனானவனும் நறுமணம் மிக்க தாமரை மலரிலில் பொருந்தி இருக்கின்ற பெரிய பிராட்டியாகிய திருமகளுக்குத் கேள்வனுமான எம்பிரான் எழுந்தருளியிருக்கும் மலை திருவேங்கடமலை. வஞ்சிக் கொடி போன்ற நுண்ணிய இடையையும் மடப்பத்தையு முடைய குறவர் பெண்கள் பரண்கள் மேல் இருந்து சிறந்த தினைக் கொல்லைகளைக் காவல் காக்கும் மலை திருவேங்கடமலை. அத்தகைய சிறப்பு வாய்ந்த திருவேங்கடமலையை அடைவாயாக மனமே! என்கின்றார் ஆழ்வார்.

பாசரம்-1-8-9

"பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும் சொல்லி நின்று பின்னரும்
பேசுவார் தம்மைஉய்ய வாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்
வாசமாமலர் நாறுவார் பொழில் சூழ் தரும் உலகுக்கெல்லாம்
தேசமாய்த் திகழும்மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே!"

அனைவரால் சொல்லத் தக்கதும், இனிமையானதுமாகிய ஓம் நமோ நாராயணாய எனும் திருமந்திரத்தை எப்போதும் ஓதுபவர்களது பிறவிக்கடலை நீக்கி, அவர்கள் உய்யும் படிச் செய்யும் எம்பெருமான் எழுந்தருளியுள்ளது திருவேங்கட மலையாகும். நறுமணம் மிக்க சிறந்த மலர்கள் பூத்துக்

குலுங்கி மணம் வீசும் சோலைகளால் சூழப்பட்டது திருவேங்கடமலையாகும். எல்லா உலகங்களுக்கும் திலகமுமாய் விளங்கும் அத்திருவேங்கட மலையைச் சென்று சேர்வாயாக மனமே ! என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம்-1-8-10

**"செங்கயல் திளைக்கும் சுனைத்திருவேங்கடத்து உறை செல்வனை**
**மங்கையர் தலைவன் கலிகன்றி வண்தமிழ்ச் செஞ்சொல்மாலைகள்**
**சங்கையின்றித் தரித்து உரைக்க வல்லார்கள் தஞ்சமதாகவே**
**வங்க மாகடல் வையம் காவலராகி வானுலகாள்வரே "**

இளமையானதும் சிவந்த நிறத்தை உடையதுமாகிய மீன்கள் களிப்புடன் விளையாடும் சுனைகளையுடைய திருவேங்கட மலையிலே எழுந்தருளியுள்ள திருவேங்கடவனைக் குறித்து, திருமங்கையாழ்வார் இனிய தமிழிலே சிறந்த சொற்களால் அருளிச் செய்தவை இச்சொல்மாலை. இச்சொல் மாலையை "இது பயன் தருமோ, தராதோ" என்ற சந்தேகமில்லாமல் மிகுந்த பக்தியுடன் ஓத வல்லவர்களுக்கு கப்பல்கள் உலாவக்கூடிய பெரிய கடலால் சூழப்பட்ட இம்மண்ணுலகில் உள்ளவரை அதுவே புகலிடமாகும். மற்றும் இவர்கள் இம்மண்ணுலகில் இராசாதிராசர்களாக விளங்கி, பின் பரமபதத்தையும் ஆள்வார்கள்.

## ஒன்றாம் பத்து - ஒன்பதாம் திருமொழி

அவதாரிகை

திருமங்கையாழ்வார் தன் நெஞ்சினை நோக்கி திருவேங்கடம் சென்று சேர் என்று தூண்டினார். மனமும் அப்படியே இசைய, திருவேங்கடமுடையானைக் கண்டு வணங்கி மகிழ திருமலையிலே வந்து புகுந்தார்.

எம்பெருமான் சர்வசுவாமியாகவும், சகல உறவினராகவும், திருமலையில் எழுந்தருளியுள்ளான் என்று மிக்க ஆசையுடன் திருமலையை வந்தடைந்தார். ஆனால் திருவேங்கடவனோ பாசத்துடன் அம்மா ! அப்பா என்று அழைத்துக் கொண்டு ஓடிவரும் குழந்தையைத் தூக்கி எடுத்து அன்புடன் அணைத்துக் கொள்ளாத தாயைப் போல இருந்தார். ஆழ்வார் மிகவும் மனம் நொந்து, பரம காருண்யனான திருமால் இப்படி அன்புடன் வரவேற்காததற்குக் காரணம் என்ன என்று ஆராயத் தொடங்கினார். நாம் செய்த கனத்த பெரும் பாவங்களே! இதற்குக் காரணம் என்று உறுதிபூண்டு, எம்பெருமானுக்கு இரக்கம் உண்டாகும் படி முறையிடுகின்றார். எம்பெருமானே! இவ்வுலகில் சிற்றின்பங்களில் ஈடுபட்டு, பல பாவங்களைச் செய்து பலகாலங்களை வீணாகக் கழித்துவிட்டேன். இப்போது மிகவும் வருத்தப்பட்டு உமது திருவடிகளில் சரணாகதி பண்ணினேன்.

அடியேன் செய்த முன் தீவினைகளைக் கண்டு என்னைக் கைவிடாமல், அத்தீவினைகளைப் பொறுத்து, காத்து அருள வேண்டும் என்று பெரிய

பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு சரணாகதி பண்ணினார்.

**பாசுரம்-1-9-1**

**"தாயே தந்தையென்றும் தாரமேகிளை மக்களென்றும்**
**நோயே பட்டொழிந்தேன் நுன்னைக்காண்ப**
**தோராசையினால்**
**வேயேய் பூம்பொழில்சூழ் விரையார் திரு வேங்கடவா !**
**நாயேன் வந்தடைந்தேன் நல்கிஆளெனைக்**
**கொண்டருளே."**

**திருவேங்கடவன்**

திருமங்கை மன்னரே! நாம் உம்மை வரவேற்று உபசரிக்கவில்லையென்று மனம் வருந்துகின்றீர். நீர் எமக்கோ அல்லது எமது அடியார்களுக்கோ என்ன தொண்டு செய்துள்ளீர் ! தொண்டு பூண்டு அமுதமுண்ணா சாதாரண மனிதராகத்தானே இருக்கின்றீர். அப்படி யிருக்க நான் உம்மை நலம் விசாரிக்க வில்லை யென்று வருந்துவதில் நியாயம் ஏதும் இல்லையே !

**திருமங்கையாழ்வார்**

கார் மேகம் போன்று எந்த பயனையும் நீர் அடியேனிடமிருந்து எதிர்பார்க்காமல் அருள்புரியும் கருணைக்கடல் அல்லவா நீர்? இருந்தாலும் சொல்லுகின்றேன் கேளும். திருவரங்கத்தில் திருவரங்கனாகக் கோயில் கொண்டுள்ள உமது திருக் கோயிலுக்கு கோபுரமும் மதிளும் கட்டுவதற்கு எத்துணை துயரங்களை அடைந்தேன். திருடனாகி வழிப்பறி செய்து திருப்பணி செய்யவில்லையா? இவற்றையெல்லாம் மறந்து விட்டீரோ ?

**திருவேங்கடவன்**

ஆழ்வாரே! பகவத் - பாகவதத் தொண்டுகளை, உழைத்துத் தேடிய பொருளைக் கொண்டுதானே செய்ய வேண்டும். மெய் வருத்திக் கை (கைத்தொழில்) செய்து உய்ம்மின் என்ற நம்மாழ்வாரின் வாக்கைப் பொருட்படுத்தாமல், திருடர்களிடமிருந்து கொள்ளையடித்த பொருள்களைக் கொண்டல்லவோ கட்டினீர். கொள்ளை யடித்த பொருளைக் கொண்டு கோபுரமும் மதிலும் கட்டியதை எவ்வாறு தொண்டாக ஏற்றுக் கொள்ள முடியும்.

**திருமங்கையாழ்வார்**

திருவேங்கட முடையவரே! உமது அடியார்கள் ஓராயிரம் பேருக்கு ஓராண்டு திருவமுது படைத்ததையும் மறந்து விட்டீரோ ?

**திருவேங்கடவன்**

ஆழ்வீர் எதையும் யான் மறக்கவில்லை. ஆனால் குமுதவல்லியை மணக்க வேண்டுமென்ற பெண்ணாசையினால் அன்றோ செய்தீர்.

எனது மனம் உவப்பதற்காக செய்யவில்லையே. எனவே இதையும் பாகவதத் தொண்டாக ஏற்பதற்கில்லையே.

**திருமங்கையாழ்வார்**

சுவாமி அடியேன் என் சுயநலத்திற்காகத் தான் செய்தேன் என்பதை ஒப்புக்கொள்ளுகின்றேன். இப்போதுதான் உணருகின்றேன். மற்றும் இதுநாள்வரை அடியேனைப் பெற்றெடுத்த தாய்

தந்தையரையும், மனைவியையும், குடல் தொடக்கு உடைய உறவினர்களையும் மட்டும் தான் ஆதரவாளர் என்று தவறுதலாக நினைத்து சம்சாரக் கடலிலே விழுந்து, துன்பப்பட்டு காலத்தை வீணாகக் கழித்துவிட்டேன். நாயைப் போல் கீழ் மகனாக இருந்து விட்டேன். நீரும் திருமகளுமே அடியேனுடைய ஆத்மாவிற்குத் தாய் தந்தையர் என்பதையும் திருமால் அடியார்கள் தாம் அடியேனுக்கு உண்மையான உறவினர்கள் என்பதையும் உணர்ந்துவிட்டேன். இப்படி அடியேன் செய்த தவறுகளை உணர்ந்து, திருந்தி , பாவங்களை போக்கக் கூடிய இந்த வேங்கட மலையை அடைந்து , உம்மைக் கண்டு, சரணாகதி அடைய வந்துள்ளேன். அடியேனுக்கு சரணாகதி தந்தருளவும்.

பாசுரம் -1.9.2

"மானேய் கண்மடவார் மயக்கில் பட்டு மாநிலத்து
நானே நானாவித நரகம்புகும் பாவம் செய்தேன்
தேனேய் பூம்பொழில் சூழ் திருவேங்கட மாமலை என்
ஆனாய் வந்தடைந்தேன் அடியேனைஆட் கொண்டருளே"

எம்பெருமானே ! திருவேங்கட நாதனே ! மண்ணுலகில் அழகான பெண்களின் வலையில் சிக்கிக் கொண்டு அளவற்ற பாவங்களைச் செய்து விட்டேன். தற்போது அறியாமை நீங்கி அறிவு பெற்று, உம் திருவடிகளில் சரணம் பற்றினேன்.

**திருவேங்கடவன்**

குமுதவல்லியின் மணவாளரே ! உலகில் மக்கள் தாங்கள் செய்யும் பாவ, புண்ணியங்களுக்கேற்ற பலனை நிச்சயம் அனுபவித்துத் தான் தீர வேண்டும் மென்பது நீர் அறியாதது இல்லையே ! நீரும் சில பாவங்களைச் செய்துள்ளீரே ! அதை நீர் அனுபவிக்க வேண்டாமா ?

**திருமங்கையாழ்வார்**

திருவேங்கடமுடையாரே ! நீர் சொல்லுவது முற்றிலும் உண்மையே. மான் போன்ற பார்வையுடைய இளம் பெண்களின் , கண் பார்வையிலே மயங்கி பல பாவங்களைச் செய்தேன். அதுவும் நானாவிதமான நரக தண்டனையை அடையும் படியான, பாவங்களைச் செய்துள்ளேன். அதையும் பிறர் தூண்டுதலின்றி நானே செய்தேன்.

அப்படிப்பட்ட பாவங்களைச் செய்தது பெரும் தவறு என்பதை இப்போது தான் உணருகின்றேன். தவறை உணர்ந்து, இனி அப்படிப்பட்ட பாவங்களைச் செய்யக்கூடாது என்று உறுதி பூண்டேன். மன்னிக்க வேண்டி உமது திருவடிகளையே சரணாகப் பற்றினேன். அடியேன் சரணாகதியை ஏற்று அருள்புரிவீராக.

**திருவேங்கடவன்**

சிற்றரசனாக விளங்கிய திருமங்கை ஆழ்வாரே! நீர் மண்ணாசை கொண்டு பல போர்களைச் செய்து பல்லாயிரம் வீரர்களைக் கொன்று குவித்ததை மறந்து விட்டீரா ?

பாசுரமம் - 1-9- 3

**கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோள்**
**ஒன்றில்லாமையினால்**
**என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன்**
**குன்றேய் மேகமதிர் குளிர் மாமலை வேங்கடவா !**
**அன்றே வந்தடைந்தேன் அடியேனை ஆட்**
**கொண்டருளே !**

திருவேங்கட மாமலை எப்போதும் குளிர்ந்த மேகங்களால் சூழப்பட்டு குளிர்ச்சியாக இருப்பதைப் போல் , நீரும் என்றும் கருணையே வடிவாகக் கொண்டவர் அல்லவா? நீர் சொன்னதைப் போல உமக்கும் உமது தொண்டர்க்கும் பகவத்-பாகவதத் தொண்டுகளை அடியேன் செய்யவில்லை. தொண்டு செய்ய வேண்டும் என்ற நல்ல குறிக்கோள் எதையும் நான் பெற்றிருக்கவில்லை. அதற்கு மாறாக மண்ணாசை கொண்டு பல போர்களைச் செய்து , பல்லாயிரம் வீரர்களைக் கொன்று , கொலைக்காரனானேன், மற்றும் யாசித்து வந்தவர்களிடம், நன்மை பயக்கும் இனிய வார்த்தைகளைச் சொல்லி , உதவிபுரியாமல் , தீமை தரும் தீய சொற்களைச் சொல்லி , அவர்கள் மனம் புண்படும் படிச் செய்துவிட்டேன். அடியேன் தவறுகளை உணர்ந்து , மனம் திருந்தி விட்டேன். அடியவர் குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் கோவிந்தனே ! அடியேன் சரணாகதியை ஏற்று அருள் புரிவீராக,

**திருவேங்கடவன்**

ஆழ்வாரே ! நீவீர் பல பிறவிகள் எடுத்து வருந்தினீர் ! நீர் உய்ய வேண்டுமென்பதற்காகவே

மானிடப் பிறவியைத் தந்தேன். இப்பிறப்பைத் தெப்பமாகக் கொண்டு சம்சாரமாகிய கடலைக் கடந்து, எம்மை வந்தடைவீர் என்று நினைத்தேன். ஆனால் நீரோ அப்படிச் செய்ய வில்லை.

பாசுரம் -1.9.4

**"குலந்தான் எத்தனையும் பிறந்தே இறந்து எய்த்து ஒழித்தேன்**
**நலந்தான் ஒன்றுமிலேன் நல்லதோர் அறம் செய்துமிலேன்**
**நிலந்தோய் நீள்முகில் சேர் நெறியார் திருவேங்கடவா !**
**அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே"**

சிறிது நேரமாகிலும் உம்மை விட்டு பிரிந்தால், நீர் அடியவர்கள் செய்த தவறுக்காக தண்டித்து விடுவீரே என்று பயந்து உம்மை விட்டுப் பிரியாமல் உமது திருமார்பிலே வாழ்கின்ற அலர்மேல் மங்கை மணவாளரே ! நீர் சொன்னதைப் போல் யான் பல பிறவிகள் எடுத்தேன். முற்பிறவிகளில் கஜேந்திர ஆழ்வானைப் போல் உம்மை நம்பிக்கையுடன் வணங்கினேன் இல்லை. பறவை அரசன் ஜடாயுவைப் போல் உமக்கு உதவினேன் இல்லை. எனவே இப்பிறவியிலாவது உம்மை அடைவதற்குரிய யாதொரு சிறு தொண்டையும் உமது விருப்பத்திற்காக செய்யவில்லை. பல துன்பங்களில் சிக்கித் துயரடைந்தேன். இறுதியாக திருவேங்கட மலையை வந்தடைந்து , உம்மை வணங்கி , வழிபட்டு , உமது திருவடியைப் பற்றினேன். அடியேனை ஏற்று அருள்புரிவீராக !

திருவேங்கடவன்

திருவாலி நாடுடைய பரகாலரே ! எனக்குச் செய்யும் தொண்டைவிட , என் அடியார்களாகிய பாகவத உத்தமர்களுக்குச் செய்யும் பாகவதத் தொண்டே சிறந்தது, பகவத் தொண்டிற்கு பாகவதத் தொண்டே எல்லை நிலம் என்பது நீவீர் அறியாத தில்லையே ! அவை தினையளவாயினும் நான் அதைப் பனையளவாகக் கொள்ளுவேனே ! அப்படி எதாகிலும் செய்திருந்தால் சொல்லும்.

பாசுரம் - 1.9.5

"எப்பாவம் பலவும் இவையே செய்து இளைத்து
ஒழிந்தேன்
துப்பா ! நின்னடியே தொடர்ந்து ஏத்தவும்
கிற்கின்றிலேன்
செப்பார் திண்வரைசூழ் திருவேங்கட மாமலை , என்
அப்பா ! வந்தடைந்தேன் அடியேனை
ஆட்கொண்டருளே !"

திருமகள் கேள்வரே ! உலகில் என்னென்ன பாவங்கள் உள்ளனவோ ! அவ்வளவு பாவங்களையும் செய்து விட்டேன். தேனில் மொய்க்கும் ஈக்களைப் போல, அப்பாவங்கட்குரிய தீவினைகள் அடியேனை வந்தடைந்து துன்புறுத்தின. அதனால் மிகவும் இளைத்து விட்டேன். அதன் பிறகாவது உமது திருவடிகளை வணங்கி, வழிபட்டு, உம் புகழ் பாடினேனா என்றால் அதையும் செய்யவில்லை. தவறு செய்தபிள்ளை, துன்பங்களையெல்லாம் அனுபவித்து, மனம் நொந்து தன் தந்தையின் அன்பையும், உதவியையும் எதிர்நோக்கி வருவதைப் போல

அடியேனும் ஆத்மத் தந்தையாகிய , உம்மை வந்தடைந்தேன். என் அப்பா ! எனக்கு அருள்புரிவீராக!

**திருவேங்கடமுடையான்**

திருமங்கை மன்னரே ! நீர் மன்னராக இருந்த போது, உமது நாட்டில் ஐம்பெரும் பாவங்களைச் செய்தவரை தண்டித்து நல்லாட்சி செலுத்தினீர். ஆனால் உமது உடலிலுள்ள ஐம்பொறிகளை அடக்கி ஆண்டு, எம்மீது பக்தி செய்ய இயலாமல் போய்விட்டீரே !

**பாசுரம் - 1.9.6**

**"மண்ணாய் நீர் எரி கால் மஞ்சு உலாவும் ஆகாசமுமாய்**
**புண்ணார் ஆக்கை தன்னுள் புலம்பி, தளர்ந்து ,**
**எய்த்து ஒழிந்தேன்**
**விண்ணார் நீள்சிகர விரையார் திரு வேங்கடவா !**
**அண்ணா ! வந்தடைந்தேன் அடியேனை**
**ஆட்கொண்டருளே !"**

திருவேங்கடமலைக்கு அதிபதியாக விளங்கும் அடியேன் அண்ணலே ! மண், நீர், நெருப்பு, காற்று , ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களாலும் ஆகியது இவ்வுடல். புண்கள் நிறைந்த இவ்வுடலில் அகப்பட்டுக்கொண்டு சொல்ல முடியாத துன்பங்களை அனுபவித்தேன். எனவே இன்னும் மறுபிறவி அஞ்சி உமது திருவடிகளில் சரணாகதி பண்ணினேன் அண்ணலே. அடியேனுக்கு அருள் புரிவீராக !

**திருவேங்கடவன்**

ஆழ்வாரே ! மக்கள் இளம்பருவத்தில் நன்னெறியை உணர முடியாமையால் பல தீமைகள் செய்யலாம். ஆனால் வயது முதிர்ந்த நிலையில் தரும நெறியைப் பின்பற்றி நடக்க வேண்டுமல்லவா ? நீரும் இம்மக்களைப் போலல்லவா செய்துள்ளீர்! அப்படியிருக்க நீர் என் அருளை வேண்டுவது எப்படிப் பொருந்தும் ?

பாசுரம் - 1.9.7

**"தெரியேன் பாலகனாய் பல தீமைகள் செய்து விட்டேன்**
**பெரியோன் ஆயினபின் பிறர்க்கே உழைத்து ஏழையானேன்**
**கரி சேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா !**
**அரியே ! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே!"**

ஸ்ரீ நிவாசப் பெருமானே! நீர் கேட்பது முற்றிலும் பொருத்தமே. அடியேன் சிறியவனாக இருந்த போது அறியாமையால் பல தீயசெயல்களைச் செய்துவிட்டேன். இவை தெரியாமல் செய்த குற்றம். ஆனால் பெரியவனான போது உடல் இன்பத்தையே பெரிதும் விரும்பி, தவறான வழியில் பல பெண்களுடன் கூடி, காலத்தை வீணே கழித்துவிட்டேன். அடியேன் அழகும் , பெருமையும், வலிமையும் கெட்டு ஒழிந்தன. இவை தெரிந்தே செய்த குற்றங்கள். நரக தண்டனைக்குப் பயந்து , உம்மை நாடி வந்துள்ளேன். இப்போது உமது கருணைமிகு பார்வை அடியேன் மீது பட்டதால் தவறை உணர்ந்து உம்மை

தரிசித்து உய்ய வந்துள்ளேன். நீர் பாவங்களைப் போக்குபவன் என்பதால் தானே ஹரி என்ற பெயரைப் பெற்றீர். உமது திருநாமங்களின் பெருமைக்குக் களங்கம் தோன்றாமல் அடியேனுக்கு அருள்புரிவீராக !

**திருவேங்கடவன்**

திருமங்கை மன்னரே ! நீர் செய்த தீவினைகளால் இன்னும் பல பிறவிகள் எடுக்க வேண்டியுள்ளதே. அப்படியிருக்க, நீர் இப்பிறப்பில் வைகுந்தப் பதவி கேட்டால் எப்படிக் கிடைக்கும் ?

பாசுரம் -1.9.8

**"நோற்றேன் பல்பிறவி நுன்னைக் காண்பதோர் ஆசையினால்**
**ஏற்றேன் இப்பிறப்பே இடர் உற்றனன் எம்பெருமான்**
**கோல்தேன் பாய்ந்தொழுகும் குளிர் சோலைசூழ் வேங்கடவா**
**ஆற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட் கொண்டருளே."**

திருவேங்கட முடையாரே! அடியேன் செய்த தீவினைகளால் பலபிறவிகள் எடுத்தேன். அதை உணர்ந்து தானே உம்மிடம் சரணாகதி பற்றினேன். திருநறையூர் நம்பியாக எழுந்தருளியுள்ள உம்மையே குருவாக ஏற்று, உம்மிடம் இருந்து பஞ்ச சம்ஸ்காரங்களைப் பெற்றுக் கொண்டேன். ஞானமும் அனுட்டானமும் ஒருங்கேபெற்ற குருவினை அடைந்த போதே, திருமாமகள் கேள்வராகிய நீரே, தானே வைகுந்தம் தருவீர் என்றார் மணவாள மாமுனிகள். அதன்படி உம்மையே அடியேன் குருவாக ஏற்றதால் நீரே முன்வந்து அளிக்க வேண்டுமல்லவா ? உம்மை

வணங்கி, வழிபட்டு, உம் திருப்பதிக் கெல்லாம் சென்று உம் திருப்புகழை யெல்லாம் பாடி வந்துள்ளேனே! இதை நீவீர் அறிய வில்லையே! உம் புகழ் பாடினால் முக்காலத் தீவினைகளும் நெருப்பில் பட்ட பஞ்சு போல் தீய்ந்துவிடுமென்று ஆண்டாள் பாடியது பொய்யாகலாமா ?

**"வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க**
**போய பிழையும் புகுதருவான் நின்றனவும்**
**தீயினால் தூசாகும்"**

(திருப்பாவை - 5)

மற்றும் அடியேனே பாடிய கீழ்க்காணும் பாசுரமும் பொய்யாகலாமோ

**"நஞ்சுதான் கண்டீர் நம்முடைவினைக்கு**
**நாராயணா வென்னும் நாமம்"**

(பெரிய திருமொழி-1.1.10)

இப்போது உமது தரிசனத்தால் அடியேன் பாவங்கள், பகலவனைக் கண்ட பனிபோல் போகுமல்லவா? உம்மைச் சரணடைந்த காகம், சுக்ரீவன், விபீடணன் ஆகியோரைக் காத்தருள வில்லையா ? எனவே அடியேனது தீவினைகளைப் போக்கி, அடியேனும் காக்கப்படவேண்டியவனே. எனவே மனமுவந்து தயங்காமல் அருள்புரிவீராக !

**திருவேங்கடமுடையான்**

திருமங்கை மன்னரே ! நீர் வேண்டுவது நியாயமானதே ! உமது தீவினைகள் மன்னிக்கக்

கூடியதே. நீர் மிகவும் வருத்தப்பட்டு, துன்பங்களை அனுபவித்து வந்துள்ளீர். உமது ஆத்மத் தந்தை என்ற நிலையிலே உமது தீவினைகளுக்கு ஏற்ற தண்டனையை அளிக்க வேண்டுமல்லவா ? அது தானே சரி. எனவே தண்டனையைத் துய்த்து பின்னர் வாரும், அருள்புரிகின்றேன்.

பாசுரம்-1.9.9

"பற்றேல் ஒன்றுமிலேன் பாவமே செய்து
பாவியானேன்
மற்றேல் ஒன்றறியேன் மாயனே ! எங்கள் மாதவனே !
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச் சுனை வேங்கடவா !
அற்றேன் வந்தடைந்தேன் அடியேனை
ஆட்கொண்டருளே."

திருவேங்கடமுடையாரே ! உம்முடைய உறவை அறுத்துக் கொண்டு, வெகுதூரம் போன அடியேனுக்கு ஓரிடத்திலும் எந்த ஆதரவும் கிடைக்கவில்லை. ஆத்மாவிற்கு ஞானமும் ஆனந்தமும் உறுதியாயினும், அடியேன் பாவங்களையே செய்து பெரும் பாவியானேன். தேவரீரை அடைவதற்கு ஒரு வழிமுறையையும் அறிய முடியாதவனாக உள்ளேன்.

ஆனால் தேவரீர், குற்றமான தீவினைகளைச் செய்பவரையும் காப்பாற்றுவதையே குணமாகக் கொண்டுள்ளீர். உம்முடைய கல்யாண குணங்கள் இருக்க எனக்கு என்ன குறை. ஏன் அருள் புரியாமல் தாமதிக்கின்றீர்.

**திருவேங்கடவன்**

ஆழ்வாரே! நீர் அனைத்தும் அறிந்தவர் ஆனால் பெருங்கருணையுடன் அடியார்களைக் காப்பதில் என்னினும் சிறந்தவள் திருமகளன்றோ! யான் எங்கு அடியார்கள் குற்றங்கட்காக தண்டித்து விடுவோனோ என்று அஞ்சி,அவர்கட்கு பரிந்துரை செய்து, அருள் புரிவதற்காகவன்றோ எனது வலமார்பினில் அகலகில்லேன் இறையும் என்று வாழ்ந்து கொண்டிருக்கின்றாள். அப்படியிருக்க நீர் அவளை மறந்து, நேரடியாக என்னை வேண்டுகின்றீரே! இது முறையல்லவே! எனவே உமது ஆத்மத் தாயாகிய அவளை வணங்கி அவளுடைய பரிந்துரையுடன் வாரும்

**திருமங்கையாழ்வார்**

ஐயோ ! பெருந் தவறு செய்து விட்டேனே ! பெற்ற தாயினும் சிறந்த, அடியேன் ஆத்மத்தாயாகிய அவர்மேல் மங்கையை மறந்துவிட்டேனே ! என்று வருந்தினார். பத்மாவதித் தாயாகிய திருமகளிடம் சென்றார். தாயாரைத் தன் எட்டு உறுப்புகளும் தரையில் படும் படியாக அட்டாங்க நன்ஸ்காரம் செய்து, வணங்கினார்.

செந்தாமரை மலரிலே வீற்றிருக்கும் செங்கமலவல்லித் தாயே! திருமாலின் திருமார்பில் வலப்புறம் வாழ்கின்ற மங்கையே! அடியேன் பெரும்தவறு செய்து விட்டேன். அடியேன் ஆத்மத் தாயாகிய உம்மை மறந்து திருவேங்கடவனிடம் சென்று எனது குறைகளையும் பாவங்களையும் கூறி அருள் புரிய வேண்டினேன். ஆனால் புரியாது காலதாமதம்

செய்திருந்தார். ஆத்மத்தாயை மறந்த உமக்கு அருள் புரிய முடியாது என்று மறுத்து விட்டார். அடியேன் தவறை உணர்ந்து மனம் வேதனைப் பட்டேன். உம்மை மறந்து யான் நேரே திருவேங்கடவரிடம் சென்ற தவறுக்காக மன்னிக்க வேண்டுகின்றேன் பத்மாவதித் தாயே அருள் புரிந்து தேவரீர் பரிந்துரைத்து திருவேங்கடவன் அருள் புரியும் படிச் செய்ய வேண்டும்.

**பத்மாவதித் தாயார்**

திருமங்கை மன்னரே! கள்வர் மரபில் தோன்றிய நீர் முரட்டுத் தனமான குணங்களைப் பெற்று பலபோர்களில் பல்லாயிரம் மக்களை மண்ணாசையினால் கொன்றீர்! ஆனால் எம்பெண்குலத்தைச் சார்ந்த எம் மனதுக்கினிய குமுத வல்லியால் அன்றோ திருமால் அடியாராகவும், ஆழ்வாராகவும் மாறினீர். அப்படியிருக்க நீர் எம்மை மறந்து நேரே திருவேங்கடவனிடம சென்றது என்ன நியாயம். இதைக் கண்டு, பிள்ளை மறந்துவிட்டதே என்று மனம் சொல்லொலணாத் துன்பம் அடைந்தது. எப்படியும் நீர் வந்தது கண்டு பெரிதும் மகிழ்கின்றேன். "பெற்றமனம் பித்து பிள்ளை மனம் கல்"என்பதை மெய்யாக்கிவிட்டீர். என் மார்பைத் தீண்டி தவறு செய்த காகத்தையே மன்னித்துக் காத்து அருள் புரிந்தவளல்லவா நான் . நீரோ ஆழ்ந்த பக்தியுடன் திருப்பதிகட்கெல்லாம் சென்று எங்களை மங்களா சாசனம் செய்து தற்போது திருவேங்கடம் வந்தடைந்து சரணாகதி செய்துள்ளீர். உமது தவறைப் பொருட்படுத்தாமல் பரிந்துரைக்கின்றோம். செல்லும். திருவேங்கடவன் அருள்புரிவார்.

(பத்மாவதித் தாயார் திருவேங்கடவனிடம் பேசுவது)

சுவாமி என் இனிய மணவாளரே! திருவேங்கடவரே! ஆத்மத்தாயை மறந்தவர்க்கு ஆத்மத்தந்தையாகிய நீர் அருள் புரிய மாட்டீர் என்பதை திருமங்கையாழ்வார் மூலம் உலகத்தார்க்கு அறிவுறுத்தினீர். அதுமட்டுமின்றி, அடியேனுக்கு புருஷகாரி என்றும் (பரிந்துரைப்பவள்) இம்முறைக்குப் "புருஷகாரத் தன்மை" என்றும் உணர்த்தினீர். மிக்க மகிழ்ச்சி. திருமங்கையாழ்வார் பக்தியில் ஆழங்கால்பட்டவர். நாம் உவந்து எழுந்தருளியுள்ள, வதரி முதலாக திருக்குறுங்குடியீராகவுள்ள திருப்பதிகளைச் சென்றடைந்து நம்மை மங்களா சாசனம் செய்தும், செய்யவும் உள்ளார். எனவே அவரது சரணாகதியை ஏற்று அவருக்க அருள்புரியும்.

திருவேங்கடவன்

பத்மாவதியே ! எனதருமைத் திருமகளே ! என் வலமார்பில் அகலகில்லேன் இறையும் என்று வாழ்ந்து கொண்டு அடியார்களுக்குப் பரிந்துரை செய்யும் உனது புருஷகாரத் தன்மையை ஆழ்வார் மூலமாக உலக மக்கட்கும், நமது அடியார்களுக்கும் காட்டவே இப்படிச் செய்தோம். நீர் வருந்த வேண்டாம், ஆழ்வாருக்குத் தவறாமல் அருள் புரிவேன்.

(திருமங்கை யாழ்வார் பத்மாவதித் தாயாரிடமிருந்து திருவேங்கட முடையானைச் சென்றடைற்து வணங்கி நிற்கின்றார்)

**திருமங்கையாழ்வார்**

திருவேங்கடமுடையாரே! உமது திருவுள்ளப் படியே பத்மாவதித் தாயாரிடம் சென்று, அடியேன் தவறைச் சொல்லி பரிந்துரைக்க வேண்டி, இங்கு வந்துள்ளேன். இனியாவது தவறாமல் அருள் புரிவீராக !

**திருவேங்கடமுடையான்**

திருமங்கையாழ்வாரே !புருஷகாரத் தன்மையையும் புருஷகாரியான திருமகளின் பெருமையையும் , திருமகளை முன்னர் வணங்கி, பின்னரே அடியேனை வணங்கவர வேண்டுமென்பதை உம் மூலம் மக்கட்கும் உணர்த்தினோம். வருந்தாதீர் எல்லா ஆழ்வார்களைக் காட்டிலும் நீர் தானே நாங்கள் உவந்து எழுந்தருளியுள்ள திருப்பதிகளுள் அதிகமான திருப்பதிகளில் மங்களாசாசனம் செய்யப் போகின்றீர் பிரதான மந்திரமான திருமந்திரத்தை இம் மண்ணுலகில் உமக்குத் தானே நானே நேரில் உபதேசித்தேன், திருமந்திரத்தின் பெருமையைப் பத்துப் பாசுரங்களில் நீர் தானே பாடியுள்ளீர் ! வாரும் எமதருகில். எம் பரி பூரண அருளைத் தந்தோம். பெற்றுக் கொள்ளும், (அர்சகர் மூலமாக தீர்த்தம் சடாரி, திருத்துழாய் முதலியன வழங்கும் படிச் செய்தார் திருவேங்கடவன்) சென்று வாரும், இன்னும் யாம் எழுந்தருளியுள்ள திருப்பதிகளுக்கெல்லாம் சென்று , அடியேனைப் பாடிப் பரவும் நாம் விரும்பும் நாளில் உம்மை பரமபதத்திற்கு அழைத்துக் கொள்ளுகின்றோம்.

**திருமங்கையாழ்வார்**

திருவேங்கடவரே ! அடியேன் பெற்ற பேறு பெரும் பேறு. குழந்தை அழுகின்ற வரையில்

பொருத்திருந்து அழுதபின்னர் பசியறிந்து பால் கொடுக்கும் தாயைப் போல, தாயினும் பரிந்து, பெற்ற தாயினும் அதிக நன்மையைச் செய்த உமது கருணையே கருணை. மிக்க மகிழ்ச்சியடைகின்றேன். சென்று வருகின்றேன்.

**சிறப்புக் கருத்து**

**" புண்ணியம் செய்து பாவியானவர் "**
**" பாவமே செய்து பாவியானேன்"**

பல சத்யமான நன்மைகளையே செய்த தசரதச் சக்ரவர்த்தி, புண்ணி!யங்களுக்குப் புண்ணியனான இராமபிரானை காட்டுக்கு அனுப்பி துக்க மரணம் அடைந்தார். இப்படிப் புண்ணியத்தைச் செய்து மகனை இழந்த பாவியானார் தயரதர். **"பாவத்தைச் செய்து புண்ணியவானானவன் சிசுபாலன்"** பாவமே உருவான சிசு பாலன் என்பெருமான் கண்ணனை வெறுத்து, கடுஞ்சீய சொற்களால் பேசி பெரும் பாவியானான். முடிவில் கண்ணபிரானால் மரணம் அடைந்து புண்ணியவானானான் சிசுபாலன். ஆனால் தசரதச் சக்ரவர்த்தியைப் போல் புண்ணியம் செய்து பாவியாகாமலும் சிசுபாலனைப் போல, பாவத்தைச் செய்து புண்ணியவானாகவும் பாவத்தையே செய்து பாவியானேன் என்கின்றார் ஆழ்வார்.

அதாவது போர் புரிந்து பல பேரைக் கொன்ற பாவத்தைச் செய்து, திருவேங்கடவன் அருள் கிட்டாத பாவத்தைப் பெற்றேன், பாவமே செய்து பாவியானேன் என்கின்றார் ஆழ்வார்

**பாசுரம் - 1.9.10**

**"கண்ணாய் ஏழுலகுக்கு உயிராய எங்கார் வண்ணனை**
**விண்ணோர் தாம்பரவும் பொழில் வேங்கட வேதியனை**
**திண்ணார் மாடங்கள் சூழ் திருமங்கையர் கோன் கலியன்**
**பண்ணார் பாடல் பத்தும் பயில்வார்க்கு இல்லை பாவங்களே"**

இப்பாசுரத்தில், இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக் கட்டுகின்றார்.

ஏழுலகங்களில் உள்ளார்க்கும், கண்ணை இமை காப்பதைப் போல காப்பாற்றுபவனும் கண் போல் அனைத்துச் செய்திகளையும் அறிவித்துக் காப்பவனும் உயிரைப் போல் காத்து அருளுபவனும் எம்மீது கருணை பொழிபவனும் கரிய அழகிய மேகத்தைப் போன்ற நிறமுடையவனும் விண்ணவர்களும் வந்து வணங்கக்கூடிய சோலைகள் சூழ்ந்த திருவேங்கடத்தில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய ஸ்ரீ மந் நாராயணனை, உறுதியான உயர்ந்த மாடங்களையுடைய மாளிகைகள் உள்ள திருமங்கை என்னும் மாநகரில் வாழும் மக்களுக்குத் தலைவனான கலியனாகிய திருமங்கையாழ்வார் அருளிச் செய்த இனிய பண்ணிசைத்துப் பாடக்கூடிய இந்தப் பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவருடைய பாவங்கள் எல்லாம் தீயில் பட்ட தூசாகத் தீய்ந்து போகும்.

எனவே இப்பத்துப் பாசுரங்களைப் நாம் பாடி மகிழ்வோமாக !

## ஒன்றாம் பத்து -பத்தாம் திருமொழி

இத்திருமொழியில் நான், எனது என்கின்ற அகங்கார மமகாரங்களாகிய விரோதிகளை ஒழித்தால் தான் கைங்கர்யு மாகிற தொண்டைப் பெற முடியும் என்பதையும், அதற்காக பாசங்களைப் (பந்தங்களை) போக்கிப் பரபக்தியைத் தந்தருள வேண்டுமென்று திருவேங்கடவனை வேண்டுகிறார்.

பாசுரம் - 1 .10.1

**"கண்ணார் கடல்சூழ் இலங்கைக்கு இறைவன்த ன்**
**திண்ணாகம் பிளக்கச் சரம்செல உய்த்தாய் !**
**விண்ணோர் தொழும் வேங்கட மாமலைமேய**
**அண்ணா அடியேன் இடரைக் களையாயே. "**

மதிள் சூழ் இலங்கைக் கரசனான இராவணனுடைய திடமான உடல் பிளவு படும்படியாக, அவன் மீது அம்புகளைச் செலுத்திய சிறந்த வில் வீரனாக, இராமபிரானாக அவதரித்தவனே ! இன்று அனைத்து மக்களும் வந்து வணங்கி வழிபடும் படியாக, மிகவும் எளியனாய் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே ! இவ்விருள் தருமா ஞாலத்தில் இருந்து வாழ்வது பெருந்துக்கம் என்றுணர்ந்த அடியேனுடைய இடரைப் போக்கி அருள வேண்டுமென்கிறார் ஆழ்வார்.

பாசுரம் - 1.10.2

**"இலங்கைப் பதிக்கு அன்று இறையாய அரக்கர்**
**குலம்கெட்டு அவர் மாளக் கொடிப்புள் திரித்தாய்**
**விலங்கல் குடுமித் திருவேங்கடம் மேய**
**அலங்கல் துளப முடியாய் ! அருளாயே. "**

மாலி என்னும் அரக்கனை மாய்ப்பதற்காக பெரிய திருவடியாகிய கருடனை இலங்கைக்கு அனுப்பியவனே ! சூரிய - சந்திரர்கள் விலகிப் போக வேண்டும் படியான உயர்ந்த மலை உச்சிகளையுடைய திருவேங்கட மலையிலே, மிக்க நறுமணமுடைய திருத்துழாய் மாலையினை அணிந்து, வீற்றிருக்கும் எம்பெருமானே ! அடியேனுக்கு கருணை புரிய வேண்டும்.

குறிப்பு 1 : இராவணனுக்கு முன்பு இலங்கையில் மாலி என்னும் அரக்கன் குடியிருந்தான். அவன் முதலில் பெரிய திருவடியாகிய கருடனைக் கதையாலே அடித்துத் துரத்திவிட்டான். அதைக் கண்டு எம்பெருமானுக்கு அளவற்ற சீற்றம் உண்டாயிற்று. பிறகு பெருமாள் அப்பெரிய திருவடியின் மேல் ஏறிச் சென்று போர்க்களத்திலே எழுந்தருளித் திருவாழியை ஏவி மாலியை அழித்தார் என்பது ஸ்ரீ ராமாயண உத்தரகாண்டம் கூறும் செய்தியாகும்.

குறிப்பு 2 : அசுரர் குலம்மாள இலங்கை அசுரர்கள் மூலைக்கொருவராகச் சிதறி ஓடினார்கள். பலர் மாண்டொழிந்தனர்.

பாசுரம்-1.10.3

**"நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு**
**ஏர் ஆலம் இளந்தளிர் மேல் துயில் எந்தாய் !**
**சீரார் திருவேங்கட மாமலை மேய**
**ஆராவமுதே ! அடியேற்கு அருளாயே. "**

ஊழிக் காலத்தில் கடல் சூழ்ந்த உலகங்களை யெல்லாம் உண்டு, அவற்றைத் தன் திருவயிற்றிலே வைத்துக் கொண்டு, ஓர் அழகான இளம் ஆலந்தளிர் மேலே படுத்துக் கொண்டு யோக நித்திரை செய்தவனே! சிறந்த திருவேங்கடம் என்னும் பெரிய மலையிலே எழுந்தருளியிருக்கின்ற ஆராவமுதனே ! அடியேனுக்கு அருள் புரிய வேண்டும்.

பாசுரம் - 1.10.4

**"உண்டாய் உறிமேல் நறுநெய் அமுதாக**
**கொண்டாய் குறளாய் நிலம் ஈரடியாலே**
**விண்தோய் சிகரத் திருவேங்கடம் மேய**
**அண்டா ! அடியேனுக்கு அருள் புரியாயே"**

திருவாய்ப் பாடியில் இடைச்சி மார்கள், உறிகளின் மேலே சேமித்து வைத்த வெண்ணெய், நெய், பால், தயிர் முதலானவற்றை எடுத்து உண்டு, கோபியர்களுக்கு மிகவும் எளியனாய் விளங்கினாய்.

இந்திரனுக்காக மாவலியிடம் சென்று மூவடி மண் யாசித்துப் பெற்று, ஈரடியால் மண்ணையும் விண்ணையும் அளந்து, மூன்றாவது அடியை மாவலியின் தலை மீது வைத்து, அவனைப் பாதாள உலகுக்கு அனுப்பியவனே !

இவ்வாறு தன்னைச் சரணம் அடைந்த இந்திரனுக்கும் கோகுல கோபியர்க்கும் எளியனாய் விளங்கியவனே ! இன்றும் திருவேங்கடத்தில் எளியனாய் எழுந்தருளி மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் காட்சி கொடுத்து அருள் சுரப்பதைப் போல அடியேனுக்கும் அருள் சுரக்க வேண்டும்.

குறிப்பு : முதலடியில் எளிமையையும், இரண்டாமடியில் மிக்க இறைநிலையாகிய பரத்துவத்தையும் , மூன்றாமடியில் எளிமையையும் மிக்க இறை நிலையையும், நான்காமடியில் பரிபூரணத்தையும் சொல்லி தனக்கு அருள்சுரக்குமாறு வேண்டுகிறார்.

பாசுரம் -1.10.5

**"தூணாய் அதனூடு அரியாய் வந்து தோன்றிப்**
**பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய் !**
**சேணார் திருவேங்கட மாமலை மேய**
**கோணா கணையாய் ! குறிக்கொள் எனை நீயே"**

ஐந்து வயது சிறுவனான பிரகலாதனுக்கு அருள் புரிவதற்காக, அவனை அவன் தந்தையின் கொடுமைகளிலிருந்து காப்பதற்காக, எங்குமுளன் கண்ணன் என்றும் தூணிலும் உளன் துரும்பிலும் உளன் என்றும், இரணியன் தூணைத்தட்டும் இடத்தில் தட்டும் அந்தக் கணமே தோன்றுவான் அரி என்றும் உறுதியாகவும் நம்பிக்கையாகவும் கூறிய பிரகலாதன் வாக்கை மெய்ப்பிக்க தூணில் நரசிங்கமாகத் தோன்றி, கொடியவனான இரணியனை அழித்து பிரகலாதனனுக்கு அருள்புரிந்தவனே !

அதைப் போல பக்தர்களின் எதிரிகளிடத்தில் சீற்றத்தையும் பக்தர்களிடத்தில் பாசத்தையும் காட்டக் கூடியவன் நீ. இன்று திருமலையில் திருவேங்கடவனாக எழுந்தருளியுள்ள எம்பெருமானே! மிகவும் கொடியவர்களையும் அடக்கி ஆளுகின்ற முறையில் அரவரசனான திரவனந்தாழ்வானை உனக்குப்

படுக்கையாகக் கொண்டவனே! அப்படியே அடியேனையும் நீயே திருத்திப் பணிகொண்டு அருள் புரிய வேண்டும்.

பாசுரம் - 1.10.6

**"மன்னா இம்மனிசப் பிறவியை நீக்கித்**
**தன்னாக்கித் தன் இன்னருள் செய்யும் தலைவன்**
**மின்னார் முகில் சேர் திருவேங்கடம் மேய**
**என்னானை என்னப்பன் என் நெஞ்சில் உளானே."**

இந்த மானிட உடல் நிலையற்றது. யாக்கை நிலையாமை, நேற்று இருந்தவன் இன்று இல்லையென்னும் நிலையையுடையது. மின்னலைப் போன்று நொடிப் பொழுதில் மறையக் கூடியது. தூங்கும் போது வாங்குகின்ற மூச்சு சுழி மாறிப் போகக் கூடியது. அதனால் தான் குலசேகராழ்வார் "**ஊனேறு செல்வத்து உடற்பிறவியான் வேண்டேன்**" என்றார்.

நிலைத்திருக்க முடியாத இந்த மானிடப் பிறவியைப் போக்கி தனதாக்கிக் கொண்டு , எனது நெஞ்சில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானே திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளான்.

' **"என்னிடை வந்த எம்பெருமான் இனி எங்கு போகின்றதே"**

என்ற பெரியாழ்வார் அருளிச் செயல் இங்கு நோக்கத்தக்கது. என் அப்பனாகவும் என் அண்ணனாகவும், என் தலைவனாகவும் என் மனதில் வீற்றிருக்கின்றான். நான் செய்த பேறே ! பெரும் பேறு.

பாசுரம் - 1.10.7

**"மானேய் மடநோக்கி திறத்து எதிர் வந்த
ஆனேழ் விடை செற்ற அணிவரைத் தோளா !
தேனே ! திருவேங்கட மாமலை மேய
கோனே ! என்மனம் குடிகொண் டிருந்தாயே."**

மானின் நோக்ககைப் போன்ற நோக்கையுடைய நப்பின்னை பிராட்டியை மணப்பதற்காக, அவளின் தந்தையின் ஒப்பந்தப் படி, ஏழு எருதுகைளயும் அடக்கிய பெரும் மிடுக்கும் வீரமும் உடையவனே ! நப்பின்னைக்கு இனியவனாயிருக்கும் நீ எனக்கும் தேன் போன்று இனியவனாய் இருக்கின்றாய். திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடவனே ! ஆகா ! என்னே உமது கருணையும் அருளும். நப்பின்னை பிராட்டியோடு என் நெஞ்சில் குடி கொண்டிருக்கின்றாய். என்னே யான் பெற்ற பேறு.

"திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்னும் நம்மாழ்வார் அருளிச் செயல் இங்கு நோக்கத்தக்கதாகும்.

பாசரம் - 1.10.8

**"சேயன் அணியன் என் சிந்தையுள் நின்ற
மாயன் மணிவாள் ஒளிவெண் தரளங்கள்
வேய்விண்டு உதிர் வேங்கட மாமலைமேய
ஆயனடி யல்லது மற்று அறியேனே."**

எம்பெருமானிடத்தில் பக்தி செலுத்தாதவர்களுக்கு கிடைத்தற்கரியவனாகவும், வெகுதூரதத்!ல் இருப்பவனாகவும் உள்ளான். திருமாலடியார்களுக்கு எளியவனாகி அவர்களுக்கு அருகில் இருப்பவனாகவும அவர்கள் உள்ளத்தில் நீங்காமல் குடி கொள்பவனாகவும் உள்ளான்.

"பத்துடை அடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன்" எனும் நம்மாழ்வர் திருவாக்கு இங்கு நோக்கத் தக்கது.

மூங்கில்கள் பிறந்து ஒளிபொருந்திய மணிகளையும், ஒளியும் வெண்ணிறமும் பொருந்திய முத்துக்களையும், உதிர்க்குமிடமான திருமலையிலே எழுந்தருளியிருக்கின்ற மிகவும் எளியவனான திருவேங்கடவன் திருவடிகளைத் தவிர வேறு ஒன்றும் அறிய மாட்டேன்.

"ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தேன்"

எனும் நம்மாழ்வார் திருவாக்கு இங்கு நோக்கத்தக்கது.

பாசுரம் - 1.10.9

"வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னி நின்றாய் !
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ !
சிந்தா மணியே ! திருவேங்கடம் மேய
எந்தாய் ! இனியான் உன்னை என்றும் விடேனே."

என்றும் ஒளி குறையாததும் அணையாததுமான சிறந்த ஒளிவிளக்காய் விளங்குபவனே! எங்களுடைய குறைகளைப்

போக்குகின்ற பரிபூர்ணமானவனே! சிந்தாமணி என்ற இரத்தினத்தைப் போன்று நினைத்த போதே யாம் வேண்டுவன வற்றையெல்லாம் அளிப்பவனே! மிகவும் இனிமையான திருமலையிலே எழுந்தருளியிருக்கும் திருவேங்கடவனே! பரமபதம், திருப்பாற்கடல் முதலான திருப்பதிகளை விட்டு விட்டு, இங்குவந்து அடியேன் மனத்தைத் தேடிப் பிடித்து புகுந்தாய்.

**"வடதடமும் வைகுந்தமும் மதின் துவராபதியும்**
**இடவகைகள் இகழ்ந்திட்டு என்பால் இடவகை**
**கொண்டனையே "**

எனும் பெரியாழ்வார் திருவாக்கு இங்கு நோக்கத்தக்கது.

அப்படி புகுந்த போதும் மன அழுக்குடைய என் மனத்தை வெறுத்து நீங்க நினைக்காமல் இவ்வாழ்வாரின் மனத்தைவிடச் சிறந்த இடம் வேறு இல்லை என்று என் நெஞ்சினில் நிரந்தரமாக இருக்கின்றீர். இப்படியும் ஒரு கருணையுண்டோ ! என்னே உமது அருள்.

பாசுரம் - 1.10.10

**"வில்லார் மலிவேங்கட மாமலை மேய**
**மல்லார் திரள்தோள் மணிவண்ணன் அம்மானைக்**
**கல்லார் திரள்தோள் கலியன் சொன்ன மாலை**
**வல்லார் அவர் வானவர் ஆகுவர் தாமே"**

குகப்பெருமான் வழித்தோன்றல்களாகிய வேடுவர்கள், இத்திருவேங்கடமலையில் யாரால் என்ன தீங்குநேருமோ? என்று அஞ்சி, அவனைக்காக்க

எப்போதும் ஏறிட்ட வில்லும் கையுமாக இருப்பர். அத்தகைய திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கும் வலிமை மிக்க திரண்ட தோள்களை உடைய மணிவண்ணனாகிய திருவேங்கடவனைக் குறித்து, மலைபோன்ற திருத்தோள்களையுடைய திருமங்கை யாழ்வார் அருளிச் செய்த இத்திருமொழியைப் பாட வல்லவர்கள் வைகுந்தத்திலே நித்ய சூரிகளுடன் சேர்ந்து, தினமும் பகவத் குணானுபவம் பண்ணும் பேற்றைப்பெறுவர்.

குறிப்பு : குகப்பெருமான் இராமபிரானுக்கு கங்கைக்கரையிலே குடில் அமைத்து இரவு தங்க வசதி செய்தான். அன்று இரவு இலக்குமணப்பெருமாள் வில்லும் அம்புமாக அக்குடிலை சுற்றிச் சுற்றி காவல் புரிந்தார். அதைப்போலவே குகப்பெருமான் வழித்தோன்றல்களான திருவேங்கட மலை வாழ் வேடர்களும் திருவேங்கடவனுக்குக் காவல் புரிந்தனர் என்பது வியக்கத் தக்க செய்தியாகும்.

## இரண்டாம் பத்து - ஒன்றாம் திருமொழி

இத்திருமொழியில் பேற்றுக்கும் இழப்புக்கும் மனம்தான் காரணமாதலால், தீய வற்றில் செல்லாமல் எம்பெருமான் பற்றிய பகவத் தொண்டில் சென்று சென்றதே என்று உவந்து தமது உள்ளத்தினைக் கொண்டாடுகின்றார். திருவேங்கடமுடையானுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே என்று பாசுரந்தோறும் இப்படித் தமது மனத்தை புகழ்ந்துபேசும் முறையில் திருவேங்கடவனுக்கு இனியராகின்றார்.

பாசுரம் - 2.1.1

**"வானவர் தங்கள் சிந்தைபோல என் நெஞ்சமே !**
**இனிதுவந்து மாதவ**
**மானவர் தங்கள் சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை**
**கானவர் இடும் காரகில்புகை ஓங்குவேங்கடம்**
**மேவிமாண்**
**குறளான அந்தணற்கு இன்றுஅடிமைத் தொழில்**
**பூண்டாயே!"**

என்னுடைய மனமே ! மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் திருவுள்ளத்திலே தினமும் கோயில் கொண்டிருப்பவனும் வேடர்கள் உணவு தயாரிக்கப் பயன்படுத்தும் அகில் மரங்கள் எரிக்கப்படுவதால் உண்டாகும் புகை எங்கும் நறுமணம் கமழ்கின்ற திருவேங்கடமலையில் தினமும் வசிக்கின்றவனும் வாமனனாக அவதரித்தவனுமாகிய எம்பெருமானுக்கு வைகுண்டத்திலுள்ள நித்ய சூரிகளின் உள்ளத்தைப் போல் நீயும் நன்றாக உவந்து பகவத் தொண்டை ஏற்றுக் கொண்டாயே! என்னே நீ பெற்ற பேறு.

பாசுரம் - 2.1.2

**"உறவு சுற்றமென்று ஒன்றிலா ஒருவன் உகந்து அவர்**
**தம்மை மண்மிசைப்**
**பிறவியே கெடுப்பான் அதுகண்டு என்**
**நெஞ்சமென்பாய் !**
**குறவர் மாதர்களோடு வண்டு குறிஞ்சி**
**மருளிசைபாடும் வேங்கடத்து**
**அறவனாயகற்கு இன்று அடிமைத்தொழில்**
**பூண்டாயே. "**

என்னுடைய உள்ளமே ! நாம் தாய், தந்தை, உறவினர்கள் என்றும் சில பந்துக்களைக் கற்பித்துக் கொண்டு, அவர்களுக்கு நன்மை செய்கின்றோம், சிலரை விரோதிகள் என்று கற்பித்துக் கொண்டு அவர்களுக்குத் தீமை செய்து வருகின்றோம். ஆனால் எம்பெருமானோ! அப்படியில்லாமல் எல்லாரிடத்திலும் அன்புடையவனாகவே இருக்கின்றான். தான் விரும்பியவர்களை மண்ணுலக வாழ்விலிருந்து களைந்தெடுத்து வைகுந்தவாசிகள் குழுவிலே நிறுத்துகின்றான். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய குணநலன்களைக் கண்டறிந்து அவனுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே! வண்டுகளும் குறத்திகளும் குறிஞ்சி முதலிய பண்களைப் பாடுகின்ற இனிய திருமலையிலே எளியனாய் வந்து வசிக்கின்றான். என்னே அவனுடைய எளிமையும் பாசமும்.

பாசுரம் - 2.1.3

**"இண்டையாயின கொண்டு தொண்டர்களேத்துவார்**
**உறவோடும் வானிடைக்**
**கொண்டு போயிடவும் அது கண்டு என் நெஞ்ச**
**மென்பாய் !**
**வண்டு வாழ் வடவேங்கட மலை கோயில்**
**கொண்டதனோடும் மீமிசை**
**அண்டம் ஆண்டிருப்பாற்கு அடிமைத் தொழில்**
**பூண்டாயே."**

அடியேன் அன்பு பொருந்திய உள்ளமே ! வண்டுகள் களிப்புடன் வாழும் வடதிருவேங்கடமலையைத் திருக்கோயிலாகக் கொண்டு ஆள்வதைப் போலவே பரமபதத்தையும்

ஆண்டு கொண்டு மண்ணுலகம் - விண்ணுலகம் இரண்டுக்கும் தலைவனாக விளங்குகின்றான் எம்பெருமான். அவனது நித்ய கல்யாண குணங்களை நன்குணர்ந்து அடிமைக்குத் தொழில் பூண்டாயே ! நீ பெற்ற பேறு பெரும் பேறு ஆகும். சிறந்த மலர்மாலையை எடுத்துக் கொண்டு சென்று திருவேங்கடவனுக்கு அணிவித்து, வணங்கி, வழிபடும் திருமாலடியார்களையும், அவர்களோடு தொடர்புடைய அனைவரையும் இம்மண்ணுலகினின்றும் கொண்டு சென்று பரமபதத்திலே சேர்ப்பவன் எம்பெருமான் என்று உணர்ந்தாயே ! அது பெறலரும் பேறாகும்.

பாசுரம் - 2.1.4

"பாவியாது செய்தாய் என் நெஞ்சமே ! பண்டு
தொண்டு செய்தாரை மண்மிசை
மேவி ஆட்கொண்டு போய் விசும் பேற வைக்கும்
எந்தை
கோவி நாயகன் கொண்டலும் துயர் வேங்கட
மலையாண்டு வானவர்
ஆவியாயிருப்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே"

என் உள்ளமே! நீ அலைபாய்ந்து தடுமாறாமல் உடனே கைங்கர்யத்தில் ஈடுபட்டாயே ! பக்தர்களிடத்தில் பலவிதமான தொண்டுகளை ஏற்றுக் கொள்வதற்காக இம்மண்ணுலகில் வந்து அவதரித்து, அப்போதும் நிறைவு பெறாமல், இன்னமும் அப்பக்தர்களிடத்தில் தினமும் தொண்டுகளைப் பெற வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி, அவர்களைத் திருநாட்டிலே கொண்டு சேர்க்கும் கோபால கிருஷ்ணனாய் அவதரித்தவன் திருவேங்கடமுடையான்.

இத்திருவேங்கடவனுக்கு எந்த காலத்திலும், எல்லாத்துன்பங்களிலும் தினமும் தொண்டு செய்யும் படியான பேற்றைப் பெற்ற மனமே! என்னே நீ அடைந்த பேறு.

பாசுரம் - 2.1.5

**"பொங்கு போதியும் பிண்டியும் முடைப் புத்தர்**
**நோன்பியர் பள்ளியுள் உறை**
**தங்கள் தேவரும் தாங்களுமேயாக என்நெஞ்ச**
**மென்பாய்**
**எங்கும் வானவர் தானவர் நிறைந்தேத்தும் வேங்கடம்**
**மேவி நின்றருள்**
**அங்கணாயகற்கு இன்று அடிமைத் தொழில்**
**பூண்டாயே !**

அன்புடைய எனது நெஞ்சமே! அரசமரத்தடியை இருப்பிடமாக உடைய தேவதையை வணங்கும் ஜைன மதத்தில் பிறந்தோ அல்லது புகுந்தோ பாழாய்ப் போகாமல் இருக்கின்றாய். அற்ப பலன்களைக் கொடுக்கக் கூடிய அம்மதங்களாகிய மரங்கள் கிளைகளும் கப்புமாக அறியாமை மிகுந்துள்ள இவ்வுலகில் வளர்ந்துள்ளன. ஆனால் அவற்றின் பக்கம் செல்லாமல், மண்ணோர்க்கும் ஒருங்கே காட்சி கொடுத்து அருள் சுரந்து கொண்டிருக்கும் திருவேங்கடமுடையானுக்குத் தொண்டுசெய்து கொண்டிருக்கும் நீயல்லவா பெரும் பேறு பெற்ற பாக்கிய சாலி.

பாசுரம் - 2.1.6

"துவரியாடையர் மட்டையர் சமண் தொண்டர்கள்
மண்டியுண்டு பின்னரும்
தமரும் தாங்களுமே தடிக்க என் நெஞ்ச மென்பாய் !
கவரி மான் கணம் சேரும் வேங்கடம் கோயில்
கொண்ட கண்ணார் விசும்பிடை
அமர நாயகற்கு இன்று அடிமைத்தொழில்
பூண்டாயே"

எனது விருப்பமான உள்ளமே! இடையிலே துவர் ஆடையை உடுத்தி, தலை முடிகளைப் பிடுங்கி எறிந்து மொட்டைத் தலையராய் இருக்கும், சமணர்கள், மனம்போனபடி உணவுகளை உட்கொண்டு,மேலும் அவர்களும், அவர்களைச் சார்ந்தவர்களும், உடல் தடித்துக் கிடக்க, நீயும் அவர்களைப் போல, உண்டு உடல் பெருக்க நினைக்காமல் உள்ளாய். கவரிமான்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்திருக்கப் பெற்ற திருமலையைக் கோயிலாகக் கொண்டவனும், பரமபதத்திலே நித்ய சூரிகளுக்கத் தலைவனுமான எம்பெருமான் ஸ்ரீ மந் நாராயணனுக்கு இன்று அடிமைத் தொழில் செய்து வருகின்றாயே! நீயே பெரும் பாக்கிய சாலி.

பாசரம் - 2.1.7

"தருக்கினால் சமண் செய்து சோறு தண்தயிரினால்
திரளை மிடற்றிடை வானிடை
நெருக்குவார் அலக்கண் அதுகண்டு என்நெஞ்ச
மென்பாய் !
மருட்கள் வண்டுகள் பாடும் வேங்கடம் கோயில்
கொண்டதனோடும் வானிடை
அருக்கன் மேவிநிற்பார்க்கு அடிமைத்தொழில்
பூண்டாயே"

தமது சமண மதத்தைப் பற்றி வாதித்துக் கொண்டு, பாமரமக்களை மயக்கிக் கொண்டு, கட்டித் தயிரோடு கூடிய பெருஞ்சோற்றை மிகுந்த அளவில் உண்டு கொண்டு வாழ்வர் சமணர்கள். அதனால் அவர்களும் சொல்லோணாத் துன்பத்தை அடைவார்கள்,. அவ்வாறு உடலை வளப்பதால் தலைமுடி அதிகமாக வளர்ந்து, அதில் பேன்பூச்சிகளும் சேரும். அவற்றைக் கொல்லக்கூடிய உயிர்க்கொலைக்கு அஞ்சி தலையில் உள்ள முடிகளையெல்லாம் பிடுங்கி எடுத்துவிடுவர். உள்ளமே! அத்தகைய மதத்தில் நீ சேராமல் இருக்கின்றாயே அதுவே மிகவும் நன்று. மிக்க இனிமையான தேன்துளிகளை உடைய மலர்களில் உள்ள தேனை உண்டு , களித்து, பாடித் திரியும் வண்டுகள் வாழும் மலை திருவேங்கட மலை. சூரிய மண்டலத்திலும், இத்திருவேங்கட மலையிலும் எழுந்தருளி வாழும் ஸ்ரீ மந் நாராயணனுக்குத் தொண்டு செய்கின்றாயே! என்னே உனது நுண்ணறிவு ! என்னே உன் பேறு!

பாசுரம் - 2.1.8

**"சேயன் அணியன் சிறியன் பெரியன் என்பதும் சிலர்**
**பேசக் கேட்டிருந்தே**
**என் நெஞ்ச மென்பாய் ! எனக்கு ஒன்று சொல்லாதே**
**வேய்கள் நின்று வெண்முத்தமே சொரி வேங்கட**
**மலை கோயில் மேவிய**
**ஆயர் நாயகற்கு இன்று அடிமைத் தொழில்**
**பூண்டாயே"**

பரமபதத்திலே எழுந்தருளியுள்ள பரமபத நாதனை வணங்கலாம் என்றால் அவனோ வெகு தொலைவில் நாம் சென்று வணங்கமுடியாமல் உள்ளான் என்பர் சிலர். நாம் அனைவரும் எளிதில் வணங்கி வழிபடும் படி, மிக எளியனாய் கோயில் கொண்டு அர்ச்சை நிலையில் எழுந்தருளியிருப்பவனை வணங்குங்கள் என்பர் சிலர். அர்ச்சாவதாரக் கண்ணனை வணங்கலாம் என்றால், அவனோ வலக்கைக்கும் இடக்கைக்கும் வேறுபாடு தெரியாத அறிவொன்று மில்லாத ஆயர்குலத்தில் பிறந்தவன் என்கின்றனர் சிலர். திருப்பாற்கடலில் எழுந்தருளியுள்ள ஷீராப்தி நாதனை வணங்கலாம் என்றால். அங்கு நம்மால் செல்லமுடியாதே? அவனை எப்படி வணங்குவது என்பர் சிலர்.

எங்கும் எதிலும் எள்ளுக்குள் எண்ணெய் போலும், கரந்த பாலில் நெய்யே போலும், உடல் மிசை உயிரே போலும் நிறைந்துள்ள அந்தர்யாமியை வணங்கலாம் என்றால், கண்ணுக்குத் தெரியாதவனை எப்படித் தொழ முடியும் என்பர் சிலர்.மனமே ! இப்படி மனம் போனபடி வாய்க்கு வந்த படி பேசிக் கொண்டு இருக்கும் மக்களின் கூட்டத்தில் சேராமல் இருக்கும் நீ, என்னிடமும் ஒரு வார்த்தையும் சொல்லாமல் திடீரென்று திருவேங்கடம் சென்று, அவன் திருவடிகளில் அடிமைத் தொழில் செய்து வருகின்றாயே ! நீ பெற்ற இப்பேறு வேறு யாரால் பெற இயலும். நீயே பெறும் பேறு பெற்றுள்ளாய்.

பாசுரம் - 2.1.9

**"கூடியாடி உரைத்ததே உரைத்தாய் என்**
**நெஞ்சமென்பாய்! துணிந்து கேள்**
**பாடியாடிப் பலரும் பணிந்தேத்திக் காண்கிலர்**
**ஆடு தாமரையோனும் ஈசனும் அமரர் கோனும்**
**நின்றேத்தும் வேங்கடத்து**
**ஆடு கூத்தனுக்கு இன்று அடிமைத் தொழில்**
**பூண்டாயே."**

என் நல்ல உள்ளமே! நீ இதற்கு முன்பெல்லாம் உலகத்தாரோடு கூடியிருந்து, அவர்களைப் போலவே அவர்கள் பேசும் பேச்சுக்களையே பேசியும் தாழ்ந்த நிலையில் இருந்தாய். இப்ப டியிருந்த நீ இன்று திடீரென எப்படிப் பட்ட உயர்ந்த நிலைக்கு வந்து விட்டாய். உன் உயர்ந்த நிலையை நீ அறிய வில்லை. யான் கூறுகின்றேன் கேள். பலரும் வணங்கி, வழி பட்டு நின்றாலும் காண முடியாதவனும்; சிவன், நான்முகன், இந்திரன் முதலான தெய்வங்களால் போற்றி வழிபடப்பட்டவனும் ஆன திருவேங்கடவன் திருவடிகளிலே அடிமைத் தொழில் செய்த மனமே! நீ பெற்ற பேறே பெரும் பேறாகும்.

பாசுரம் - 2.1.10

**"மின்னுமாமுகில் மேவும்தண் திருவேங்கட மலை**
**கோயில் மேவிய**
**அன்னமாய் நிகழ்ந்த அமரர் பெருமானை**
**கன்னிமா மதிள் மங்கையர் கவிகன்றி இன்தமிழால்**
**உரைத்த இம்**
**மன்னு பாடல் வல்லார்க்கு இடமாகும்**
**வானுலகே."**

மின்னும் காளமேகங்கள் படிந்திருப்பதனால் மிகவும் குளிர்ந்தும் இனிமையாகவும் இருக்கும் திருவேங்கட மலையைத் தன் வாழுமிடமாகக் கொண்டவனும், அன்னமாய் அவதரித்த பிரமனுக்கு வேதங்களை மீட்டுக் கொடுத்தவனும் ஆகிய திருவேங்கடவனைப் புகழ்ந்து திருமங்கையாழ்வார் இனிய தமிழில் அருளிச் செய்த இத்திருமொழியைப் பாட வல்லவர்கள் பரமபதம் சென்று அடைவார்கள்.

பாசுரம் - 4.3.8

**"அன்றிய வாணன் ஆயிரம் தோளும்**
**துணிய அன்று ஆழி தொட்டானை**
**மின் திகழ் குடுமி வேங்கட மலைமேல்**
**மேவிய வேத நல்விளக்கை**
**தென்திசைத் திலதம் அனையவர் நாங்கைச்**
**செம்பொன் செய் கோயிலினுள்ளே**
**மன்றது பொலிய மகிழ்ந்து நின்றானை**
**வணங்கி நான் வாழ்ந் தொழிந்தேனே."**

கண்ணனது பேரனாகிய அநிருத்தன் பாணாசூரனுடைய பெண்ணாகிய உஷையுடன் காதல் வயப்பட்டான். அவள் தன் தோழியின் உதவியால் அநிருத்தனைத் தன் அரண்மனைக்குத் தூக்கி வரச் செய்து இன்பம் அனுபவித்து வந்தாள். இச்செய்தி அறிந்த கண்ணன் அநிருத்தனை மீட்க படையெடுத்து வந்தான். பாணாசுரனுக்கு சிவன் படைகள் உதவி செய்தன. கண்ணன் அவர்களைத் துரத்தி விட்டு, பாணாசுரன் முன் தோன்றி, அவனது ஆயிரம் தோள்களைத் துணிவித்தான். பின்னர் அநிருத்தனது திருமணத்தைச் சிறப்பாக நடத்தினான் கண்ணபிரான்.

அக்கண்ணபிரானே, உலகத்துக்கெல்லாம் திலகமாய் நின்ற திருவேங்கட மலையில் மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் காட்சியளித்து அருள் புரிய எழுந்தருளியுள்ளான் எம்பெருமான். வேதங்களால் காணக்கூடிய நல்ல விளக்காக விளங்குகின்றான். தென் திசைக்குத் திலகம் போன்றதும் மகான்கள் வாழ்கின்றதும் ஸ்ரீ வைணவர்கள் அருளிச் செயலை ஓதிக்கொண்டிருப்பதும் ஆகிய திருநாகைப் பட்டினத்தில் சௌந்தர்ய வல்லிச் சமேத சௌந்தர்ய ராஜனாக எழுந்தருளியுள்ள எம்பெருமானைத் திருவேங்கடத்தில் திருவேங்கடவனாகக் கண்டுகளித்து வணங்கி வழிபட்டு உய்யப் பெற்றேன்.

பாசுரம் - 4.7.5

"வேடார் திருவேங்கடம் மேய விளக்கே !
நாடார் புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்
சேடார் பொழில் சூழ் திருவெள்ளக் குளத்தாய் !
பாடா வருவேன் வினையாயின பாற்றே."

ஒரு நாளும் எம்பெருமானை விட்டுப் பிரியாமல் திருவேங்கடவனுக்கு பாதுகாவலராய் விளங்கும் ஸ்ரீ குகப் பெருமான் போன்ற வேடர்கள் மிகுந்து வாழும் திருவேங்கட மலையில் குன்றின் மீதிட்ட விளக்கு நாற்புறமும் உள்ள இருளைப் போக்கி, ஒளிவீசுவதைப் போல் உலகில் உள்ள மக்களின் அறியாமையாகிய இருளைப் போக்கி, ஞானமாகிய நல்வழி காட்டும் ஒளிவிளக்காய் எழுந்தருளியுள்ளான் எம்பெருமாள் ஸ்ரீ மந் நாராயணன்.

அவனே, நாடெங்கும் நிறைந்த புகழையுடையவரான அந்தணர்கள் வாழ்கின்ற

திருநாங்கூரில், திரண்ட சோலைகளால் சூழப்பட்ட திருவெள்ளக் குளம் என்னும் திருப்பதியில் உவந்து, பூவார் திருமகள் உடனுறை கண்ண நாராயணனாக எழுந்தருளியுள்ள திருவேங்கடவனே. அத்தகைய சிறப்பு வாய்ந்த உன் திருக்கல்யாண குணங்களின் பெருமையை எப்போதும் பாடிக் கொண்டு திரியும் அடியேனது தீவினைகளை யெல்லாம் தீக்கிரையாக்கி, அடியேனைக் காத்தருள வேண்டும்.

பாசுரம் - 5.3.4

**"வாம்பரியுக மன்னர்தம் உயிர்செக ஐவர்கட்கு அரசளித்த**
**காம்பினார் திருவேங்கடப் பொருப்ப ! நின்காதலை அருள் எனக்கு**
**மாம்பொழில் தளிர்கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பெய்த**
**தீம்பலங்கனித் தேனது நுகர் திருவெள்ளறை நின்றானே!"**

இனிய மாந்தோப்புகளில் இளந்தளிர்களை கொத்தி உண்ட அழகிய குயில்கள், தமது வாய் துவர்ப் பெய்த, அத்துவர்ப்பை நீக்க, இனிமையான பலாப் பழங்களின் தேனைப் பருகிக் களிக்கும். அவ்வின்பத்திற்குப் போக்கு வீடாக ஐவகை இசையில் பாடும், குயில்கள் வாழும் திருவெள்ளறைத் திருப்பதியில் பங்கயச் செல்வி உடனுறை புண்டரீ காட்சனாக எழுந்தருளியுள்ளீர். என் இனிய திருவேங்கடவனே! பஞ்ச பாண்டவர்க்கு அருள் செய்ய வேண்டி படாத துன்பங்களைப் பட்டீர். பாரதப் போரில் மேல் விழுந்து வருகின்ற குதிரைகள்

மாளும்படியாகச், செய்து, ஐவர்கட்கு அரசை அளித்தாய். உனது அடிமையிலே எனக்கு ருசியை விளைவித்து என்னிடம் அடிமை பெற்றுக் கொள்ள வேண்டும். இதனையல்லவா? அடியேன் உம்மிடம் வேண்டுவது.

"குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது"

எனும் ஆண்டாளின் அருளிச் செயல் இங்கு நோக்கத் தக்கதாகும்.

ஐயோ ! என்மகள் திருவரங்கன் பால் காதல் கொண்டு பித்தம் பிடித்தாற் போல் கிடக்கின்றாள். சிறிதும் அஞ்சாமல் வேங்கடமே ! வேங்கடமே ! என்று வாய் பிதற்றுகின்றாள். எனது மடியில் கொஞ்சமும் பொருந்தியிருக்கவில்லை. வாள் போன்ற நீண்ட கண்களிலே உறக்கத்தை மறந்து விட்டாள். ஐயோ! நான் என்ன செய்வேன் ? என்ன சொல்வேன் ?

பாசுரம் - 5.5.1

"வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே !
வேங்கடமே ! என்கின்றாளால்
மருவாளால் என்குடங்கால் வாள் நெடுங்கண்
துயில் மறந்தாள் வண்டார் கொண்ட
லுருவாளன் வானவர்தம் உயிராளன்
ஒலிதிரை நீர்ப் பெளவம் கொண்ட
திருவாளன் என்மகளைச் செய்தனகள்
எங்ஙனம் நான் சிந்திக் கேனே ? "

இப்பாசுரத்தில் பரகால நாயகியைப் பெற்றெடுத்த திருத் தாயார், தன் மகள் திருவரங்கனிடம் காதல் கொண்டு, பித்தேறிக் கிடக்கும் நிலையைப் பேசி, எம்பெருமான் இவளை இப்பாடு படுத்தினானே, என்று சொல்லுகின்றாள். வண்டுகள் போலவும், பூர்ண மேகம் போலவும் விரும்பத் தக்க திருமேனியை உடையவனும் நித்ய சூரிகளுக்கு உயிராய் இருப்பவனும் மிகுந்த ஒலியோடு கூடிய பேரலைகளோடு பொருந்திய பாற்கடலைக் கடைந்த போது தோன்றிய திருமகளை மனைவியாகக் கொண்ட எம்பெருமான், எனது மகள் பால் செய்த செயல்களை நான் நினைக்கவும் முடியுமோ? முடியாது. அவன் கொஞ்சமாவது ஈரமும் இரக்கமும் இல்லாமல் என்ன பாடு படுத்திக் கொண்டிருக்கின்றான். ஐயோ ! என் மகள் திருவரங்கன் பால் காதல் கொண்டு பித்தம் பிடித்தாற் போல கிடக்கின்றாள். சிறிதும அஞ்சாமல் வேங்கடமே ! வேங்கடமே ! என்று வாய் பிதற்றுகின்றாள். எனது மடியில் கொஞ்சமும் பொருந்தியிருக்கவில்லை. வாள் போன்ற நீண்ட கண்களிலே உறக்கத்தை மறந்து விட்டாள். ஐயோ ! நான் என்ன செய்வேன் ? என்ன சொல்வேன்?

பாசுரம் - 5.6.7

**"சிந்தனையைத் தவநெறியைத் திருமாலை, பிரியாது**
**வந்துஎன் மனத்துஇருந்த வடமலையை வரிவண்டார்**
**கொந்தணைந்த பொழிற்கோவல் உலகளப்பான்**
**அடிநிமிர்த்த**
**அந்தணனை யான்கண்டது அணிநீர்த்**
**தென்னரங்கத்தே"**

எக்காலமும், குற்றமற்ற அடிமை செய்வதற்குத் தகுதியானவன் திருவேங்கடவன், முழுமனதுடன் , தொண்டாகிய அரசாட்சியைப் பெறச் செய்யும் உபாயமானவனும் அவனே. திருமகளின் தனிக்கேள்வனும், மிகவும் இனிமையான திருவேங்கட மலைக்கு நாயகனும் அவனே. திருவேங்கடத்திலிருந்து வந்து அடியேனது மனதில் ஒரு நொடிப் பொழுதும் விட்டுப் பிரியாமல் இருப்பவனும் அவனே.

அழகிய வண்டுகள் அமர்ந்து தேனையுண்ணும் பூங்கொத்துகள் நெருங்கியுள்ள சோலைகளையுடைய திருக்கோவலூரில் ஓங்கி உலகளந்த உத்தமனாக எழுந்தருளி காட்சி தருபவனை, புனிதத் துறைகள்பொருந்திய திருவரங்கத்தில் நான் கண்டு கொண்டேன். பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மந் நாராயணன் மீன் முதலாக கண்ணன் வரை ஒன்பது அவதாரங்களை எடுத்து திருமலையிலும், திருக்கோவலூரிலும், திருவரங்கம் பெரிய கோயிலிலும் எழுந்தருளி உள்ள எம்பெருமானே ஆழ்வார் நெஞ்சினில் ஒரு கண நேரமும் பிரியாமல் எழுந்தருளியுள்ளான்.

பாசுரம் - 6.8.1

**"மான்கொண்ட தோல்மார்வின் மாணியாய் மாவலிமண்**
**தான்கொண்டு தாளால் அளந்த பெருமானை**
**தேன்கொண்ட சாரல் திருவேங் கடத்தானை**
**நான்சென்று நாடி நறையூரில் கண்டேனே "**

அகலகில்லேன் இறையும் என்று அவர்மேல் மங்கை, ஸ்ரீ மந் நாராயணனின் திருமார்பில் வாழ்ந்து கொண்டிருக்கின்றாள். மாவலியின் தவத்தைத் தடுத்து நிறுத்த, வாமனனாய் மாவலியின் யாக சாலைக்குச் செல்லும் போது, தன் மார்பிலுள்ள திருமகளை மான்தோலால் மூடிக்கொண்டு சென்றான். மாவலியிடம் மூவடி மண்வேண்டி மண்ணுலகையும் விண்ணுலகையும் மூவுலகங்களையும் அளந்தான். அத் திரிவிக்கிரமனை அன்று கண்டு வணங்க முடியாதவர்களுக்கு வாய்ப்பளிக்க விரும்பி, இன்று கண்டு, வணங்கி, வழிபட்டு, உய்யும் வண்ணம் அர்ச்சை நிலையில் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளான். திருவேங்கடம் செல்ல சக்தியில்லாதவர்களும் வணங்கி வழிபடும் படி மிகவும் எளியனாய் திருநறையூரிலே நம்பிக்கை நாச்சியார் சமேத நம்பி மூர்த்தியாக எழுந்தருளி காட்சி தருகின்றான். என்னப்பன். எம்பெருமான் பரம காருண்யன். அன்று நான் பிறந்திலேன் இன்று பிறந்த பின் மறந்திலேன் என்னும்படி அவனை இன்று கண்ணாரக் கண்டு களிக்கப் பெற்றேன். யான் பெற்ற பேறு பெரும் பேறு. நான் நல்வினைப் பயனை அடைந்தேன்.

குறிப்பு :

**1. மான் கொண்ட தோல் மார்பின்**

அகலகில் லேன் இறையுமென்று அவர்மேல் மங்கையாகிய திருமகள் வெளிப்படையாகக் காட்சியளிக்கும் படிச் சென்றால் தானம் கிடைக்காது என்று, மான் தோலால் தன் மார்பகத்தை மறைத்துக் கொண்டு சென்று தானம் கேட்டான் என்பது மாயச் செயல்

**2. தாளால் அளந்த...... திருவேங்கடத்தானை**

அன்று ஞாலம் அளந்த பிரான் - பரன் சென்று சேர் திருவேங்கடமாலை என்னும் ஸ்ரீ நம்மாழ்வார் பாசுரத்தை அடியொற்றி அருளிச்செய்தார் போலும்

**3. நான் சென்று நாடி**

நீண்ட தொலைவிலுள்ள திருவேங்கடத்தை அடைய பயணம் செல்ல வேண்டாத படி , தாகம் எடுத்த போதே எடுத்த இடத்திலே நீர் அருந்தி தாகம் தீர்த்துக் கொள்வதைப் போலே அருகிருந்த திருநறையூரிலே கண்டு சேவிக்கப் பெற்றேன் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம் - 7.3.5

**"ஆங்கு வெந்நரகத்து அழுந்தும் போது**
**அஞ்சேலென்று அடியேனை அங்கே வந்து**
**தாங்கு தாமரையன்ன பொன்னார் அடி**
**எம்பிரானை உம்பர்க்கு அணியாய் நின்ற**
**திருவேங்கடத்து அரியைப் பரிகீறியை**
**வெண்ணெய் உண்டு உரலினிடை யாப்புண்ட**
**தீங்கரும்பினைத் தேனை நன்பாலினையன்றி**
**என்மனம் சிந்தை செய்யாதே"**

பலவகையாலும் பலவகைப்பட்ட, பற்பல பாவங்களைச் செய்து, அவற்றின் பலனான மிகக்கொடிய நரக தண்டனைகளைத் துய்த்துக் கொண்டிருந்தேன். அப்படி அநுபவிக்கும் சமயத்தில், பரம கருணையோடு அங்கே எழுந்தருளி, நான் இருக்க நீ பாவங்களுக்காக பயப்படாதே என்று சொல்லி, அடியேனைப் பாதுகாத்து அருளுகின்ற, தாமரை

போன்று அழகான திருவடிகளையுடையவன் எம்பெருமான். எனக்கு மிகவும் உதவிபுரிப்வனாகவும், மேல் உலகங்களுக்கெல்லாம் அலங்காரமாயிருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய திருவேங்கட மலையிலே சீரிய சிங்கம் போல எழுந்தருளியிருக்கின்றான்.

கம்சனால் ஏவப்பட்ட குதிரை வடிவில் வந்த கேசி என்னும் அசுரன் வாயைக் கிழித்துத் தெறிந்தவனும் வெண்ணையைக் களவாடி உண்டு, உரலோடு கட்டுண்டிருந்தவனும் இனிமையான கருப்பஞ்சாறு போன்றவனும் தேன் போல மிகவும் இனிமையானவனும் இனிய பால் போன்றவனுமாகிய ஶ்ரீ மந் நாராயணன் திருநறையூரில் நம்பிமூர்த்தியாக பல திருக்கல்யாண குணங்களுடைய பரிபூரணனாய் எழுந்தருளியிருக்கின்றான். அவனைத் தவிர வேறு ஒரு தெய்வத்தை என் மனம் துளிகூட நாடாது. மறந்தும் புறந்தொழா மனத்தினராக விளங்கினார் ஆழ்வார் என்பது புலனாகின்றது.

பாசுரம் - 7.10.3

**"எங்களுக்கு அருள்செய்கின்ற ஈசனை**
**வாச வார்குழலாள் மலைமங்கை தன்**
**பங்கனைப் பங்கில் வைத்து உகந்தான் தன்னைப்**
**பான்மையைப் பனி மாமதியம் தவழ்**
**மங்குலைச் சுடரை வட மாமலை**
**உச்சியை நச்சி நாம் வணங்கப்படும்**
**கங்குலைப் பகலைச் சென்று நாடிக்**
**கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே "**

வேறு புகல் அற்ற அடியேன் பால் அருள் பொழிகின்ற எம்பெருமான் அடியோங்களைப் போலன்றி, நறுமணம் கமழும் பூங்குழலாளியாகிய மலைமங்கை பார்வதியைத் தனது பாதிபாகத்தில் வைத்துக் கொண்டு, விரும்பியிருக்கும் சிவபெருமானுக்குத் தன் திருமேனியில் ஒருபுறத்தில் இடங்கொடுத்து மகிழ்ந்திருக்கும் உயர்ந்த ஒழுக்கச் சீலனாக விளங்குகின்றான் எம்பெருமான். இச்சீலத்தை ஒரு பொழுது மட்டுமின்றி, எப்பொழுதும் இயல்பாகவே கொண்டுள்ளான். குளிர்ந்த ஒளிவீசும் சந்திரன் உலாவும் விண்ணாக விளங்குபனும் கதிரவனின் உள்ளிருப்பவனுமாக விளங்குகின்றான். வடதிருவேங்கட மலைக்கு திருவாபரணமாக விளங்குகின்றான். நம்மால் விரும்பி வணங்கப் படுகின்றான். இரவும் பகலுமாக விளங்கும் ஸ்ரீ மந்நாராயணன் திருக்கண்ண மங்கையில் திருமஞ்சன (அபிஷேக) வல்லி உடனுறை பக்த வச்சலனாக எழுந்தருளியுள்ளான். அவனைக் கண்டு வணங்கப் பெற்றேன்.

பாசுரம் - 8.2.3

"அருவிசோர் வேங்கடம் நீர்மலை யென்று வாய்
வெருவினாள் மெய்யம் வினவி யிருக்கின்றாள்
பெருகு சீர்க் கண்ணபுரம் என்று பேசினாள்
உருகினாள் உள் மெலிந்தாள் இது என்கொலோ ? "

பரகால நாயகியின் நிலைமையைக் கண்ட அவளது திருத்தாயார் திருக் கண்ணபுரத் தெம்பெருமானையே நேராக நோக்கித் தன் பரிதாபத்தைப் பேசுகிறாள். அதுமட்டுமல்லாமல்

தன்னைத்தானே நொந்து கொண்டு பேசுவதாக இப்பாசுரம் தாய்ப் பாசுரமாக அமைந்துள்ளது.

இப்பரகால நாயகியாகிய என் மகளை நோக்கி, நான் ஏதேனும் இனிமையாகச் சொன்னாலும், அதனை இவள் காதுகளால் கேட்பதில்லை. அதற்கு மறுமொழியும் கூறுவதில்லை. எப்பொழுதும், அருவிகள் பாய்கின்ற திருவேங்கட மென்றும் திருநீர் மலையென்றும் வாய் பிதற்றிக்கொண்டே இருக்கின்றாள். சில சமயங்களில் திருமெய்யம் என்னும் திருப்பதிக்கு ஏன் அப்பெயர் வந்தது? அடியவர்கட்கு உண்மையாக நின்று அருள்புரிந்த காரணத்தினால் திருமெய்யம் என்னும் பெயர் வந்ததோ ? என்று தன் அருகில் உள்ளவரைக் கேட்கின்றாள். அதற்கு மறுமொழி கூறுவார் யாரும் இல்லாமையினாலே , பெருமூச்சு விட்டு வாளா விருக்கின்றாள். இன்னும் சில சமயங்களில் திருக்கண்ணபுரம் என்று பிதற்றிக்கொண்டு நீர்ப்பண்டம் போல் உருகுகின்றாள். உள்ளம் தளர்கின்றாள். அப்படி அவள் துன்பப்படுவதற்கு என் தீவினை தான் காரணமே தவிர வேறில்லை. இவ்வாறு பரகால நாயகியின் துயரம் இப்பாசுரத்தில் விளக்கப்படுகின்றது.

**பாசுரம் - 9.7.4**

**"பண்ணுலா மென்மொழிப் பாவைமார்**
**பணை முலை அணைதும் நாமென்று**
**எண்ணுவார் எண்ணமது ஒழித்து**
**நீ பிழைத்து உய்யக் கருதினா யேல்**
**விண்ணுளார் விண்மீது இயன்ற**
**வேங்கடத்து உள்ளார் வளங்கொள் முந்நீர்**
**வண்ணனார் வல்ல வாழ்**
**சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே !"**

நெஞ்சமே! சிற்றின்பம் தரும் பெண்களுடன் கூடி மகிழ்வதை விட்டு, நீ இப்பிறவியிலிருந்து விடுபட வேண்டுமானால் பரமபதத்திலே நித்ய சூரிகளால் தினமும் வணங்கப்படும் பரமபத நாதனையும் திருவேங்கடத்தில் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி கருணை பொழிந்து வருகின்ற திருவேங்கடவனையும் கடல் நிற வண்ணத்துடன் திருவல்ல வாழ் என்னும் திருப்பதியில் திருக்கொழுந்து நாச்சியார் உடனுறை கோலப்பிரானாக எழுந்தருளியுள்ள ஸ்ரீ மந் நாராயணனை வாழ்த்தி வழிபடுவாயாக.

பாசுரம் - 9.9.9

**"வலம்புரி யாழியனை வரையார் திரள்தோளன் தன்னை**
**புலம்புரி நூலவனைப் பொழில் வேங்கட வேதியனை**
**சிலம்பியல் ஆறுடைய திருமாலிருஞ் சோலை நின்ற**
**நலந்திகழ் நாரணனை நணுகுங்கொல் என் நன்னுதலே"**

தன்னடியார்களுக்கு ஆபத்து வந்த போது தாமதமின்றி உடனே சென்று காப்பதற்காக எப்போதும் தன் திருக்கரங்களிலே திருவாழி, திருச்சங்குகளை ஏந்தியுள்ளான் எம்பெருமான். அந்த இரு திருப்படைகள் இல்லாமலும் காத்தருளக்கூடிய மிடுக்கான தோள்களையுடையவன் திருமால். தன் திருமேனியிலே சிறந்த பூணூலை (முப்பிரிநூலை) அணிந்துள்ளான். திருமாலடியார்கள் எப்போதும் வந்து தன்னை வணங்கி வழிபட்டு வேண்டுவன பெறும்படி, மிகவும் எளியனாய் திருவேங்கட மலையில்

எழுந்தருளியுள்ளான். வைகுந்தத்துக்கு ஒப்பாகும் என்று சொல்லும் படியான திருமாலிருஞ்சோலையிலே மிகவும் தாழ்ந்தவர்க்கும் காட்சிதந்து அருள்புரியவே எழுந்தருளியுள்ளான் ஸ்ரீ மந் நாராயணன். அத்தகைய சிறப்பு வாய்ந்தவனை என் மகள் அடையப்பெறுவளோ!

இது தாய்ப்பாசுரம்

குறிப்பு 1 : திருமால் ஓங்கி உலகளந்த போது விண்ணையளக்க மேலே நோக்கி ஒரு திருவடி சத்திய லோகம் சென்ற போது, நான்முகன் அது தன் தந்தையாகிய திருமாலின் திருவடி என்று உவந்து திருமஞ்சனம் செய்தான். அந்த திருமஞ்சன நீரே திருமாலிருஞ்சோலை மலையில் சிலம்பாறாகப் பாய்கின்றது. திருமாலின் திருவடியில் விளங்கிய சிலம்பினை அலம்பி வந்ததால் சிலம்பாறு என்று பெயர் பெற்றது என்று கூறப்படுகின்றது.

குறிப்பு 2 : சிலம்பியலாறு என்ற சொல்லுக்குப் பெரியவாச்சான் பிள்ளை விளக்கம். சுவர்கத்தினின்றும் அப்சரசுகள் வந்து இவ்வாற்றில் நீராடியதால் அவர்களது குணத்தை இவ்வாறு பெற்றதால் சிலம்பாறு என்று பெயர் பெற்றது என்கின்றார்.

பாசுரம் - 10.1.2

**"பொன்னை மாமணியை அணியார்ந்த தோர்**
**மின்னை வேங்கடத்து உச்சியில் கண்டுபோய்**
**என்னை ஆளுடை ஈசனை எம்பிரான்**
**தன்னை யாம் சென்று காண்டும் தண் காவிலே"**

பொன்னிறமுடைய திருமகள் திருமாலின் திருமார்பில் வாழ்வதால் திருமகளின் திருமேனியழகு திருமாலின் திருமேனிக்கும் பொன் நிற அழகை அளித்தது. அத்தகைய பொன்மேனி அழகையும், நீல மணி போன்ற ஒளியுடைய அழகிய திருமேனியையும் உடையவன். இவ்வழகு என் உள்ளத்தைக் கவர்ந்து, என்னை அவனிடத்தில் அடிமை கொள்ளும்படிச் செய்தது. அத்தகைய எம்பிரானை யாம் நேற்று திருவேங்கடத்தில் கண்டு வணங்கி இன்று காஞ்சிபுரத்திலுள்ள திருத்தண்கா என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள, மரகதவல்லி உடனுறை விளக்கொளிப் பெருமானைக் கண்டு வணங்குவோம் என்கின்றார் ஆழ்வார்.

குறிப்பு : பாசுரத்தில் திருத்தண்காவில் என்று ஆழ்வார் பாடியுள்ளார். இச்சொல்லை திருத்தண்கா + இல் என்று பிரித்து, இ , ஈ , ஐ - வழி ய வ்வும் ஏனை உயிர்வழி வ வ்வும் என்ற உடம்படுமெய் புணர்ச்சி விதிப்படி வ் என்ற மெய்யெழுத்தைத் தோற்று விக்க வேண்டும். திருத்தண்கா + வ் + இல் என்றாயிற்று. உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே என்ற விதிப்படி வ் + இ = வி ஆகும். திருத்தண்கா + வி + ல் = திருத்ததண்காவில் எனவே பாசுரத்தில் குறித்துள்ள திருத்தண்கா காஞ்சியுள்ள திருத்தண்கா என்னும் திருப்பதியையே குறிக்கும்.

சிலர் திருத்தண்கால் என்னும் பாண்டிய நாட்டுத்திருப்பதி என்கின்றனர். அப்படி யெடுத்துக் கொண்டால் திருத்தண்கால் + இல் என்று பிரித்து,

ல்+இ=லி என்றாக்கி திருத்தண்காலில் என்று வரும். ஆனால் பாசுரத்தில் திருத்தண்காவில் என்று தான் குறிப்பிட்டுள்ளார். எனவே காஞ்சியிலுள்ள திருத்தண்கா எனும் திருப்பதி என்று பொருள் கொள்வதே பொருத்தமாகும்.

குறிப்பு 2 : நேற்று திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனைக் கண்டு, வணங்கி, இன்று திருத்தண்காவில் எழுந்தருளியுள்ள விளக்கொளிப் பெருமானை (காண்டும்) காண்போம் என்று எதிர்காலத்தில் குறிப்பிட்டுள்ளார். ஏனெனில் ஆழ்வார் காலத்தில் நடந்து சேவிக்க இயலாது என்பதால் தீர்க்கதரிசியான ஆழ்வார் எதிர்காலத்தில் கூறியுள்ளார் என்பதே பொருந்தும்.

பாசுரம் - 10.10.5

**"சொல்லாய் பைங்கிளியே ! சுடராழி வலனுயர்த்த**
**மல்லார் தோள் வடவேங்கடவனை வரச் சொல்லாய்**
**பைங்கிளியே"**

இப்பாசுரம் தலைவி கூற்றாக அமைந்துள்ளது. பரகால நாயகியாகிய திருமங்கையாழ்வார் பைங்கிளியை நோக்கி, எம்பெருமான் இங்கே வந்து சேரும்படியாகக் கூவவேண்டும், என்று வேண்டுகின்றார்.

பச்சைப் பைங்கிளியே! ஏதோ சில சொற்களைக் கூறிக்கொண்டிருப்பதால் உனக்கு என்ன பயன் கிடைக்கும். நான் எம்பெருமான் அருள் கிடைக்காமையால் உள்ளமும் உடலும் மெலிந்து

வாடிக் கிடக்கின்றேன். என் துயரத்தை கருணையுடன் நோக்கி, எனக்காக நீ அவனிடம் தூது சென்று அவனை என்னிடம் வரச்சொல். அதனால் நீ, பெரும் பேறு பெறுவாய்.

பைங்கிளி ஆழ்வாரை நோக்கி, அவனுக்கு கட்டுப்பாடுகள் மிகுதியாக இருக்க எம்பெருமான் எளிதில் இங்கு உன்னிடம் வருவானோ ? என்றது.

ஆழ்வார் கிளியை நோக்கி, கிளியே நீ அப்படி நினைக்க வேண்டா. அவன் அடியார்கள் பொருட்டு எப்படிப்பட்ட தடையையும் நீக்கிக் கொண்டு ஓடோடி வருவான். "**தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாள் ஆகிலும் சிதகுரைக்குமேல்**" என்ற பெரியாழ்வார் அருளிச் செயலுக்கிணங்க, திருமகளே தடுத்தாலும் நிற்க மாட்டான். அடியார் படுதுயரெல்லாம் நிலம் தரச் செய்வான். அடியார்கள் துயரையெல்லாம் இருதுண்டமாக்குவதால் அன்றே ஹரி என்று பெயர் பெற்றான். அடியார் துயரைத் தீர்ப்பதற் கென்றல்லவோ தனது திருக்கைகளில் எந்த நேரமும் சங்கு - சக்ராயுதங்களை ஏந்தியுள்ளான். அவ்வாயுதங்களால் நீக்க முடியாதவையானால் , தனது மிடுக்குடைய தன் திருத்தோள்களின் வலிமையால் நீக்கிடுவான் என்று உணர்வாய். என்னை வந்தடைவதற்கென்றே வைகுந்தத்திலிருந்து பயணம் செய்து, அர்ச்சை நிலையில் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளான். எனவே நீ தூது சென்று என்னிடம் அவனை வரும்படி தயவு செய்து சொல்வாயாக !

பாசுரம் - 11.3.7

**"கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கைவளைகள்**
**என்னோ கழன்ற? இவை என்ன மாயங்கள்?**
**பெண்ணானோம் பெண்மையோம் நிற்க அவன்மேய**
**அண்ணல் மலையும் அரங்கமும் பாடோமே."**

இப்பாசுரத்தில், பரகால நாயகி தனது மனத்துள்ளே எம்பெருமான் புகுந்து வாழப் பெற்றிருந்தும் மனநிறைவு அடையாமல், கண்ணால் காண முடியாமையால் வருந்துகின்றாள்.

எம்பெருமான் என்னை அணுகாமல் தூரத்தனாய் இருந்தால் அவன் மீதான தாகம் தணியாமல் உடல்மெலிந்து வருந்துவது தகும். ஆனால் அவனோ, என்னிடை வந்த எம்பெருமான் இனி எங்கு போகின்றதே என்றபடி என் உள்ளத்தினுள்ளே குடிகொண்டிருக்கின்றான். அப்படியிருந்தும் என் உடல் மெலிவதற்கும், என் கை வளையல்கள் கழல்வதற்கும் என்ன காரணமோ தெரியவில்லையே. இது ஆச்சரியப்படக் கூடிய செயலாக உள்ளதே. சங்கும் சக்கரமும் புன்முருவல் பூத்த முகமும் தொங்கும் பதக்கங்களுமாய் கண்ணெதிரே வந்தருளி காட்சி தராமல் உள்ளே உறைந்து மறைந்து கிடப்பதனால் என்ன பயன் என்று நினைக்கின்றாள் பரகால நாயகி.

பெண்குடியிலே பிறந்துள்ள நாம் வெகு அழகான பெண்மையை உடையவர்களாயிருக்கின்றோம். இது ஒரு புறம் நிற்கட்டும். எம்பெருமான் விரும்பி எழுந்தருளியுள்ள திருப்பதிகளில் சிறந்ததான கோயில், திருமலையென்னும் திருவரங்கத்தையும்

திருவேங்கடத்தையும் பாடாமல் இருக்கின்றோமே. இனியாவது பாடுவோம் என்கின்றார் ஆழ்வார்.
**பாசுரம் - 11.5.10**

**"கள்ளத்தால் மாவலியை மூவடிமண்**
**கொண்டளந்தான்**
**வெள்ளத்தான் வேங்கடத்தான் என்பரால் காணேடீ !**
**வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் கலிகன்றி**
**உள்ளத்தி னுள்ளே உளன் கண்டாய் சாழலே !"**

இப்பாசுரத்தில், ஆழ்வார் எம்பெருமானது, திருக்கல்யாண குணங்களை அழகாக அநுபவிக்கத் திருவுள்ளம் பற்றி, ஒரே காலத்திலே இரு பிராட்டியாருடைய நிலைமைகளை யடைந்து பேசுகின்றார். ஏசிப் பேசுகின்ற ஒருவரின் பாசுரத்தாலே எம்பெருமானது எளிமை குணத்தையும், போற்றிப் பேசுகின்ற மற்றவரின் பாசுரத்தாலே உயர்ந்த ஒப்பற்ற குணத்தையும் பாடி மகிழ்கின்றார்.

இப்பாசுரம் இருவர் கூறும் கூற்றாக அமைந்துள்ளது.

**ஒருவள்:** தோழி! நீ விரும்பும் எம்பெருமான் நேர்மையானவன் அல்லன் வஞ்சகன் பிரம்மச்சரிய வேடந்தாங்கி வந்து மாவலியிடம் மூன்றடி மண்வாங்கி, மூவுலகையும் அளந்து, அவனை பாதாள உலகம் அனுப்பிய நயவஞ்சகன். அதுமட்டுமல்ல, ஒருவரும் சென்று கண்டு வணங்கி வழி பட முடியாத படி எங்கேயோ திருபாற்கடலிலும், திருவேங்கடமலையிலும் இருப்பவனாகச் சொல்லுகின்றார்களே தவிர, எளியனாய் இருப்பவன் அல்லவே.

**மற்றவள் :** தோழி ! நீ அறிந்தது இவ்வளவு தானா ? திருமங்கையாழ்வாரின் திருவுள்ளத்திலே தோன்றி தினம் வசிப்பதற்கு முதல் படியாக அன்றோ அவன் திருப்பாற்கடலிலும் , திருவேங்கடமலையிலும் வசிக்கின்றான். இப்போது அத்திருப்பதிகளை விட்டு, ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே தினமும் வாழ்ந்து கொண்டிருக்கின்றான்.

இப்படி ஆழ்வார் தோழிகளின் உரையாடல் மூலம் எம்பெருமானது திருக்கல்யாண குணங்களை இனிதே நுகர்கின்றார். இதுவே மிக்க இன்பமாக இருப்பதாலே பலன் கூறாமலே இத்திருமொழியைத் தலைக்கட்டுகின்றார்.

குறிப்பு 1 : பனிக்கடலில் பள்ளி கோளை பழகவிட்டு ஓடிவந்து என்மனக்கடலில் வாழ வந்த மாய மணாள நம்பி! என்னும் பெரியாழ்வார் அருளிச் செயலுக்கிணங்க, பரமபதம், திருப்பாற்கடல், திருவரங்கம், திருமலை, பெருமாள் கோயில் (காஞ்சி) முதலான உவந்து எழுந்தருளிய திருப்பதிகளில் வாழ்வதைக் காட்டிலும், திருமாலடியார்களின் உள்ளத்தாமரையில் வாழ்வதே எம்பெருமானுக்கு மிக்க மகிழ்ச்சியாயிருக்கும் என்பதும், அதற்கு முதற்படியாக திருப்பதிகளிலே எழுந்தருளி, தக்க நேரம் பார்த்து அடியார்களின் உள்ளத்தில் சென்று குடிகொள்வான் என்று பாடும் ஆழ்வாரின் கருத்து மிக மிகச் சிறந்ததாகும்.

குறிப்பு 2 : இப்படி வினாவிடையாக எம்பெருமான் திருக்குணங்களை துய்ப்பது ஒரு சிறந்த முறையாகும்.

# திருக்குறுந்தாண்டகம்

பாசுரம் - 7

"இம்மையை மறுமை தன்னை எமக்கு வீடாகி நின்ற
மெய்ம்மையை விரிந்த சோலை வியன்திரு வரங்கம்
மேய
செம்மையைக் கருமை தன்னைத் திருமலை யொருமை
யானை
தன்மையை நினைவார் என்-தன் தலைமிசை மன்னு
வாரே".

திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானின் இயல்பை நினைப்பவர்கள் தன் தலைக்கு அணியாவர் என்கின்றார் ஆழ்வார்.

இவ்வுலகில் தருவேங்கடவனை அநுபவிக்கக் கூடிய சிறந்த அறிவையும் இன்பத்தையும் அளிப்பவன் இவனே. சரீரம் நீத்தபின் கைங்கர்யத்தைத் தருபவன். நமக்குப் பரமபதத்தை அளிக்கும் உபாயமும் இவனே.

பரந்த சோலைகள் சூழ்ந்த வியக்கத்தக்க திருவரங்கத்திலே நித்ய வாசம் செய்பவன் இவனே. ஒரு யுகத்தில் சிவந்த வடிவையுடையவன், ஒரு யுகத்தில் கறுத்த வடிவையுடையவன், திருவேங்கடத்தில் எழுந்தருளி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் வேறுபாடின்றி காட்சி தந்து அருள்புரிபவன். இத்தகைய நற்குணங்களுடைய எம்பெருமானை

நினைப்பவர்களுடைய திருவடிகளை அடியேன் தலை தாழ்த்தி வணங்குவேன் என்கின்றார் ஆழ்வார்.

கிருதயுகத்தில் பால் போன்ற நிறத்தையும், திரேதாயுகத்தில் செம்மை நிறத்தையும் துவாபரயுகத்தில் பசுமை நிறத்தையும், கலியுகத்தில் நீல நிறத்தையும் கொள்பவன் திருமால்.

## திருநெடுந் தாண்டகம் அவதாரிகை

எம்பெருமான் திருமங்கையாழ்வரை இவ்வுலகப் பற்றுகளிலிருந்து மீட்கும் வழியைத் தேடிக்கண்டார். தம் அழகைக் காட்டி மீட்க வேண்டுமென்று நினைத்து, ஒவ்வொரு திருப்பதிகளிலும் தான் எழுந்தருளியிருக்கும் அழகைக் காட்ட திருவுள்ளம் பற்றினார். திருமால், வேம்பின் புழு வேம்பின் மரத்தையன்றி வேறொன்றினை உண்ணாததைப் போல ஆழ்வாரும் எம்பெருமான் திருமேனி அழகையும், திருவடி அழகையும் அன்றி வேறு ஒன்றினை விரும்பமாட்டேன் என்னுமளவுக்கு ஆழ்வாருக்கு ஆவலைத் தூண்டினார். திருப்பதிகட்குச் சென்று எம்பெருமான்களைக் கண்டு வணங்கி, அவர்களைப் பாடிப்பரவினார்.

அப்படி ஆழ்வார் சென்று சேவித்த திருப்பதிகள் எல்லாவற்றையும் அதில் திருவேங்கடத்தையும் பற்றிப் பாடிப் பரவினார். இங்கு ஆழ்வார் பாடிய திருவேங்கடம் பற்றிய பாசுரப் பொருள்களைக் காண்போம்.

பாசுரம் - 8

"நீரகத் தாய் நெடுவரையின் உச்சி மேலாய் !
நிலாத்திங்கள் துண்டத்தாய் ! நிறைந்த கச்சி
ஊரகத்தாய் ! ஒண்துறை நீர் வெ.'கா வுள்ளாய் !
உள்ளுவா ருள்ளத்தாய் ! உலகமேத்தும்
காரகத்தாய் ! கார்வானத் துள்ளாய் ! கள்வா !
காமரு பூங் காவிரியின் தென் பால் மன்னு
பேரகத்தாய்! பேராது என்னெஞ்சினுள்ளாய் !
பெருமான் உன் திருவடியே பேணினேனே."

பரமகருணையனான எம்பெருமானே ! திருநீரகம் என்னும் திருப்பதியிலும், மண்ணுலக மக்களும் விண்ணுலகத்தோரும் கண்டு வணங்கும்படி உயர்ந்த மலை உச்சிகளை உடைய திருவேங்கடத்திலும் எழுந்தருளியுள்ளாய். மற்றும் பெருமாள் கோயில் என்னும் காஞ்சிபுரத்தில் நிலாத் திங்கள் துண்டம், திருவூரகம், திருவெ.'கா, திருக்காரகம், திருக்கார்வானம், திருக்கள்வனூர் ஆகிய திருப்பதிகளிலும், காவிரியின் தென்புறத்திலுள்ள திருப்பேர் நகரிலும், உவந்து எழுந்தருளி இருப்பதுபோல் அடியேனுடைய உள்ளத்திலும் நீங்காமல் எழுந்தருளியிருக்கின்றாய். எம்பெருமானே! உமது எளிமைதான் என்னே! அடியேன் உமது திருவடிகளையே விரும்பி நிற்கின்றேன். அருள் புரிவீராக என்று ஆழ்வார் வேண்டுகின்றார்.

பாசுரம்-9

"வங்கத்தால் மாமணிவந்துந்து முந்நீர்
மல்லையாய் மதிள்கச்சி யூராய் பேராய்
யுகாங்(கு)கத்தார் வளங்கொன்றை யலங்கல் மார்வன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய் பாற்கடலாய்! பாரின் மேலாய்!
பனிவரையி னுச்சியாய்! பவள வண்ணா!
எங்குற்றாய்! எம்பெருமான்! உன்னை நாடி
ஏழையேன் இங்கனமே உழிதருகேனே "

சிறந்த ரத்தினங்களைக் கப்பல்களில் கொண்டு வந்து குவிக்கும் கடற்கரையிலுள்ள திருக்கடல் மல்லையிலும் சிறந்த உயர்ந்த மதிள்களால் சூழப்பட்ட திருக்கச்சி மாநகரிலும், திருப்பேர் நகரத்திலும் வாழ்பவனும்; தேன் நிறைந்துள்ள கொன்றை மாலையை தரித்துள்ளவனும், பர்வத ராஜகுமாரியான பார்வதியைத் தனது இடபாகமாகக் கொண்ட சிவபெருமானுக்குத் தன் வலப் பாகத்தில் இடமளித்தவனும், திருப்பாற் கடலில் பள்ளி கொண்டிருப்பவனும், இராமகிருஷ்ணராய் மண்ணுலகில் அவதாரம் செய்தவனும், குளிர்ச்சியே வடிவான திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய எம்பெருமானே ! கண்ணனே ! மிகவும் அற்பனும் எளியவனுமாகிய அடியேனுக்கு அருள்புரிய வேண்டும் என்கின்றார் ஆழ்வார்.

பாசுரம் - 16

**"கன்று மேய்த்து இனிதுகந்த காளாய் ! என்றும்**
**கடிபொழில் சூழ் கணபுரத்து என் கனியே ! என்றும்**
**மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாய் ! என்றும்**
**வடதிருவேங் கடம்மேய மைந்தா ! என்றும்**
**வென்றசுரர் குலம்களைந்த வேந்தே ! என்றும்**
**விரிபொழில் சூழ்திருநறையூர் நின்றாய் ! என்றும்**
**துன்று குழல் கருநிறத்து என்துணையே ! என்றும்**
**துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே."**

இப்பாசுரம் தாய் கூற்றாக அமைந்ததாகும். தன் மகள் பரகால நாயகியானவள் (திருமங்கையாழ்வார்) தன் நாயகன் (திருமால்) எதிரே நிற்பதாக நினைத்து, மென்மையான கிளியைப் போல் பேசவும், நாயகனாகிய திருவேங்கடவன் மறுமொழி சொல்லாத காரணத்தால், நின்ற நிலை குலைந்து, கூப்பாடு போடத்தொடங்கினாள் - என்று அவளது திருத்தாயார் சொல்லுகின்றாள்.

என் மகளாகிய பரகால நாயகி, எம்பெருமானுடைய காருண்யமும், எளிமையும், பாசமும் பாவியாகிய தன்னிடத்தில் பலிக்கவில்லையே என்று கண்ணீருடன் கதறுகின்றாள், கன்றுகளை மேய்த்து, நீருட்டி மிகவும் மகிழ்ச்சியடைந்த இளையோனாகிய கண்ணனே ! அனைவரையும் காப்பாற்றுபவனான நீ, என்னைமட்டும் காப்பாற்றாமல் நழுவிவிட்டாயே? அந்த அந்த காலங்களில் தோன்றிய பக்தர்களையும் மக்களையும் காப்பாற்றுவதற்கு அன்றோ, நீர் திருக்கண்ணபுரத்தில் இனிய சௌரி ராஜனாக நின்ற வண்ணம் எழுந்தருளியுள்ளாய் !

பெருமாள் எழுந்தருளிப் புக்க திருவீதி போல திருவாய் பாடியில் நாற் சந்தியில் நீ கூத்தாடிய காட்சி இருந்தது.

திருவேங்கடத்திலே எழுந்தருளி, உஸ்ர்ந்தவ,ரோடும் தாழ்ந்தவரோடும் எந்த வேறுபாடும் இல்லாமல் அனைவரும் ஒருங்கேயிருந்து கண்டுகளிக்கும்படி மிகவும் அழகான உன் அழகு எளிமையாக இருந்தது. ஆனால் என் பெண்ணுக்கோ காண அரிதாகவுள்ளது. அசுரர் கூட்டத்தை வேரோடு ஒழித்த வெற்றி வீரனாய் விளங்குகின்றாய். ஆனால் அடியேன் மகளால் உம்மைக் காண இயலவில்லை.

அன்று நான் பிறந்திலேன் என்றபடி உமது அவதார காலத்தில் பிறந்து உம்மைக் காண இயலாமல் போன அடியவர்கட்கு அர்ச்சை நிலையில் காட்சி தர திருநறையூரிலே எழுந்தருளியுள்ளவனே ! பிராட்டியின் பால் உள்ள காதல் பித்தால் நீர் எழுந்தருளியுள்ள திருப்பதியை அவள் பெயரால் நாச்சியார் கோயில் என பெயர் சூட்டி மகிழ்ந்தாள். ஆனால் எனது மகளாகிய பரகால நாயகிக்கு மட்டும் அருள் புரியாது இருப்பது உன்னால் எப்படி இயலுகின்றது.

மிகவும் அடர்ந்தும் கருமையும் கொண்ட திருக்குழல் கற்றையும், காளமேகம் போன்ற வடிவையும் உடைய என் துணைவனே ! உன் மீது காதல் கொண்டு, வருந்திப் பிதற்றும் என் மகளின் அன்பை மட்டும் வெறுத்து ஒதுக்குவது உமக்கு நியாயமா? நியாயமாகாது.இப்படியெல்லாம் வருந்தி அழுது நிற்கும் என் மகளின் அமுத கண்ணீர் பெருகி, மார்பின்மீது பாய்ந்து ஓடும்படி நின்கின்றாளே! நீர் அவளுக்கு அருள் சுரந்து , அவளது அமுத கண்ணீரை , ஆனந்தக்

கண்ணீராக மாற்ற மாட்டீரோ மாற்ற வேண்டும் அதுவே உமது அருட்தன்மைக்கு அழகாகும். இவ்வாறு பரகால நாயகியின் தாய் எம்பெருமானை வேண்டுகின்றாள்.

## சிறிய திருமடல்

பாசுரம் - 69

**"காரார் திருமேனி காணுமளவும் போய்**
**சீரார் திருவேங்கடமே"**

எம்பெருமான் அருள் சுரக்க தாமதித்ததால் அவன் உருவப்படத்தைக் கையிலேந்தி, பனங்கருக்கினால் செய்யப்பட்ட குதிரை மீதமர்ந்து, என் தோழியின் துணையுடன் அவன் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகட்கெல்லாம் செல்வேன். என் நிலையைக் கண்ட மக்கள் இத்திருமால் இப்பெண்ணிற்கு (பரகாலநாயகிக்கு) அருள் சுரக்கவில்லையே, இவன் எப்படி கருணாகரன் ஆவான் என்று களங்கம் கூறுவர்.

**தோழி,பரகாலநாயகியிடம் கேட்பதும் தலைவி பதிலும்.**

**தோழி** : மடலெடுக்கப்பட்ட உன் துணிவு எதுவரையில் நிலைத்து நிற்கும்.

**தலைவி** : காரார் திருமேனி கண்டதுவே காரணமாகப் பிறந்த துணிவு, அத்திருமேனியைக் காணும் வரையில் நிலைத்து நிற்கும்.

**தோழி** : நீ அவனோடு கூடக் கடவாய்.

**தலைவி** : நான் அவனோடு கூடவேண்டுமென்னும் அவசியம் இல்லை. முன்பு அவனைக் கண்டவுடன் தான் இப்பாடு பட்டேன். இப்போதும் கண்டுவிட்டால் போதும்.

**தோழி** : நீ காணும் வழிதான் என்ன?

**தலைவி** : எம்பெருமான், ஒவ்வொரு குணத்தை ஒவ்வொரு திருப்பதிகளில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றான். அத்தகைய திருப்பதிகட்கெல்லாம் சென்று, காமத் தீயால் வெந்து கொண்டிருக்கும் என் உடம்பைக் காட்டி, அவன் குணத்தை அழிக்க முயல்வேன். இதைக் கண்டவுடன் அவன் பயந்து, தன்னுடைய அருளாளன் என்ற பெயருக்கு இவள் களங்கம் உண்டாக்குகின்றாளே என்று கதறியோடிவரச்செய்து, அவன் காட்சியைப் பெறுவேன். இனி , அவன் குணங்கள்

கொடிகட்டிப் பறந்து கொண்டிருக்கும் சீர்மை மிக்க திருவேங்கடம் செல்வேன்.

அங்கே சென்று, இத்திருவேங்கடவன் விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் ஒக்க முகங்காட்டி அருள் புரிவான் என்றனர் ஆழ்வார்கள். ஆனால் என் மீது கருணை காட்டாது என்னைப் படாத பாடு படுத்துகின்றானே ! இவன் எனக்கு முகங்காட்டின அழகைப் பார்த்தீகளா? என்று கூவிச் செல்வேன். எனவே திருவேங்கடவன் பழிக்கு அஞ்சி எனக்கு அருள் புரிவான். இதுவே நான் காணும் வழி.

இவ்வாறு ஆழ்வார் மடலூர்ந்து சென்று, எம்பெருமான் குணங்கட்கு பழியுண்டாக்கினால்,

பழிக்கு அஞ்சி அருள் புரிவான் என்று நினைத்து இம்முறையைப் பின்பற்றினார் ஆழ்வார்.

## பெரிய திருமடல்

பாடல் - 6

**"தென்னன் உயர் பொருப்பும் தெய்வ வட மலையும்"**

எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன், சூர்ய-சந்திரர்களை விளக்குகளாகக் கொண்டும், கடல்அலைகளை விசிறியாகக் கொண்டும் திருவடிகளை நீட்டி படுத்துக்கொண்டிருக்கிறான். பூமிப் பிராட்டியார் தாமரை போன்ற இத்திருவடிகளை வருடிக்கொண்டு இருக்கின்றாள். இப்பூமிப் பிராட்டிக்கு, வானத்தில் இயங்குகின்ற விண்மீன்கள் (நட்சத்திரங்கள்) மலர் மாலையாகவும், மேகங்கள் தலை முடியாகவும், தெற்கு திருமலையாகிய மதுரையை அடுத்த திருமாலிருஞ்சோலையும் - வடக்குத் திருமலையாகிய திருவேங்கடமும் இரு மார்பகங்களாகவும் விளங்குகின்றன. இத்தகைய பூமிப் பிராட்டி தன் திருவடிகளை வருட யோக நித்திரை (அறிதுயில்) கொள்கின்றான் எம்பெருமான்.

பாடல் - 124

**" மின்னி மழை தவழும் வேங்கடத்தெம்வித்தகனை "**

மாவலி சக்ரவர்த்தியிடம் மூவடி மண் வாங்க வாமனனாக அவதரித்த ஸ்ரீமந் நாராயணன் மண்ணுலக மக்கட்கு அருள் புரிவதற்காக 108 திருப்பதிகளில் எழுந்தருளியுள்ளான். கோயில்,

திருமலை, பெருமாள் கோயில் என்னும் முதல் மூன்று திருப்பதிகளுள் நடுநாயகமாக விளங்குவது திருமலையாகிய திருவேங்கடமாகும். பாவங்களைப் போக்கக் கூடியதும் மேகங்கள் மின்னித் திரிகின்ற திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவன் ஆகிய திருவேங்கடவன் அடியேனுக்குத் தலைவனாய் விளங்குகின்றான் என்கின்றார் ஆழ்வார்.

**சிறப்புப் பொருள் :** உயிரற்ற அசேதனப் பொருளான மேகமும், திருவேங்கடவன் திருக்கோயில் காப்பிட்ட பின்பும், தன்னிடமுள்ள மின்னலின் துணை கொண்டு, அம்மின்னலை ஒளிவிளக்காகக் கொண்டு, திருக்கதவின் திறவுகோல் துவாரத்தின் வழியாகத் தவழ்ந்து சென்று திருவாராதனம் செய்து, கண்டு சேவிக்கும்படியானவன் திருவேங்கடவன். ஆழ்வாரின் அனுபவம் எத்துணை நுட்பமானது என்பதை நினைக்கும் போதே எல்லையற்ற இன்பம் தோன்றுகிறது.

திருவேங்கடவன் மேகத்திற்கும் காட்சி கொடுக்கும் முறை பாராட்டுதற்குரியது.

திருமங்கையாழ்வாரின் திருவடிகளே சரணம்.

# 12. இராமாநுசரும்



# திருவேங்கடவனும்

## இராமாநுசரும் - திருவேங்கடவனும்

இராமாநுசர் திருவேங்கடத்தின்பாலும் திருவேங்கடவன் பாலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். திருவேங்கடத்தில் வேங்கடவனுக்குத் தொண்டாற்றி வந்த தன்மாமா திருமலை நம்பி என்பவருடன் ஒரு மாத காலம் தங்கி இராமாயணம் கேட்டார். அனந்தாழ்வான் என்பவரை திருமலைக்கு அனுப்பி மலர் மாலைத் தொண்டாற்றும் படிச் செய்தவர். திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராசப் பெருமாளுக்குத் திருக்கோயில் எழுப்பினார்.

திருவேங்கடவன் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு சங்கு - சக்கரங்களைக் கொடுத்து திருவாயுதம் இல்லாமல் இருந்தார். இதைக் கண்ட சைவர்கள், திருவேங்கடத்தில் முருகப் பெருமானே கோயில் கொண்டிருக்கின்றான் என்று வாதிட்டனர். சோதனை வைத்து திருவேங்கடவனுக்குச் சங்கு சக்ராயுதங்களை அணிவித்து சச்சரவை நீக்கினார். இதனால்,

**"அப்பனுக்குச் சங்காழி அளித்தபிரான் வாழியே"**
**என்று பாராட்டப்பட்டார்.**

இராமாநுசர் ஈடுபாட்டைக் கண்ட திருவரங்கத்தமுதனார் தாம் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியில் திருவேங்கடவனும் இராமாநுசரும் என்பது பற்றி ஓர் பாசுரம் பாடியுள்ளார். எனவே ஆசாரியர் பற்றியதால் இப்பாசுரம் இந்நூலில் சேர்க்கப்பட்டது.

பாசுரம் - 106

"இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை
என்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர் அவை
தன்மொடும் வந்து
இருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து
இயறு அவன் வந்து
இருப்பிடம் என்தன் இதயத்துள்ளே
தனக்கின்புறவே"

எம்பெருமான் உவந்து எழுந்தருளியுள்ள திருப்பதிகள் நூற்றுறு எட்டனுள் சிறந்தவை பரமபதமும் திருவேங்கடமும் திருமாலிருஞ்சோலை மலையும் என்று வைணவச் சான்றோர்கள் கூறுவர்.

மாயனான திருமால் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வைகுண்டம் முதலிய இடங்களோடு இராமாநுசரின் திருவுள்ளத்திலும் எழுந்தருளியுள்ளான். எனவே 108 திருப்பதிகளோடு இராமாநுசரின் திருவுள்ளமும் ஒரு திருப்பதியாகும். அத்தகைய இராமாநுசர் இன்று இன்பமாக , அடியேன் திருவுள்ளத்திலும் எழுந்தருளியுள்ளார் என்கின்றார் திருவரங்கத்தமுதனார்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம் !

## முடிவுரை

திருமாலால் மயர்வற மதி நலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் திருவேங்கடவனைப் பல பாசுரங்களில் பாடிப் பரவினர், திருவேங்கடத்தின் பெருமையையும் திருவேங்கடவனின் பெருமையையும், அவனது திருக்கல்யாண குணங்களையும் பாடி, அவனைச் சரணடைந்து, அவன் அருளைப் பெற்று மகிழ்ந்தனர்.

கலியுகத்தில் திருவேங்கடமலை ஒன்றுமே தொழ, நம் வினை ஓயும் என்றும் அவனே நமக்கு வேண்டியதையெல்லாம் அளிப்பவன் என்றும் அவனைச் சென்று வணங்கி, வழிபடுவதே எளிய முறை என்பதையும் விளக்கினர். அவனே பிறவிப்பிணியை நீக்கி, வைகுந்தப் பதவி அளிப்பவன் என்றனர். அவனை மண்ணுலக மக்கள் மட்டுமின்றி சிவன், நான்முகன் முதலான தெய்வங்களும் இந்திரன் முதலான தேவர்களும், திருமலையில் வாழும் விலங்குகளும், பறவைகளும், வண்டினங்களும் பாடிப்பரவுகின்றனர் என்பதை விளக்கியுள்ளனர். கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாகவும் எளியவனாகவும் விளங்கும் திருவேங்கடவனைப் பற்றி, நாம் உய்யலாம் என்றனர். ஆழ்வார்கள் திருவேங்கடவனைப் பாடிய பாசுரங்களுக்கான ஆழ்பொருளை, எளிய தமிழில் பாமரரும் படித்துணரும் முறையில் இந்நூலினை அடியேன் சிற்றறிவுக்கு எட்டிய வரை , ஆசாரியர்களின் விளக்கவுரைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதியுள்ளேன். அடியார்களும் பக்தர்களும்

இந்நூலினைப் படித்துணர்ந்து திருவேங்கடவன் திருவருள் அடைவார்களாக!

ஆழ்வார், எம்பெருமானார் ,ஜீயர் திருவடிகளே சரணம்.

நித்ய ஸ்ரீ நித்யமங்களம்

அடியேன்

புலவர். ஏ. பரந்தாமன்,எம்.ஏ,பி,எட் .,



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

நூலாசிரியர் வாழ்க்கை வரலாறு

வைணவமணி

புலவர். ஏ. பரந்தாமன்

காஞ்சி மாவட்டம் ஸ்ரீ பெரும்பூதூருக்கு அருகே உள்ள நரியம்பாக்கத்தில் திரு.சி. ஏழுமலை இராமாநுஜதாசர் - கோவிந்த எதிராஜவல்லிதாஸ்யைக்கும் ஸ்ரீ வைணவ மரபில் அவதரித்தவர். தமிழ்ப் புலவர், முதுகலை இலக்கியம் இளநிலை ஆசிரியப் பட்டப் படிப்பு பெற்றவர். கல்வெட்டில் வைணவம் என்ற தலைப்பில் ஆய்வு செய்து வருகின்றார். ஸ்ரீ இராமாநுஜரின் நேர்வழி ஆசாரியர் ஆசூரி வேங்கடாச்சாரி சுவாமிகள் திருவடி சம்பந்தம் பெற்று, தமது ஊரில் ஸ்ரீநிவாசப் பெருமாளுக்குத் திருக்கோயில் அமைத்தவர். திருமால் அடியார் குழாம் செயலர், ஸ்ரீ வைணவ மகா சங்கத் துணைத் தலைவர் பதவிகளைக் கொண்டு, ஸ்ரீ வைணவத் தொண்டாற்றி வருகிறார்.

இவர், 108 திருப்பதிகள் நாமாவளி, திருமால் நெறிக்கட்டுரைகள், இவர்கள் சந்தித்தால் (ஆழ்வார்களும். எம்பெருமான்களும்) திருமால் அடியார்கள் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். ஸ்ரீ வைணவச் சொற்பொழிவுகள் ஆற்றியும், ஆழ்வார்கள் பிறந்த நாட்களைக் கொண்டாடியும் , அருளிச் செயல் வீதிவலங்களை நடத்தியும் வருகிறார்.

ஆழ்வார் , எம்பெருமானார்,ஜீயர் திருவடிகளே சரணம்.